# தமிழ் இலக்கியங்களில் ஆசிரியர்களும் மாணாக்கர்களும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

கா.கோகுலன்

(பதிவு எண்: 0149)

நெறியாளர்

பேரா.முனைவர். மு.பாண்டி



தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக் கழகம்

(தேசியத்தர நிர்ணயக் குழுவின் மறுதரமதிப்பீட்டில் ‘A’ மதிப்புப் பெற்றது)

காரைக்குடி – 630 003

இந்தியா

செப்டம்பர் - 2013

**பேரா.முனைவர் மு.பாண்டி**
*பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள்:*

## நெறியாளர் சான்றிதழ்

'**தமிழ் இலக்கியங்களில் ஆசிரியர்களும் மாணாக்கர்களும்**' என்னும் தலைப்பில் ஆய்வாளர் திரு.கா.கோகுலன் அவர்களால் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்வுக்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(பேரா.முனைவர்.**மு.பாண்டி**)
**நெறியாளர்**

**கா.கோகுலன்,**
*பதிவு எண்:0149,*
*முனைவர்பட்ட ஆய்வாளர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி – 630 003.*

*நாள்:*

## ஆய்வாளர் உறுதிமொழி

‘**தமிழ் இலக்கியங்களில் ஆசிரியர்களும் மாணாக்கர்களும்**’ என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இவ்ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(கா.கோகுலன்)**
**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**
*பேரா.முனைவர்* **மு.பாண்டி,**
*தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி–630 003.*

# நன்றியுரை

முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய காரைக்குடி, அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்வு மேற்கொள்ள ஊக்கமளித்து அவ்வப்போது தகுந்த முறையில் ஆலோசனை வழங்கி ஆய்வுத் தொடர்பான நூல்களைத்தந்து என்னை வழிநடத்திச் சென்ற எனது நெறியாளர், தமிழ்த்துறைத்தலைவர், பேரா.முனைவர் மு.பாண்டி அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுத் தொடர்பான தகவல்களை வழங்கிய தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் மு.நடேசன் அவர்களுக்கும் ஏனைய துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இளங்கலை பயின்ற காலம் முதல் மேன்மேலும் பயில வேண்டும் என்று ஆக்கமும் ஊக்கமும் தந்து தங்களது நல்லாசிகளையும் வழங்கிய இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்கள் பேரா.முனைவர் நா.வள்ளி அவர்களுக்கும், பேரா.முனைவர்.நா.சுப்பிரமணியன் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை முனைவர் பட்டம் வரைப் பயில வைத்த என் தாய் தந்தையர் கார்மேகம் – வள்ளி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தமிழ்த்துறை மூத்த ஆய்வாளர்களாக இருந்து ஆய்வுத் தொடர்பான கருத்துக்களையும், ஆலோசனைகளையும் வழங்கிய முனைவர் அ.சங்கரதாஸ், முனைவர் ஆறு.முத்துக்கருப்பன், முனைவர் அ.இராஜசேகர்,

முனைவர் மு.முனீஸ்மூர்த்தி, முனைவர் ம.மணிகண்டன் ஆகியோர்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு செய்கின்ற காலத்தில் என்னுடன் ஆய்வு மேற்கொண்ட ஆய்வாளர்கள் தங்களது பணிகளுக்கு இடையில் என் ஆய்வுத் தொடர்பான நூல்களைத் தந்து, அவ்வப்போது உதவிகள் பல செய்து ஆய்விற்கு உறுதுணையாக நின்ற கோ.அழகுராஜா, மு.தெய்வேந்திரன், க.கனகலட்சுமி, பா.கிருஷ்ணமூர்த்தி, ஷ.பீமாபரீதா ஆகியோருக்கும், ஏனைய சக ஆய்வாளர்களான சோ.பிரேமா, த.புனிதவதி, மா.ரெத்தினேஸ்வரி, க.சித்ரா ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தென்னிந்திய மொழிகள் மையம் நூலகத்தில் ஆய்வுத் தொடர்பான நூல்களைத் தேடி அவற்றைப் படி எடுத்துத்தந்து உதவி செய்த என் மனைவி புவனேஸ்வரிக்கும், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தில் உள்ள நூல்களைப் படி எடுத்துத்தந்த ஆய்வாளர்கள் சத்தியராஜ், குமார் ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுக் காலங்களில் அவ்வப்போது உதவியாக இருந்த முனைவர்பட்ட ஆய்வாளர்கள் இராஜேந்திரன், ம.மார்ஷல் ஆகியோருக்கும், ஆய்வியல் நிறைஞர், முதுகலை மாணாக்கர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டை உரிய காலத்தில் கணினியில் தட்டச்சு செய்து தந்த அருண் கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தார் சாந்தி பாண்டியன் அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நன்றியுடன்

**கா.கோகுலன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அதி. | – | அதிகாரம் |
| அறநெறி. | – | அறநெறிச்சாரம் |
| ஆசாரக். | – | ஆசாரக்கோவை |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| கலி. | – | கலித்தொகை |
| குறள் | – | திருக்குறள் |
| குறுந். | – | குறுந்தொகை |
| கொன்றை. | – | கொன்றைவேந்தன் |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறு. | – | சிறுபஞ்சமூலம் |
| சீவக. | – | சீவகசிந்தாமணி |
| திரி. | – | திரிகடுகம் |
| திரு.வா. | – | திருவாசகம் |
| திரு.வி.புராணம் | – | திருவிளையாடல் புராணம் |
| தொல் | – | தொல்காப்பியம் |
| தொல்.பொது. | – | தொல்காப்பியம் பொதுப்பாயிரம் |
| தொல்.எழுத்து | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல்.சொல் | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல்.பொருள்.அகம். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் |
| தொல்.பொருள்.செய். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் |

| | | |
|---|---|---|
| தொ.பொ.இ.உ. | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரை |
| நன்.எழுத்து. | – | நன்னூல் எழுத்ததிகாரம் |
| நான்மணி. | – | நான்மணிக்கடிகை |
| நாலடி. | – | நாலடியார் |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பரி. | – | பரிபாடல் |
| பட். | – | பட்டினப்பாலை |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பா. | – | பாடல் |
| புறம். | – | புறநானூறு |
| பொது. | – | பொதுப்பாயிரம் |
| பொருள் | – | பொருளதிகாரம் |
| மது. | – | மதுரைக்காஞ்சி |
| மணி. | – | மணிமேகலை |
| மு.ப. | – | முதற்பகுதி |
| முதுமொழி | – | முதுமொழிக்காஞ்சி |
| மொ.பெ.ஆ. | – | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| விவேக. | – | விவேகசிந்தாமணி |
| வெற்றி. | – | வெற்றிவேற்கை |

## பொருளடக்கம்

# முன்னுரை

மனிதனை ஒரு சமூக விலங்கு என்பர். சமூகத்தில் அவன் தனித்து வாழ்தல் இயலாத ஒன்று. உறவுகள், நட்புகள், சுற்றங்களால் சூழப்பட்டவன். நாடோடியாய்த் திரிந்த காலந்தொட்டு இன்றுவரை பல்வேறு பரிணாம வளர்ச்சி பெற்று வந்துள்ளான். அவ்வாறே மனிதனது சிந்தனையில் வளர்ந்த கல்வியும் நாளுக்கு நாள் புதுப்புது வளர்ச்சி நிலைகளைக் கண்டு வருகின்றது. ஒருவரது அறிவும் அனுபவமும் மற்றவர்களுக்குக் கற்றுத் தரப்படும் பொழுது கற்றல், கற்பித்தல் செயல்பாடுகள் நடைபெறுகின்றன. அவ்வாறு தங்களது அறிவாற்றலையும், அனுபவங்களையும் கற்றுத்தந்தவர் ஆசிரியர் என்றும், கற்பவர் மாணவர் என்றும் அழைக்கப்பட்டனர். ஆரம்பக்காலக் கல்வி வாய்மொழி வழியாகவே கற்பிக்கப்பட்டு வந்தது. இதனைச் செவிவழிக்கல்வி அல்லது வாய்மொழிக்கல்வி என்பர். பின்னர் ஏடுகளும், எழுத்தாணிகளும் கொண்டு கற்பிக்கப்பட்டன. நாளடைவில் அறிவியல் வளர்ச்சிபெற காகிதங்களும், அச்சு எந்திரங்களும் கண்டு பிடிக்கப்பட்டன. கல்வித்துறையில் மாற்றங்கள் நிகழ்ந்தன. பண்டைக்காலக் கல்விமுறைக்கும் இக்காலக் கல்விமுறைக்கும் நிறைய வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. அதனைப் போன்றே ஆசிரியர் மாணவர் உறவுகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

தமிழகத்தில் நிகழ்ந்த ஆட்சி மாற்றங்களும் படையெடுப்புகளும் கல்விமுறையில் தாக்கத்தை ஏற்படுத்தின. இதனால் ஆசிரியர், மாணவர் உறவுகள் பெருமளவில் மாற்றம் பெற்றன. பழையமுறைக் கல்வியில் ஆசிரியர் உயர்ந்த மதிப்பைப் பெற்று விளங்கினார். கல்வி கற்க ஆசிரியரை வழிபட வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டிருந்தது. கட்டாயமாக்கப் பட்டிருந்த போதிலும் அவற்றை மாணவர்கள் விருப்பமுடன் செய்து வந்தனர். இந்நிலை தொல்காப்பியர் காலம் முதல் அண்மைக்காலம் வரை சிறப்பாக நிகழ்ந்துள்ளது.

கல்வி வணிகமயமாதலுக்குப் பின்னர் சிறுசிறு மாறுதல்கள் ஏற்பட்டு நாளடைவில் ஆசிரியர் மாணவர் உறவு கடைமையை நிறைவேற்றுவது என்ற நிலைக்கு மாற்றமடைந்துள்ளது. இத்தகைய சமூக வரலாற்றுப் பின்புலம் கொண்ட ஆசிரியர் மாணவர் உறவுநிலை சங்ககாலம் முதல் தற்காலம் வரை இலக்கிய, இலக்கணங்கள் வழி எத்தகைய பதிவுகளைக் கொண்டுள்ளன என்பதைக் கண்டறியும் முகமாக இவ்வாய்வு அமைகின்றது.

### ஆய்வுத் தலைப்பு

ஆசிரியர், மாணவர் தொடர்புகள் இலக்கணங்களினின்றும் இலக்கியங்களில் மிகுதியாக இடம்பெற்றிருப்பதால் **'தமிழ் இலக்கியங்களில் ஆசிரியர்களும் மாணாக்கர்களும்'** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும். இத்தொடர்புகள் இலக்கணங்களில் இடம்பெற்றுள்ளமையும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

### ஆய்வு நோக்கம்

ஆசிரியர் மாணவர் உறவு காலந்தோறும் அவ்வவ்காலச் சமூகச் சூழல்களில் நிலவியமையைத் தமிழ் இலக்கிய, இலக்கணங்கள் வழிக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வு எல்லை

ஆசிரியர், மாணவர்களுக்குரிய இலக்கணங்களையும், ஆசிரியர், மாணவர் பற்றிய பதிவுகளையும் எடுத்துக்கூறும் முகமாகத் தொல்காப்பியம், இறையனார் களவியல், நன்னூல் போன்ற இலக்கண நூல்களும், ஆசிரியர், மாணவர் பற்றிய குறிப்புகளை எடுத்துக் காட்டியுள்ள சங்க இலக்கியங்கள், பதிணென் கீழ்க்கணக்கு நூல்கள், பிற்கால நீதிநூல்கள், சிற்றிலக்கியங்கள் மற்றும் தற்காலப் படைப்புகள் ஆகியன ஆய்வு எல்லைகளாக அமைகின்றன.

## கருதுகோள்

தொழில்கள், அரசியல், பொருளாதாரம், சாதி, மதம், ஊடகங்கள், கல்வி ஆகியன காலந்தோறும் சமூக உறவுகளைத் தீர்மானிக்கும் காரணிகளாக அமைகின்றன. மரபுத் தொடர்ச்சியும் பாரம்பரியமும் கொண்ட தமிழ்ப் பண்பாட்டுச் சூழலில் பிறமொழி, பண்பாட்டுப் படையெடுப்புகள், ஆசிரியர், மாணவர் உறவில் பல்வேறு தாக்குரவுகளும் மாற்றங்களும் நிகழ்த்தியிருக்கக் கூடும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

ஆசிரியர், மாணவர் பதிவுகளைக் கொண்ட இலக்கிய, இலக்கணங்கள் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக இடம்பெற்றுள்ளன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

ஆய்வுப் பொருள் தொடர்பாக இதுகாறும் வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் முதலானவை இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

ஆசிரியர், மாணவர் உறவு, இவர்களின் இலக்கண வரையறை போன்றவற்றை விளக்க 'விளக்கவியல்' அணுகுமுறையும் (Discriptive approach), இவ்வுறவுகளைக் காலந்தோறும் கண்டறிய வரலாற்றுமுறை அணுகுமுறையும் (Historical approach), ஆசிரியர், மாணவர் உறவைத் தீர்மானிக்கும் சமூகக்காரணிகளைக் காண சமுதாயவியல் அணுகுமுறையும் (Sociological approach) இவ்வாய்வில் பின்பற்றப்பட்டுள்ளன.

**இயல் பகுப்புகள்**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் மூன்று இயல்களைக் கொண்டுள்ளது. அவை,

1. ஆசிரியர் மாணவர் இலக்கண வரையறை
2. காலந்தோறும் ஆசிரியர் மாணவர் உறவுநிலைகள்
3. சமுதாய மாற்றங்களும் ஆசிரியர் மாணவர் உறவும்.

**ஆய்வு அறிமுகம்**

ஆய்வு அறிமுகத்தில் ஆய்வு முன்னுரை, தலைப்பு, நோக்கம், எல்லை, சான்றாதாரங்கள், கருதுகோள், அணுகுமுறைகள், இயல்பகுப்பு முதலானவை விளக்கப்பெற்றுள்ளன.

**இயல் ஒன்று**

**'ஆசிரியர் மாணவர் இலக்கண வரையறை'** என்னும் முதல் இயலினுள் ஆசிரியர் என்ற சொல்லுக்குக் குற்றங்களை நீக்குபவர் என்றும் மாணாக்கன் என்ற சொல்லுக்கு மாண்பினைத் தன் கண் ஆக்கிக் கொள்பவன் என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. கல்வி கற்றுத்தந்த ஆசிரியர்கள், கணக்காயர்கள், உபாத்தியாயர்கள், குரு, குலபதிகள், வித்துவான், மகாவித்துவான், கவிராயர், ஆசான், குரவன் என அழைக்கப்பட்டனர். கணக்காயர் என்பவர் ஆரம்பக் கல்வியினை மாணக்கர்களுக்கு எழுதவும், படிக்கவும் கற்றுத்தருவார். இந்தக் காலகட்டங்களில் மாணாக்கர்கள் நீதிநூல்களையும், இலக்கணச் சூத்திரங்களையும் பொருள் அறியாமல் கற்றுக் கொள்வர். அதன் பிறகு புலவர்களிடத்தில் சென்று இலக்கிய இலக்கணங்களுக்குப் பொருள் உணர்ந்து கொள்வர்.

கற்றல், கற்பித்தல் செயல்பாடுகள் நடைபெறும் இடம் பள்ளிகள் என அழைக்கப்படுகின்றன. ஆரம்ப காலத்தில் பள்ளி என்றால் ‘இடம்’ என்றும், ‘படுக்கை அறை’ என்ற பொருளில் வழங்கியுள்ளது. பிறகு சங்கமருவிய காலத்தில் பள்ளி எனும் சொல் மாணாக்கர் பயிலும் இடத்தைக் குறிப்பதாகத் திரிகடுகம் குறிப்பிட்டுள்ளது. ஆசிரியரின் இல்லம் பள்ளியாகச் செயல்பட்டது. தொல்காப்பியர் ஆசிரியர் மாணவர்களுக்குரிய வரையறையை,

**“ஈவோன் தன்மை யீத லியற்கை**
**கொள்வோன் தன்மை கோடன மரபென**
**ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே”**

என்ற நூற்பாவின் வாயிலாக எடுத்துரைத்துள்ளார். இச்சூத்திரத்திற்கு விளக்கம் கூறுகின்ற இளம்பூரணர், நச்சினார்க்கினியர். ஆசிரியர், மாணாக்கர்க்குரிய தகுதிகள் என்னென்ன ஆசிரியர் பாடம் கூறும்முறைகள், மாணாக்கர் பாடம் கேட்கும்முறைகள், ஆசிரியரல்லாதோர் யார்? மாணாக்கரல்லாதோர் யார்? என்பனவற்றை விரிவாகக் கூறுகின்றனர். இவர்களைத் தொடர்ந்து பவணந்தியார் உரையாசிரியர்கள் கூறியக் கருத்தோடு தனது கருத்துக்களையும் ஆசிரியர் மாணவர் இலக்கணங்களாகத் தந்துள்ளார். நல்லாசிரியர், நன் மாணாக்கர்க்குரிய குணங்கள், ஆசிரியர், மாணாக்கரல்லாதோர்க்கான குணவியல்புகள் ஆகியவைகள் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் இரண்டு**

**‘காலம்தோறும் ஆசிரியர் மாணவர் உறவுநிலைகள்’** எனும் இரண்டாம் இயலில் சங்ககாலம் தொடங்கி இக்காலம் வரை ஆசிரியர் மாணவர் உறவுநிலை எவ்வாறு இருந்தது என்பது பற்றி ஆராயப்பட்டுள்ளது. இலக்கணங்களைவிட இலக்கியங்கள் அந்தந்தக் காலச் சூழ்நிலைகளைத் தெளிவாக எடுத்துக்காட்டவல்லவை. ஏனெனில் இலக்கியங்கள்

அவ்வவ்காலத்தின் பிரதிகள். ஒரு புலவன் தன் நிலைகளுக்கேற்ப உள்ளத்தில் தோன்றிய உணர்வுகளை இலக்கியமாக வெளிக்கொணர்கின்றான். ஒழுக்கம் என்பது ஆசிரியர், மாணவர் இருவருக்கும் பொதுவாக வைக்கப்பட்டுள்ளது. ஆசிரியர்களில் பலர் தாங்கள் செய்தப் பணிக்காக ஊதியம் பெறமுடியாமல் தவித்திருப்பது சங்ககாலம் தொடங்கி 18 ஆம் நூற்றாண்டு வரை நிகழ்ந்துள்ளமை புலப்படுகின்றது. நல்ல அறிவாற்றலும் ஆழ்ந்த புலமையும் பெற்றவராக ஆசிரியர் இருத்தல் வேண்டும். ஆசிரியர் இல்லாமலும் கல்வி கற்று வந்துள்ளனர். ஆசிரியர்கள் தந்தையாகவும், மன்னனைவிட உயர்ந்த இடத்திலும் வைத்து மதிக்கப்பட்டனர். கற்பித்தலுக்கு அடிப்படை அன்பு, மாணாக்கரிடத்தில் அன்பு செலுத்திக் கற்பித்தல் வேண்டும். ஆசிரியரிடம் கீழ்ப்படிந்து கற்பவனே மாணாக்கன். ஆசிரிய வழிபாட்டில் தயக்கம் காட்டுபவன் கல்வியைப் பெறமுடியாது ஆகியன இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

**'சமுதாய மாற்றங்களும், ஆசிரியர் மாணவர் உறவும்'** எனும் மூன்றாமியலில் ஆசிரியர் மாணவர் உறவில் ஏற்பட்ட மாற்றத்திற்கானக் காரணங்களைச் சமுதாயக் கண்ணோட்டத்துடன் அணுகி; இம்மாற்றத்திற்கானத் தாக்குரவுகள் பற்றியும் விரிவாகக் கண்டறியப்பட்டுள்ளது. குருகுலக் கல்விமுறை தமிழ்க் கல்வி அமைப்புமுறையில் காணப்படாத ஒன்று. பிராமணர்களின் வருகையும் மன்னர்களின் ஆதரவால் அவர்களது ஆதிக்கமும் மேலோங்கிய நிலையில் திண்ணைப் பள்ளிக் கூடங்களும் குருகுலம் என்று அழைக்கப்பட்டன. ஆசிரியரைக் குரு என்று அழைக்கும் முறை உருவாயிற்று. தொல்காப்பியர் காலத்தில் நன்கு வெளிப்படுகிற ஆசிரியர், மாணவர் உறவு உரையாசிரியர் காலகட்டங்களில் மாற்றம் பெறத் தொடங்கின. சிலர் மாணாக்கருக்குரியத் தகுதிகள் இல்லாத போதும் மாணாக்கர்களாக இருந்துள்ளனர். இத்தகை மாணாக்கர்களின் குற்றங்களைப் பொறுக்காத

ஆசிரியர்கள் தங்கள் பொறுமைக்குணத்தை இழந்துள்ளனர். மிகுதியாகப் பொருளைக் கொடுப்பவனுக்குக் கற்றுக் கொடுக்கலாம் என சில உரையாசிரியர்களும், பவணந்தியாரும் குறிப்பிட்டுள்ளனர். இதன் விளைவாக மாணாக்கராகாதோரும் பொருள் கொடுத்துக் கற்க முன்வந்துள்ளனர். மாணாக்கரிடமிருந்து மிகுதியாகப் பொருள் பெறுகின்றோம். அவர்களைத் தண்டனைக்குள்ளாக்கி அதனை ஏன் இழக்க வேண்டும் என்று பேராசை கொண்ட ஆசிரியர்களால் இவ்வுறவு முதலில் பாதிக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர்களின் பணத்தாசைக்குக் காரணம் அவர்கள் தங்களது ஊதியத்தை இழந்தமையும், பொருள்களின் தேவைகளுமாகும். ஆசிரியர் இல்லாமல் கல்வி கற்றதும் முக்கியக் காரணமாகும். நல்லொழுக்கமில்லாத ஆசிரியர்கள் ஆசிரியர், மாணவர் உறவுகளின் மாற்றங்களுக்குக் காரணமாயினர். பிராமணக் கல்விமுறை தமிழகத்தில் புகுந்து பல மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. அவற்றில் ஒன்று சாதிப்பாகுபாடு. தீண்டாமை தலைவிரித்தாடுகின்ற பொழுது கற்றவரை மதித்தல் வேண்டும் என புலவர்கள் எடுத்துரைத்த போதிலும் அவை முழுமையாக மாறியிருக்கவில்லை. ஆசிரியரின் மதிப்பு இறங்கி வழிபட்டுக் கற்றல் என்ற நிலை மாற்றம் பெற்றுள்ளது.

ஆசிரியர் மாணவர் இருவரும் தங்களது பொறுப்புகளை உணர்ந்து நடந்து கொண்டால் தவறுகள் களையப்படும். மன்னர்கள் புலவர்களை மதித்துப் போற்றியது போல திறமையான ஆசிரியர்களை உருவாக்கும் பொறுப்புச் சமூகத்திற்குண்டு. ஆசிரியர்களின் ஊதியப் பிரச்சனை, கல்விமுறை, உலகமயமாதல், வணிகமயமாதல், மேல்நாட்டு கல்வியின் தாக்கங்களால் விளைந்த மாற்றங்களைச் சமூகம் சரிசெய்ய இயலும். திறமையான ஆசிரியர்களை உருவாக்குவதும் நேர்மையான முறையில் அவர்களைப் பணியமர்த்துவதும் மக்கள் மற்றும் நிருவாகத்தின் பொறுப்பாகும். இவற்றில் தவறுகள் நடக்கும் பொழுது ஆசிரியர், மாணவர் உறவில் எதிர்மறை

மாற்றங்கள் நிகழ்கின்றன. எதிர்காலச் சமுதாயத்தை உருவாக்கும் ஆசிரியர்கள் உன்னதமானவர்களாக இருந்தால் தான் எதிர்காலம் சிறப்பாக அமையும் என்பன இவ்வியலில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

**முடிவுரை**

தமிழ் இலக்கியங்களில் ஆசிரியர்களும் மாணக்கர்களும் என்னும் இந்த ஆய்வில் கண்டறியப்பட்ட சாரங்கள் தொகுக்கப்பெற்று ஆய்வு முடிவுகளாக கொடுக்கப்பெற்றுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

முடிவுரையை அடுத்து ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் மற்றும் பிற சான்றுகள் துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படி சுட்டப்பெற்றுள்ளன.

**பின்னிணைப்பு**

ஆய்வுப் பொருளைத் தெளிவாகச் சுட்டும் நிலையில் இலக்கணங்கள், இலக்கியங்களில் காலந்தோறும் ஆசிரியர் மாணவர், தொடர்புகள் பட்டியலிடப்பட்டுள்ளன.

## இயல் ஒன்று

## ஆசிரியர் மாணவர் இலக்கண வரையறை

### முன்னுரை

இந்திய நாட்டில் கல்வியின் வரலாறு வேதகாலத்திலிருந்தே தொடங்குகிறது. வேதகாலக் கல்வி முறையை 'பிராமணக் கல்விமுறை' என்றும் 'குருகுலக் கல்விமுறை' என்றும் கூறுவர். தமிழகக் கல்விமுறை திண்ணைப் பள்ளிக்கூடத்திலிருந்து தொடங்குகின்றது. கற்பிப்பவர் கணக்காயர், ஆசான், உவாத்தி, ஆசிரியர் என்று அழைக்கப்பட்டனர். திண்ணைப் பள்ளிக்கூடத்தில் கணக்கும் இலக்கணமும் கற்பிக்கப்பட்டன.

***"ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன"[1]***

***(தொல்.பொருள்.அக்.28)***

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. கல்வி வாய்ப்பு நால்வகை வருணத்தில் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிய என்பது இளம்பூரணர் உரை.

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, சிற்றிலக்கியங்கள், காப்பியங்கள், இலக்கண நூல்கள், தற்கால இலக்கியங்கள் மூலமும் அவ்வவ்காலக் கல்விமுறையை நன்கு அறியமுடிகின்றது. தொடக்கக் காலத்திலிருந்து ஆங்கிலேயர் வருகை வரைக் கல்வி வாய்மொழியாகக் கற்பிக்கப்பெற்றது என்பதையும் அறிகின்றோம்.

பூமி தோன்றி பல லட்சம் ஆண்டுகட்குப் பின்னரே பூமியில் பல்வேறு உயிரினத் தொகுதிகள் தோன்றின. முதலில் தோன்றிய மிக நுண்ணுயிரினங்கள் பரிணாம வளர்ச்சிபெற்று இறுதியில் மனிதன் தோன்றினான். மனிதனின் தோற்றம் ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது எனக் கருதப்படுகின்றது. இதனை,

***"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்***
***பல்லிருதமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்***
***கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்ச்***
***செல்லாஅ நின்ற இத்தாவரச் சங்கமத்துள்***
***எல்லாப் பிறப்பும் பிறந்தி ளைத்தேன்"[1]***

***(திரு.வா.–சிவபுராணம்.26–31)***

*என்று மாணிக்கவாசகர் மாந்தரினம் தோன்றுவதற்கு முன்னர் பல நிலைகளில் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளதைத் திருவாசகத்தின் வழி எடுத்துரைக்கின்றார். தொல்காப்பியர் உயிரிப்பாகுபாட்டினை*

***"ஒன்றறி வதுவே உற்று அறிவதுவே***
***இரண்டறிவதுவே அதனொடு நாவே***
***மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே***
***நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே***
***ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே***
***ஆறறி வதுவே அவற்றொடு மனனே***
***நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே"[2]***

***(தொல்.பொருள்.1526)***

*என்ற நூற்பாவழி எடுத்துரைக்கின்றார்.*

*மனிதனின் கல்வியும் கால நிலைகளில் பரிணாம வளர்ச்சிபெற்று வந்துள்ளது. "உணர்வுகளின் வழியே மனிதன் தனது கற்றலை அறிகின்றான். நெருப்பின் பயனை உணரத் தலைப்பட்ட மனிதன் சமைத்து உண்ணும் அறிவினைப் பெற்றான். நாடோடியாகத் திரிந்த மனிதன் நீர்நிலைகளைப் பயன்படுத்தி அவற்றின் கரைகளிலே நிலையான வாழ்வை மேற்கொண்டான். விலங்குகளைப் பழக்கிக் கொண்டு விவசாயம் கற்றான் உழவனானான். பின்பு நாடுகளும், நகரங்களும், இராஜ்ஜியங்களும் ஏற்பட்டன."[3] என்று கந்தசாமிப்பிள்ளை தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.*

**மொழியின் தேவை**

வேட்டைச் சமூகத்தில் மனிதர்கள் தங்களுக்குள் ஒலிக்குறிப்புகள் வழியே தொடர்பு கொண்டுள்ளனர். “தொடக்கக்கால மாந்தன் காட்டு மிராட்டியாய்த் திரிந்த நிலையில், விலங்குகள் தாக்கிய நிலையில் ஒலியை எழுப்பியிருக்கக்கூடும் மாந்தன் முதலில் எழுப்பிய ஒலிகள் அவன் கருத்தைத் தெரிவிக்க அல்ல. தாக்குதலில் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள மற்றவர்களின் துணையை நாடினான். நாடியநிலையில் கூடிவாழத் தலைப்பட்டான் கூடிவாழத் தலைப்பட்ட பொழுது ஒருவர் கருத்தை மற்றொருவர் புரிந்துகொள்ள மொழியின் தேவை அவர்களுக்கு இன்றியமையாது வேண்டடப்படுகிறது”[4] என்று மு.கோவிந்தராசன் குறிப்பிடுகின்றார்.

மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த காலத்தில் தனது முதற்கல்வியை இயற்கையிடமிருந்து கற்றுள்ளான். எனவே தொடக்ககால மனிதனின் முதல் ஆசிரியர் இயற்கை என்று கூறுவதற்கிடமுண்டு. நாம் ஒன்றைப் பார்த்தும், கேட்டும், படித்தும் கற்றுக் கொள்கிறோம். இதில் பார்த்துக் கற்றுக் கொள்வதற்கு மொழியறிவு அவ்வளவாகத் தேவையில்லை. பார்த்தும் கேட்டும் அறிவைப் பெறுகின்றவர்கள் கூடவே படித்தும் அறிவைப் பெறுகின்ற நிலையை எய்துகின்றபோது விரைந்த நிலையில் நிறைந்த அறிவைப்பெற வாய்ப்புக்கிட்டுகின்றது.

நாகரிகம் வளர்ச்சி பெற்ற நிலையில் ஒலியின் அவசியத்தையும் மொழியின் அவசியத்தையும் உணர்கின்றான்; மொழி பிறக்கின்றது. மொழியின் வளர்ச்சியால் அதற்கு வரிவடிவம் தேவைப்படுகிறது. எழுத்துக்கள் பிறக்கின்றன. கல்வியை ஒலி வரி வடிவக் கல்வியைப் பெறுவதற்கு முன்பு தான் கற்றுக் கொண்ட அறிவுப் பயனை அடுத்துவரும் தன் குடும்பத்தார்க்கும், தன் கூட்டத்தார்க்கும், தன் இனத்தார்க்கும் பயன்பெற

திரும்பத் திரும்பச் சொல்லி அவர்கள் மனங்களில் படியச் செய்தனர். ஏடும் எழுத்தாணியும் இல்லாத காலத்தில் ஒருவன் தன் முன்னோர் வாய்ச் சொல்லைக் கேட்டு மனத்தில் படிய வைத்து வளர்த்த கல்வி பிற்காலத்தில் மந்திரம் என மாறி வழங்கப்பெற்றுள்ளது. நிறைந்த மொழியையுடைய மனிதன் தமதாணையாற் சொல்லப்பெற்ற மறைந்த சொல் மந்திரம் என்கிறார் தொல்காப்பியர். இதனை,

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்**
**மறைமொழி தானே மந்திரம் என்ப"[5]**

**(தொ.பொ.இ.உ.480)**

என்ற நூற்பா மூலம் அறியமுடிகின்றது.

ஒரு தலைமுறையினர் தம் வாழ்க்கைக்கு வசதியாகப் பார்த்தும் கேட்டும் கற்றுக் கொண்டதை; அடுத்த தலைமுறையும் எளிதாகக் கற்றுக் கொள்வதற்கு உதவியாக அமைந்தது மொழிக்கல்வி, ஒரு நிலையான வரிவடிவமும் ஒலி வடிவமும் கொண்டு நெஞ்சில் படிய, வாயால் படித்துக் கற்கும் கல்வியைப் படிப்புக் கல்வி எனலாம். ஏடும் எழுத்தாணியும் இல்லாக் காலத்தில் மனிதன் வாய்மொழியாகவே கற்றுக் கொண்டான். அதனால் தான் அக்காலத்தில் கற்றவர்கள் சிலராகவும் கல்லாதவர் பலராகவும் இருந்தனர். இன்று இருப்பதைப் போன்று அதிக அளவில் பள்ளிகளோ, கல்லூரிகளோ அன்று இருந்ததில்லை. கற்றவர்களை நாடிச்சென்று அவர்கள் சொல்லும் பாடத்தைக் கற்றுக்கொள்ள வேண்டிய நிலை இருந்தது.

**ஏடும் எழுத்தாணியும்**

ஏடுகளும் எழுத்தாணிகளும் பயன்படுத்தியதை முத்தொள்ளாயிரத்தில்,

***“மருப்பூசியாக மறங்கனல்வேல் மன்னர்***
***உருத்தரு மார்போ லையாகத் திருத்தக்க***
***வையக மெல்லா மெமதென்று எழுதுமே***
***மொய்யி லைவெல் மாறன் களிறு”[6]***

***(முத்தொள்ளாயிரம்.14)***

எனும் பாடலடிகள் மூலம் நாம் அறியமுடிகின்றது. சீவகசிந்தாமணியில்,

***“ஆய்களிற்ற சனிவேகமதன் மருப்பூசியாகச்***
***சீவகனகன்ற மார்ப மோலையாத் திசைகள் கேட்பக்***
***காய்ப்பவன் கள்வரென்ன வெழுதுளித் திடுவலின்னே”[7]***

***(சீவக.1121:1–3)***

என்ற பாடலடிகளும் இதனை உணர்த்துகின்றன.

***“தாளிப் பனையோலை வாரித் தலைசேர்த்து***
***வெள்ளைப் பனையோலை விளிம்பிரண்டுத் தான்வீசி***
***பக்கமுஞ் சீர்வாரி பவளஞ்சீர் ஒப்பமிட்டு***
***செம்பொன் னெழுத்தாணி தேர்விசையர் கைபிடித்து***
***என்னவென்று சொல்லி எழுத வென்றோ லையிலே”[8]***

***(தனிப்பாடல் திரட்டு.62:3)***

என்ற தனிப்பாடல் திரட்டு ஏடும் எழுத்தாணியும் பயன்படுத்திய முறையை நன்கு எடுத்துரைக்கின்றது.

மாணவர்கள் மணலிலும், நெல்லிலும் எழுதிப் பழகினர். தரையில் எழுதும் பழக்கத்தைக் கெண்டிருந்ததை,

***“இறைநில மெழுது முனிளைய பாலகன்***
***முறை வரைவேனென முயல்வ தொக்குமால்”[11]***

***(கந்தபுராணம்–அவையடக்கம்.1:1–2)***

எனும் அடிகளின் வாயிலாக அறியலாம் “எழுத்துக்களைப் புணர்த்தல் எழுத்துக்கள், கண்ணெழுத்துக்கள், கரந்தெழுத்துக்கள்”[11] என மூன்று வகைகளாக மு.கோவிந்தராசன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஓதலும் தூதும் உயர்ந்தோர்க்குரிய என்று தொல்காப்பியம் கூறியபோதும், கல்வி பயிலும் உரிமை அனைவருக்கும் உண்டு. "சங்க காலத்தில் அவை ஒரு சிலரின் உரிமையாக இல்லை. எக்குலத்தைச் சார்ந்தவர்களும் செல்வர்களும் வறியவர்களும் மன்னரும் எளிய குடிமக்களும் ஆகிய ஆண்களும் பெண்களும் கல்வியைத் தேடிப்பயின்றனர்"[12] என கே.கே. பிள்ளை கூறுவதினின்றும் அறியமுடிகின்றது.

திருமணத்திற்குப் பின்னரும் கல்வி பயின்றனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியலாம்.

**"ஓதல் பகையே தூதிவை பிரிவே"[13]**

**(தொ.பொ.27)**

எனத் தொல்காப்பியமும் எடுத்துக் காட்டுகின்றது. வேண்டிய கல்வி மூன்றாண்டுக்கு மேல் இருத்தல் கூடாது என்றும் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

**சங்க காலத்தில் பள்ளிகள்**

சங்க காலத்தில் ஆசிரியர்களின் இல்லத் திண்ணைகள் பள்ளிகளாகத் திகழ்ந்திருக்க வேண்டும். சங்க காலத்தில் புலவர்கள் ஆசிரியர்களாக விளங்கியிருக்கின்றனர்.

இன்றைய நிலையில் காணப்படும் பள்ளிகளைப் போன்ற முறையான அமைப்பு அந்நாளில் இல்லை எனலாம்.

பள்ளி என்பதற்குத் தொல்காப்பியம் 'இடம்' என்று பொருளையும் தருகின்றது. இதனை,

**"சொல்லிய பள்ளி..."[14] (தொல்.எழுத்து.100)**

என்ற நூற்பாவழி அறியமுடிகின்றது.

**"வினைபடு பள்ளியிற் தோன்றுமே செங்கட்**
**சினமால் பொருத களத்து"[15]**

**(களவழி நாற்பது.15)**

என்ற பொய்கையாரின் அடிகளும் 'இடம்' என்ற பொருளையே உணர்த்துகின்றன.

பள்ளி என்பதற்குப் படுக்கை என்ற பொருளும் தமிழ் நூல்களில் கையாளப்படுகின்றன.

**"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றல் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகழ்"[16]**

**(குறள்.840)**

இக்குறளில் பள்ளி என்பதற்குத் திருவள்ளுவர் படுக்கை என்று பொருள் கூறுகின்றார். ஆசாரக்கோவையில் பெருவாயின் முள்ளியார்,

**"காலினீர் நீங்காமை யுண்டிடுக பள்ளியுள்**
**ஈரம் புலராமை யேறற்க வெற்பதே**
**பேரறிவாளர் துணிவு"[17]**

**(ஆசாரம்.19)**

என்ற பாடலின் வழி பள்ளி என்பதற்குப் படுக்கை அறை என்று பொருள் கூறுகின்றார்.

இவற்றினின்று பள்ளி என்பது பள்ளிக்கூடம், படுக்கை அறை என்ற இரு பொருளிலும் வழங்கப்பட்டு வந்துள்ளது. சங்க காலத்திற்கு முன்பு பள்ளி என்ற சொல் பாடம் கற்பிக்கும் இடத்தைக் குறிக்கின்றது.

சங்க காலத்திற்குப் பின்னால் பள்ளிக்கூடம், படுக்கை அறை என்ற இரண்டு பொருளும் வழக்கில் இருந்துள்ளன. சங்க காலத்திற்குப் பின்னால் பள்ளி என்னும் சொல் மாணாக்கர் பயிலும் பள்ளி எனும் பொருளில் கூறப்படுவதைத் திரிகடுகம் எனும் நூலில்

**"கால்தூய்மை யில்லாக் கலிமாவுங் காழ்கடிந்து**
**மேல்தூய் மையில்லாத வெங்களிறுஞ் – சீறிக்**

**கறுவி வெகுண்டுரைப்பான் பள்ளி இம்மூன்றும்**

**குறுகார் அறிவுடை யார்"[18]**

**(திரி.46)**

எனும் பாடலால் அறியமுடிகின்றது.

ஒருவன் தன் தாய் தந்தையிடம் முதன்முதலில் கற்கிறான். அதன்பிறகு உற்றார் உறவினர்களிடமும் கற்கிறான். அத்தகைய கல்வியறிவானது அவரவர் குடும்பச் சூழலைப் பொருத்து அமைகின்றது. இக்கல்வியால் அவன் முழு அறிவையும் பெற்றுவிட முடியாது என்பதை உணர்ந்த பெற்றோர்கள் பட்டறிவோடு உலகியல் அறிவையும் இலக்கண, இலக்கிய பெற ஆசிரியர்களிடத்தில் அனுப்பி வைக்கின்றனர். அவ்வாறு செல்லும் இடம் பள்ளி ஆகும்.

ஆசிரியரின் இல்லம் தேடிச்சென்று கல்வி கற்கும் நிலையில் அவர்களின் இல்லம் பள்ளியாகத் திகழ்ந்திருக்க வேண்டும். ஊர்ப்பொது இடமான மன்றத்தில் பள்ளிகள் இயங்கியதைக் குறுந்தொகையின்

**"அன்னா யிவனோ ரிள மாணாக்கன்**

**தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ"[19]**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் மாணாக்கர்கள் மன்றத்திடை இருந்து கல்வி பயின்றமையை அறியமுடிகின்றது. கல்வி ஆசிரியரின் இல்லத் தாழ்வாரத்தில் மாணாக்கர்களுக்குக் கற்றுத்தரப்பட்டிருக்க வேண்டும். இதனைத் திண்ணைப் பள்ளிகள் என அழைக்கப்படுதல் மூலம் உணரலாம்.

பள்ளிக்கூடம் எனும் சொல் சமணர்களிடமிருந்து வரப்பெற்ற சொல் என்பர். அம்மனநிலையில் தவமிருந்த இடம் சமணப்பள்ளிகள். சமண அறவோர்கள் தங்கள் ஆசிரமப் பள்ளிகளில் ஓய்வு எடுத்துக் கொண்டே மக்களுக்கு அறிவுரை அளித்த காரணத்தால் அவர்கள் தங்கியிருந்த இடத்திற்குச்

'சமண அறவோர் ஆசிரமப் பள்ளி' எனப் பெயராகிப் பின்னர் கல்விக் கூடங்களுக்கும் வழங்க ஏதுவாயிற்று எனலாம். இஸ்லாமியர்கள் இறைவனைத் தொழுது நிற்கும் இடத்திற்குப் பள்ளிவாசல் என்று பெயர் இருப்பதையும் எண்ணித் தெளிதல் வேண்டும்.

**கல்லூரிகள்**

திருத்தக்கதேவர் பள்ளிகளில் கல்வி கற்றமை பற்றியும் கல்வி பயிலும் இடத்திற்குக் கல்லூரி எனவும் பெயர் கூறுகின்றார். கல்லூரி எனும் சொல்லாட்சியை முதன்முதலில் கையாண்டவர் இவர். இதனை,

> **"கலத்திற் காலங் கல்லூரி நற்கொட்டிலா**
> **முலைத்தடத்திடை மொய பெருக்குப் பையா**
> **இலக்கு மென்னுயிரா வெய்து கற்குமால்**
> **அலைக்கும் வெஞ்சா மைந்துடை யானரோ"[20]**
>
> **(சீவக.995)**

எனும் பாடல்வழி கல்லூரி எனும் சொல்லாட்சி பயன்படுத்தியமை நன்கு புலப்படுகின்றது. வில், வாள், வேல், அம்பு ஆகியவற்றை இலக்குப் பார்த்து எய்தற்குரிய பயிற்சியினை முற்காலத்தில் மாணாக்கர்களுக்குக் கற்றுத் தந்தனர். வில், வாள், வேல், அம்பு ஆகிய கலைகளைக் கற்றுக் கொடுக்கும் இடத்திற்குக் கல்லூரி எனும் பெயரைத் திருத்தக்கதேவர் வழங்கியுள்ளமை புலப்படுகின்றது.

கி.பி. 9 ஆம் நூற்றாண்டிலிருந்து 13 ஆம் நூற்றாண்டு வரையிலான சோழர்கள் ஆட்சியில் பள்ளிகள் பெரும்பாலும் ஆலயங்களிலும், திண்ணைகளிலும் அமையப்பெற்றிருந்தன. இதற்கு உ.வே.சாமிநாதையர் கூற்றுச் சான்றாக அமைகின்றது.

"இரண்டாம் இராசராச சோழன் காலத்தில் ரூபாவதாரமென்ற வியாகரணத்தைத் திருவாவடுதுறையிலிருந்து பழைய மடமொன்றில் மாணாக்கர்கள் படித்து வந்தார்களென்றும் அதற்காகத் தனி நிலங்கள்

ஒதுக்கப்பட்டிருந்தனவென்றும் ஒரு சாசனத்தினால் தெரிகிறது. இப்படியே வேதபாடசாலைகளும் ஆகம பாடசாலைகளும் பல மடங்களில் இருந்தன. தொண்டை நாட்டில் திருமுக்கூடலென்னும் இடத்தில் வைத்திய நூல்களைக் கற்பிக்கும் பள்ளிக்கூடம் ஒன்று இருந்ததென்பதும், அங்கே பல மாணாக்கர்கள் இருந்து படித்து வந்தார்களென்பதும் சில சாசனங்களின் வாயிலாக வெளியாகின்றன''[21] என்று உ.வே.சாமிநாதையர் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**ஆசிரியர்கள்**

''ஆசிரியர் என்ற சொல்லிற்கு உபாத்தியாயர்; கல்வி, கலை கற்பிப்பவர்''[22] என வாழ்வியல் களஞ்சியம் பொருள் தருகின்றது. ''ஆசிரியர்கள்; கணக்காயர்கள், உபாத்தியாயர்கள், குலபதிகள் என்ற பெயராலும் அழைக்கப்பட்டனர். ந.மு.வேங்கடசாமி நாட்டார் தமது ஆய்வுக் கட்டுரையில் ஆசிரியர்கள், உபாத்தியாயர், கணக்காயர் என்ற பெயரால் வழங்கப்பட்டன என்கிறார்.''[23]

''பழைய முறைக் கல்வியைக் கற்பித்தவர் கணக்காயர், வித்துவான், மகாவித்துவான், கவிராயர், நாவலர் என்று அழைக்கப்பட்டார்கள்''[24] என மயிலை சீனிவேங்கடசாமி தம் நூலில் பதிவு செய்துள்ளார்.

''கற்பிப்போர் கணக்காயன் என்றும் ஆசிரியர் என்றும் குரு அல்லது குரவன் என்றும் மூவகையர்''[25] எனத் தேவநேயர் குறிப்பிடுகின்றார்.

இலக்கியங்கள் ஆசிரியர், நல்லாசிரியர், தொல்லாசிரியர், புலவர், கணக்காயர் என்ற சொற்களில் விரிந்த பொருள் தரும் வகையில் பயன்படுத்தி வந்துள்ளன. சங்க காலத்தில் ஆசிரியர் என்ற அடைமொழி கொண்ட புலவர்கள் பலர் இருந்தமையை அறியமுடிகின்றது. சான்றாக

ஆசிரியன் பெருங்கண்ணன், கிடங்கில் குலபதி நக்கண்ணனார், மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார், மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார், மதுரைப் பாலாசிரியன் நற்றாமனார், மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார், மதுரை வேளாசான் முக்கோல் ஆசான் நல்வெள்ளையார் ஆகியோர்களின் பெயர்களால் அறியலாம்.

கணக்காயரிடத்தில் மாணாக்கர்கள் எழுதவும் படிக்கவும் கற்றுக் கொள்வார்கள். பாடங்களை மனப்பாடம் செய்வது அக்கல்வியின் குறிக்கோளாக இருந்தது. மாணாக்கர் நீதிநூல்களையும் இலக்கணச் சூத்திரங்களையும் பொருள் அறியாமல் கற்றுக் கொள்வர். இத்துடன் பாடசாலைப் படிப்பு முடிவடைகிறது. அதன்பிறகு மாணாக்கர்கள் புலவர்களிடத்தில் சென்று இலக்கண, இலக்கியங்களுக்குப் பாடங்கேட்டுப் பொருள் உணர்ந்து கொள்வார்கள்; காரிகை கற்றுக் கவிபாடவும் பழகிக் கொள்வார்கள்.

காலம் காலமாக வழங்கி வந்த கல்வியானது கர்ணபரம்பரைக் கதையாக (செவிவழிக்கல்வி) வழங்கப்பட்டது என்பதும் பரம்பரை பரம்பரையாகச் சொல்லப்பட்டு வந்தமையையும் இறையனார் களவியல் உரை எடுத்துரைக்கின்றது.

**இறையனார் அகப்பொருள்**

அக்காலத்துப் பாண்டிய நாட்டைப் பன்னிரண்டு ஆண்டுகள் பஞ்சம் ஆட்கொண்டது. புலவர்கள் வேற்று நாடுகளுக்குச் சென்று பிழைப்பு நடத்தி வந்தனர். 12 ஆண்டுகள் கழித்து மழைபொலிய நாடு செழிப்புற்றது. புலவர்களை மீண்டும் அழைத்துவந்து எழுத்ததிகாரமும், சொல்லதிகாரமும் செய்தனர். பொருளதிகாரம் கிடைக்கப்பெறவில்லை. ஆதலின் மன்னன் மதுரை ஆலவாயிற் அழனிறக் கடவுளிடம் வேண்ட; இறைவனும் 60 சூத்திரங்களை

மூன்று செப்பிதழாக எழுதிப் பீடத்தின் கீழிட்டான். அதனைக் கொணர்ந்து புலவர்களை உணரச் செய்யுமாறு வேண்டினார். அனைவரும் யாம் செய்த உரையே சிறப்பென்று வாதிட்டனர். அவற்றிற்கும் இறைவனே வழியையும் கூறி உப்பூரிக்குடிக்கிழார் மகனார் உருத்திரசன்மனாரிடம் அனுப்பி வைத்தார். அதன்வழி கணக்காயர் மகனார் நக்கீரனார் உரை சிறப்பென்று அனைவரும் ஒப்புக் கொண்டனர் என்பது இறையனார் அகப்பொருள் தோன்றிய வரலாறு. அவ்வுரையானது எவ்வாறு வழிவழியாக வழங்கி வந்தது என்பதையும் இவ்வுரையின் வழி அறியலாம்.

"இவ்வுரை நடந்த வரலாறாக மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம் மகனார் கீரங்கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் தேனூர்க்கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனார்க்கு உரைத்தார்; அவர் மணலூராசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனார்க்கு உரைத்தார். அவர் சொல்லூராசிரியர் ஆண்டைப் பெருங்குமரனார்க்கு உரைத்தார்; அவர் திருக்குன்றத்தாசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதவளனார் இளநாகனார்க்கு உரைத்தார்; அவர் முசிறி ஆசிரியர் நீலகண்டனார்க்கு உரைத்தார்"[26] என்று பல தலைமுறைகளாகச் செவிவழியாகப் பாடங்கற்பிக்கப்பட்டமையை இவ்வுரையின் மூலம் அறியமுடிகின்றது. இதன்வழி கி.பி.8 ஆம் நூற்றாண்டு வரை செவிவழியாகவே பாடம் உரைக்கப்பட்டது என்பதை அறியமுடிகின்றது.

**ஆசிரியரைக் குறிக்கும் சொல்**

ஆசான், ஆசிரியன், கணக்காயன் என்பன முற்காலச் சொற்கள். உவாத்தியன், குரு, தேசிகன் என்பன இடைக்காலத்தில் எழுந்த வடசொற்கள். தற்போது வித்துவான், புலவர், பண்டிதர், ஆசிரியர், விரிவுரையாளர், பேராசிரியர் என ஆசிரியரைக் குறிக்கும் சொற்கள் விரிவடைந்துள்ளன.

**ஆசான் விளக்கம்**

ஆசான் என்பதற்குக் கோவை இளஞ்சேரன் தரும் விளக்கம் பின்வருமாறு. “கல்வி அறிவிற்கும் வாழ்வியற் கருத்திற்கும் பற்றுக்கோடு ஆனவன் என்னும் பொருளில் ஆசு+ஆன் = ஆசான். ஓர் உலோகத்துடன் மற்றொரு உலோகத்தைப் பற்ற வைக்க இடையே நிற்கும் உலோகத்தூள் ‘பற்றாசு’ எனப்படும். இதுபோன்று கல்வியோடு மாணவரது உள்ளத்தைப் பற்றவைத்து அறிவொளி தருபவர் என்னும் கருத்தில் ‘ஆசான்’ என்னும் சொல் வழங்கப்படுகிறது”[27]. அதுபோன்று ஆசானும் தன் இன்பம் வேண்டாதவனாக இருக்கவேண்டும் என்பதை ஆண் ஆக்கம் (இன்பப் புணர்ச்சி) வேண்டாதான் ஆசான் என்ற சிறுபஞ்சமூலப் பாடல் எடுத்துரைக்கின்றது.

ஆசான் கல்வி கேள்விகளிற் சிறந்தவன் என்பது மட்டுமன்று இரண்டிலும் உரிமை படைத்தவன். ‘கேள்வியிற் கிளந்த ஆசான் உரையும்’ என்னும் (பரி.261) பாடல் அடி கேள்வி அறிவை வழங்குவதற்கு உரிமை படைத்தவனாக எடுத்து மொழியப்படுபவன் எனக்காட்டுகின்றது.

‘தண்டமிழ் ஆசான் சாத்தன்’

‘மதுரை வேளாசான்’

என்னும் புலவர்களது புலமையும் அறிவு நுணுக்கமும் அறிவுத் திறனும் ‘ஆசான்’ என்னும் சொற்பொருளுக்குப் பெருமை சான்ற இலக்கியங்களாகத் திகழ்கின்றன”[27]

அரசனுக்குக் கருத்துரை வழங்கும் குழு அரசியலுக்குப் பற்றுக் கோடாகத் திகழ்ந்தது என்பதைச் சிலப்பதிகாரம்,

**“ஐம்பெரும் குழுவில் ஒருவன் ஆசான்”[28]**

**(சிலம்பு.3:126)**

என்பதன் வழி எடுத்துரைக்கின்றது.

ஏட்டுக் கல்விக்கு மட்டுமின்றி இசை, கூத்து முதலிய கலைகளுக்கும் அறிவுத் தந்தையாக ஆசான் விளங்கினான் என்பதை ‘ஆடற்கமைந்த ஆசான்’, ‘தலைக்கோல் ஆசான்’ என்னும் சிலம்புத் தொடர்கள் காட்டுகின்றன.

**ஆசிரியன் விளக்கம்**

இச்சொல்லிற்குப் பலர் விளக்கம் அளித்துள்ளனர். “ஆசிரியன் என்ற சொல்லை ஆசு + இரியன் எனப் பிரிக்கலாம். குற்றத்தைத் தன் கண் நீக்கிப் பிறர் மாட்டும் நீக்குபவன்”[29] என்பது இப்பிரிவில் தோன்றும் பொருள் என்று பசுபதி சுட்டுவார்.

“ஆசிரியர் என்பதற்குக் குற்றங்களை நீக்குபவர்”[30] என சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் பொருள் கூறுகின்றது. “வாழ்வியற் களஞ்சியம் ஆசிரியர், உவாத்தியாயர், கல்வி, கலை கற்பிப்பவர்”[31] என்று பொருள் தருகின்றது.

“தனது மனத்தின் வழியே மாணவரைக் காண்பவர் ஆசிரியர்”[32] என்கிறார் கோகிலா தங்கச்சாமி.

**தொல்காப்பியர் ஆசிரியரைக் குறிக்கும் சொல்**

தொல்காப்பியர் ஆசிரியரைக் குறிக்கப் ‘புலவர்’ என்ற சொல்லையே பெரும்பான்மையாகக் யைாண்டுள்ளார். இதனை,

***“புலன் நன்குணர்ந்த புலமையோரே”[33]***

***(தொல்.பொருள்.அகம்.958)***

***“நூல் நவில் புலவர் நூலென்றறைந் தணறே”[34]***

***(தொல்.பொருள்.செய்.1411)***

***“நீட்டம் வேண்டின் அவ்வள புடைய***
***கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்”[35]***

***(தொல்.எழுத்து.6)***

***“உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே***

***பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்”[36]***

***(தொல்.சொல்.904)***

என்ற நூற்பாக்கள் வாயிலாக அறியலாம்.

“வேங்கடசாமி நாட்டார் ஆசிரியரை மூன்று வகையாகக் குறிப்பிடுகின்றார். அவை 1. நூலாசிரியர், 2. உரையாசிரியர், 3. போதக ஆசிரியர்”[37] என்பனவாகும்.

நூலாசிரியர் மூலநூல் ஆசிரியர், நூல்களை இயற்றுபவர். உரையாசிரியர் மூலநூலுக்கு உரை எழுதுபவர்கள். போதக ஆசிரியர் மாணாக்கனுக்குப் பாடம் கற்பிக்கும் ஆசிரியர் இங்கு உரைப்பது போதக ஆசிரியரையே.

உரையாசிரியரும் ஒரு வகையில் போதக ஆசிரியர் என்று கூறலாம். ஏனெனில் மூலநூலுக்கு விளக்கம் கூறுகின்றபோது அவரும் போதக ஆசிரியராகிறார். பிற்காலத்தில் உரை எழுதுவதற்கும் அதனைப் போதிப்பதற்கும் தனித்தனியாக ஆசிரியர்கள் இருந்தமையால் உரையாசிரியர் போதக ஆசிரியர் என்று பிரிக்கப்பட்டனர். இன்று பாடம் கற்பிப்பவரே ஆசிரியர் என்றாயிற்று.

அத்தகைய ஆசிரியர்களின் பண்புகளையும் குணநலன்களையும் இலக்கணங்கள் எவ்வாறு வரையறை செய்துள்ளன என்பதை விளக்கும் முகமாக இவ்வியல் அமைகின்றது.

**தொல்காப்பியம்**

தொல்காப்பியம் ஆசிரியர்களின் பண்புகள், குணநலன்கள், அவர்களின் கடமைகள் குறித்தும் நேரடியாக எடுத்துக் கூறவில்லை எனலாம். தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள்.

**"ஈவோன் தன்மை யீத லியற்கை**

**கொள்வோன் தன்மை கோடன் மரபென**

**ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே"**

**(தொல்.)**

என்ற பொதுப்பாயிரத்திற்கு விளக்கம் கூறும்முகமாக ஈவோர்–ஆசிரியர், கொள்வோன்–மாணாக்கன் என்று அவர்களின் தன்மைகளாகத் தமது உரைகளில் ஆசிரியர் யார்? ஆசிரியர் அல்லாதவர் யார்? மாணாக்கன் என்பவன் யார்? மாணாக்கரல்லாதவர் யார்? என்று கூறுகின்றனர்.

**ஈவோர்**

**"மலை நிலம் பூவே துலாக்கோ லென் றின்னர்**

**உலைவி லுணர்வுடை யார்"**

ஆசிரியர் மலை, நிலம், பூ, துலாக்கேல் ஆகிய இவற்றைப் போன்ற மேன்மை, உலகியலறிவு, உயர் குணம் ஆகிய இவையும் இவை போல்வனவும் பொருந்தியவனே நூலைக கற்பிக்கும் ஆசிரியர்.

அளக்கலாகா அளவு, அளக்கலாகாப் பொருள், அசைக்க முடியாத நிலை, உயர்ச்சி, கொடை ஆகிய தன்மைகளால் மலை அவனுக்கு உவமையாகக் கூறப்படுகிறது.

பெருமை, வலிமை, பொறுமை, பயன்தருதல் ஆகிய தன்மைகளால் நிலம் அவனுக்கு உவமை.

யாவரும் மகிழ்ந்து போற்றல். மென்மை, முகத்தில் மலர்ச்சி ஆகியவற்றால் மலர் அவனுக்குவமை.

ஐயம் தீரப் பொருளையுணர்த்தல், நடுநிலை ஆகியவற்றால் துலாக்கோல் அவனுக்கு உவமை.

அளந்து அறியமுடியாத அளவையும், பொருளையும் கொண்டிருத்தலும் அறிவு வளத்தையும் யாராலும் சோதித்துப் பார்க்க முடியாத உறுதியும் மக்களிடத்திலே நன்மதிப்பைப் பெற்று உயர்வையும் கொண்டு ஆசிரியர் இருத்தல் வேண்டும் என்று மலைக்கு உவமையாகக் கூறுகின்றார்.

நிலத்தால் பெருமையும் வலிமையும் பெற்று வள்ளுவரின் வாக்கிற்கிணங்க பொறுமையையும் நிலத்திலே கிடைக்கும் பொருளைப் போல ஆசிரியரிடத்திலும் தோண்டத் தோண்ட அறிவு வளம் கிடைக்கப்பெற வேண்டும் என்றமையால் நிலம் உவமையாகக் கூறப்பட்டது.

பூவினது மென்மையான குணத்தைப் போன்று ஆசிரியர் இருத்தல் வேண்டும் அனைவராலும் போற்றுதற்குரியவராய் முக மலர்ச்சியுடன் இருத்தல் வேண்டும் என்பதாலும் மலர் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

தாம் கூறும் கருத்திலே ஏற்றத்தாழ்வின்றி நடுநிலைமையோடு இருத்தல் வேண்டும் என்பதாலும் துலாக்கோல் உவமையாகச் சுட்டப்பட்டது.

மேற்கூறப்பட்ட உவமைகளால் ஆசிரியரது குணமும் தன்மையும் இவ்வாறு இருந்தன என்றும் கருதுவதற்கிடமுண்டு. பின்னர் இத்தகைய குணங்களைப் பெற்றவர்களே ஆசிரியராக வேண்டும் என்பதை வலியுறுத்த உரைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் தெளியலாம். இதனைப் பின்பற்றியே ஆசிரியர்கள் இருக்க வேண்டும் என்பது உரையாசிரியர்களின் எண்ணம்.

“பல கலைகளையும் கற்றுணர்ந்தவர்களாய்த் தாம் அறிந்தவைகளைப் பிறரும் அறிந்து பயனெய்துமாறு அருள் சுரந்தூட்டுபவர்கள் ஆசிரியர் என்னும் சிறப்புப் பெயர்க்குரியராகின்றனர்”[38] என்கிறார் வேங்கடசாமி நாட்டார். அன்பும் அறிவாற்றலும் உடையவர்களே ஆசிரியர்கள்.

**ஆசிரியராகாதவர்**

**"கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு**

**குண்டிகைப் பருத்தியோ டிவையென மொழிப"**

*கழற்குடம் என்பது முன்பு இட்டவற்றைப் பின்னும் பின்னால் இட்டவற்றை முன்னும் மாற்றி வழங்கும் இயல்புடையது. அதுபோன்று முன்னுக்குப் பின் மாறுபாடாகக் கற்பித்தலால் மாணாக்கர் தெளிவின்றி இருப்பர் அதனால் கழற்குடம் உவமையாகக் கூறப்பட்டது.*

*மடற்பனை தாமாக எதையும் எளிதில் கொடுக்காதது. முயன்று பறித்தாலும் அவ்வளவு எளிதன்று. அதுபோல தாமாக எதையும் கற்பிக்க மாட்டார்கள். மாணாக்கர்கள் வலியச் சென்று கற்பிக்க வைத்தாலும் எளிதாகக் கற்றுக் கொடுக்கவும் மாட்டாதார் மடற்பனைக்கு உவமை.*

*தான் இருக்கும் இடத்தைவிட்டு மாற்றார் வீட்டுக்குப் பயன்தருவது முடத்தெங்கு (வேலிக்கு வெளிப்புறமாக வளைந்த தென்னை மரம்). பொருள் கொடுத்தல் முதலிய பல வகைகளாலும் உதவித் தமக்கு வழிபாடு செய்கின்ற மாணாக்கர்கள் அல்லாத பிறருக்குத் தாம் கற்ற கல்வியைக் கொடுப்பதால் முடத்தெங்கிற்கு உவமை.*

*பருத்திக் குண்டிகை (விளக்குத் திரிக்காக முன்னேற்பாடாகப் பஞ்சினை அடைத்து வைக்கும் தேங்காய்க் குடுக்கை) தேங்காய்க் குடுக்கைக்குள் செலுத்தியப் பஞ்சினை எளிதாக உள்ளே நுழைக்கவும் முடியாது. செலுத்திய பஞ்சினை எளிதாக வெளியே எடுக்கவும் முடியாது. இதனைப்போன்று பிறருக்கு எளிதில் கற்றுக் கொடுக்காதவர் பருத்திக் குண்டிகைக்கு உவமை. "ஓர் ஆசிரியன் தவறி நடப்பானாயின் அவன் தான் கெடுவதன்றி உலகத்தையும் கெடுப்பவனாகின்றான்"[39] என்று வேங்கடசாமி நாட்டார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.*

**கற்பிக்கும் முறை**

பாடஞ்சொல்லும் ஆசிரியர் அகலமான பொழிப்புரையும் நுட்பமும் கொண்டவராக இருத்தல் வேண்டும். உரைக்கப்படும் பொருளைப் பல்வேறு உரைகளினின்றும் எடுத்தாண்டு அதனது நன்மைகளையும் தீமைகளையும் அலசி ஆராய்ந்து உண்மை நிலையினைக் கூறவேண்டும். நிறை, குறைகளைச் சரிவர எடுத்தாள வேண்டும். பாடஞ்சொல்லும் ஆசிரியர் தெளிந்த அறிவினை உடையவராக இருத்தல் வேண்டும். தெய்வத்தைத் தொழுது, மாணாக்கர் அறிந்து கொள்ளும் வகையினை அறிந்து, அதாவது முதல் இடை, கடை மாணாக்கருக்கு ஏற்றவாறு பாடஞ்சொல்லுதல் மரபு என்கின்றனர். இதனை, ஈதலியற்கை என்பதற்கு விளக்கம் கூறும் பொருட்டு உரையாசிரியர்கள்,

> **''ஈத லியல்பே யியல்புறக் கிளப்பின்**
> **பொழிப்பே யகலம் நுட்ப மெச்சமெனப்**
> **பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்**
> **புகழ்ந்த மதியிற் பொருந்தும் ஓரையில்**
> **தெளிந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்**
> **கொள்வோ னுணர்வகை அறிந்தவன் கொள்வரக்**
> **கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்''**
>
> **(தொல்.பொது.)**

என்ற அடிகளின் மூலம் ஆசிரியர் பாடஞ்சொல்லும் முறையினை எடுத்துக் காட்டியுள்ளார். ''நல்ல ஆசிரியர் மாணவருக்குப் பாடம் மட்டும் கற்றுக் கொடுக்காமல் கூடவே ஒழுக்கம், தைரியம் மற்றும் மனிதநேயம் போன்றவற்றையும் வளர்க்க வேண்டும். மேலும் பேச்சுத்திறன், ஆளுமைத்திறன், தன்னம்பிக்கை மற்றும் ஒழுக்கம் போன்ற பண்புகளை வளர்க்கும் வகையில் இருக்க வேண்டும்.''[40] இவ்வாறு ஆசிரியர் தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று உணர்த்தப்படுகிறது.

## மாணாக்கர் - கொள்வோன்

மாணாக்கன் என்ற சொல்லிற்குக் ‘கற்போன்’ என்று அகராதி பொருள் தருகின்றது. “மாணாக்கன் என்ற சொல்லிற்கு மாண்பினைத் தன் கண் ஆக்கிக் கொள்பவன்”[41] என்று உ.வே.சாமிநாதையர் பொருள் தருகின்றார். மாணாக்கர்களை மூன்றாகப் பிரித்துக் காட்டுகின்றார் தேவநேயன். “கணக்காயனிடம் கற்போனுக்கு மாணி; சட்டன், ஓலைக் கணக்கன் என்றும்; ஆசிரியனிடம் கற்போனுக்கு மாணவன், கற்றுச்சொல்லி, மழபுலவன் என்றும்; குரவனிடம் கற்போனுக்குக் கேட்போன் என்றும் பொருள் தருகின்றார்.”[42] இம்முறை இன்று மாணவன், ஆய்வியல் நிறைஞர், ஆய்வாளர் என்று பகுக்கப்பட்டுள்ளது. கற்கும் கல்விக்கு ஏற்பப் பள்ளியில் பெயர் மாற்றம் பெறுகிறது.

## பள்ளியில் மாணாக்கன்

குருகுலக்கல்வி முறையில் மாணவன் உபநயணச் சடங்கிற்குப் பிறகு ஆசிரியரது பாதுகாப்பில் இருப்பான். இதனைக் ‘குருகுலவாசம்’ என்பர். இக்கல்விமுறையில் குருவினது வீட்டில் அவரது மகனாகவே மாணவர் தங்கித் தமது குருவிற்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வருவர். “குருகுல வாழ்க்கைக்காகக் குருவை அணுகும்போது கையில் விறகு, தானியம் முதலியவற்றை ஆசிரியருக்குக் காணிக்கையாகக் கொடுப்பது வழக்கம்”[43] என்கிறார் கே.பழனிவேலு. திண்ணைப் பள்ளிக் கூடத்திலும் ஆசிரியருக்குத் தேவையான பொருன்களை மாணவர்கள் கொடுத்து உதவுகின்றனர். சடங்குமுறை என்பது தமிழர் கல்விமுறையில் பின்பற்றப்படவில்லை.

மாணவரைப் பற்றி முழுமையும் அறிந்த பின்னர் ஆசிரியர் அவரைத் தமது மாணாக்கராகக் கொள்வார் மாணாக்கர்கள் ஆசிரியர்களுக்குப் பணிபுரிந்து கொண்டு; கிடைக்கும் ஓய்வு நேரங்களில் கல்வி பயின்றனர்.

ஆசிரியரின் விருப்பத்திற்கு ஏற்ப மாணாக்கர்கள் கல்வி கற்றனர். குருகுலத்தில் ஆசிரியர்கள் மாணவர்களைத் தமது பிள்ளைகளாகவே நடத்தி வந்தனர். மாணாக்கர்களின் உடைகளும் உணவுகளும் ஆசிரியரின் அறிவுறுத்தலின் படியே இருந்தது. ஆசிரியர் தமது வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை மாணாக்கர்களிடமிருந்தே பெற்றனர்.

கணக்காயரிடத்தில் திண்ணைப் பள்ளிகளில் கற்கும் மாணாக்கர்கள் ஆசிரியருக்கு உதவியாகச் சட்டாம்பிள்ளை என்ற மாணாக்கன் இருப்பான்.

**“சட்டம் = எழுதும் ஓலை**

**சட்டம் – சட்டன் = ஓலைச்சுவடி படிப்போன்**

**சட்ட நம்பி – திண்ணைப் பள்ளி மாணவர் தலைவன்”**[44]

என்று தேவநேயன் விளக்கம் தருகின்றார். சட்டநம்பிப் பிள்ளை என்பது மருவி சட்டாம்பிள்ளை என்றாயிற்று என்றும் விளக்கம் கூறுகின்றார்.

கல்வி பயிற்றுதல் குருகுலத்தின் பணியாக இருப்பினும் மாணவருக்கு ஒழுக்கத்தை அழிப்பதே குருகுலத்தின் தலையாயப் பணியாக அமைந்தது. “ஆசிரியர்க்கு எவ்வளவும் கீழ்ப்படிந்து ஊழியஞ் செய்தாலும் அவையெல்லாம் மாணாக்கரின் உயர்ச்சிக்குக் காரணமே தவிர வேறில்லை”[45] என்கிறார் வேங்கடசாமி நாட்டார்.

எந்த மாணவன் தூயவனாகவும், கடமை தவறாதவனாகவும், வித்தையை ஏற்றுக் கொள்கிறவனாகவும், கவனம் நிறைந்தவனாகவும் இருக்கின்றானோ அவன் சிறப்பான மாணவனாகக் கருதப்பெற்றான். கற்கும் மாணவன் பணிவுடனும் ஒழுக்கத்துடனும் நடந்து கொள்வதே அவனது தகுதியாகும்.

**கற்பதற்குரியோன்**

உரையாசிரியர்கள் அறுவகையினருக்குக் கல்வி கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதை

**“தன்மக னாசான் மகனே மண்மகன்**
**பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே**
**உரைகே ளாளனோ டிவரென மொழிப”**

**(தொல்.பொது.)**

என்ற நூற்பா விளக்கத்தில் தெளிவுபடுத்தியுள்ளனர். 1. ஆசிரியரின் மகன், 2. தன்னுடைய ஆசிரியரின் மகன், 3. மன்னன் மகன், 4. பொருளை மிகுதியாகக் கொடுப்பவன், 5. ஆசிரியருக்கு வழிபாடு முதலியன செய்பவனுக்கும், 6. ஆசிரியர் கூறும் கருத்தினை விரைவாகக் கற்றுக் கொள்ளும் அறிவினை உடையோர்க்கும் கற்றுக் கொடுக்கலாம் என்பதை வரையறை செய்கின்றனர்.

இவற்றின் வழி கல்வியானது அனைவருக்கும் அளிக்கப்படவில்லை என்று அறியலாம். நல்ல குணங்களையும், பண்புகளையும் கொண்டவர்களுக்கு மட்டுமே கல்வி கற்றுத்தரப்பட வேண்டும் என்பதில் அவர்கள் தீர்மானாக இருந்தனர் என்பது புலப்படுகிறது. “வழிபாடு முதலியன குறைவறப் புரிந்து பாடங்கேட்போரே மாணாக்கராவர்”[46] என்று வேங்கடசாமி நாட்டார் குறிப்பிடுகின்றார். ஆசிரியரை மதிக்காதவர்க்குக் கல்வி கற்பித்தல் கூடாது என்பது அன்றைய நிலையாக இருந்துள்ளது.

**மாணாக்கர் தன்மை**

மாணவர்களின் அறிவுத் திறனுக்கு ஏற்ப அவர்கள் மூன்று நிலைகளில் பிரிக்கப்பட்டனர். அன்னப்பறவை நீரையும் பாலையும் பிரித்தறியும் தன்மை கொண்டது. அதுபோன்று மாணாக்கர் குணத்தையும் குற்றத்தையும் பிரித்தாராயும் தன்மை கொண்டவர்களை அன்னத்தோடு ஒப்பிடுகின்றார்.

கிளிப்பிள்ளை என்பது சொன்னதைச் சொல்லும் இயல்புடையது. சுயமாக எதையும் பேசத்தெரியாது பிறர் கூறுவதை அப்படியே கூறும் இயல்புடையது. இதனைப்போன்று ஆசிரியர் கூறும் கருத்தினை அப்படியே வாங்கிக் கொண்டு திரும்பிக் கூறும் இயல்புடையவர்கள் கிளிக்கு ஒப்பாவர்.

நெய்யரி பன்னாடை (திரவப் பொருளை வடிகட்டப் பயன்படுவது) இதன் தன்மையானது நல்லனவற்றைக் கீழே விட்டுவிட்டு மாசுகளை தன்னகத்தே வைத்துக் கொள்ளும், இதே இயல்பினையுடைய மாணாக்கர்கள் ஆசிரியர் கூறும் நற்கருத்துக்களை விட்டுவிட்டு தீயனவற்றை மட்டுமே நோக்கும் இயல்பினை உடையோர்.

இவற்றின்வழி மாணாக்கர்களைத் தரம் பிரித்துக் காட்டியுள்ளார். மாணவர்களின் அறிவுத் திறனுக்கு ஏற்றவாறு முதல் தரம், இரண்டாம் தரம், மூன்றாம் தரம் என்று வரிசைப்படுத்திக் காட்டியுள்ளார்.

**கற்பதற்குத் தகுதியற்றவர்**

கல்வி கற்கத் தகுதியற்றவர்களாக எண் வகையினோரைக் கூறுகின்றனர். அவர்கள் சோம்பேறி, செருக்குடையவன், பொறாமைக் குணம் உடையவன், காமுகன், கள்வன், தீராத நோயினை உடையவன், ஆறாச் சினத்தன், எந்தச் செயலிலும் சரியான முடிவைக் காணாது தடுமாற்றம் உடையவன் ஆவர். இதனை,

> ***“மடிமானிபொச்சாப்பன் காமுகன் கள்வன்***
> ***அடுநோய்ப் பிணியாளன்ஆறாச் சினத்தன்***
> ***தடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டென்மர்***
> ***நெடுநூலைக் கற்கலாகாதார்”***
>
> **(தொல்.பொது,)**

என்ற பாடலின் வழி அறியலாம்.

பொறாமைக் குணம் கொண்டவர்களுக்குக் கல்வி கற்பிக்கக் கூடாது என்றமையான் அது எத்தகைய பொறாமை என்று ஆராயப்பட வேண்டும். எல்லா மாணாக்கர்களையும்விட தான் முதல் மாணவனாக வரவேண்டும் என்ற பொறாமைக்குணம் இருத்தல் நன்று. அதேபோன்று முதலிடம் பெறுவதற்காகத் தீய செயல்களில் ஈடுபடுதல் என்பது தவறானதாகும். மேலும்

எத்தகைய இயல்பினை மாணாக்கர்கள் பெற்றிருந்தாலும் அவர்களை நல்வழிப்படுத்திச் சிறந்த மாணாக்கனாக உருவாக்குவதும் ஒரு சிறந்த ஆசிரியரின் கடமையாகும். இதனைக் கருத்தில் கொண்டு இன்றை சூழலில் அனைவருக்கும் கற்றுத்தரப்படுகின்றது. இதனை வேங்கடசாமி நாட்டார் தம் நூலில் "ஆசிரியர் தமது போதனையால் மாத்திரமன்று தமது நடவடிக்கைகளினாலும் தம்மைச் சூழ்ந்துள்ள மாணாக்கர்களையும் பிறரையும் நல்வழிப்படுத்த வேண்டும்"[47] என்று குறிப்பிட்டுள்ளார். பொறாமைக் குணம் என்பது தீயகுணம் என்று இருப்பினும் ஆசிரியர் தனது நடத்தையால் அதனை நல்லனவற்றிற்கும் பயன்படுத்துமாறு செய்தல் வேண்டும். எத்தகைய மாணாக்கர்களையும் நல்வழிப்படுத்தி நன் மாணாக்கனாக்குவது ஆசிரியரின் தலையாயப் பணியாகும். அதனாலேயே 'ஆசிரியர் பணி அறப்பணி அதற்கு உன்னை அற்பணி' என்று அறிஞர்கள் உரைத்தனர் போலும்.

வேங்கடசாமி நாட்டார் "சோம்பல், மறதி, வஞ்சம், மாறம், சினம் முதலிய தீக்குணங்களை உடையோரும் தீத்தொழில் புரிவோரும் மாணாக்கராகமாட்டார்கள்"[48] என்றும் உரைத்துள்ளார். இத்தகைய குணங்களை உடையோர் ஒருபோதும் மாணக்கராகத் தகுதியற்றவர்கள் என்பது அவரது கருத்தாகும்.

**"குரங்கெறி விளங்கா யெருமை யாடே**
**தோணி யென்றாங் கிவையென மொழிப"**

என்ற நூற்பாவின் வழி கற்பதற்குத் தகுதியற்றவர்களின் தன்மையாகக் குரங்கு, எருமை, ஆடு, தோணி போன்றவற்றை உவமையாகக் கூறியுள்ளார். குரங்கும் தோணியும் நிலையான தன்மையற்றது. இவற்றைப் போன்றே மாணாக்கரும் நிலையில்லாதபோது அவர்களால் கற்கமுடியாது. எருமை தெளிந்தநீரைக் கலக்கி உண்ணும் இயல்புடையது. இதைப்போன்று மாணாக்கன் ஆசிரியர்

கூறும் கருத்தினை ஏற்காது அதற்குமாறானவற்றைக் கற்பவர் எருமைக்கு ஒப்பாவார்.

**மாணவன் பாடம் கேட்கும்முறை**

பாடம் கேட்போன் முறை என்பது காலைப்பொழுதில் சென்று வழிபாடு முதலியன நடத்தி, இரவும் பகலும் சென்று அகலாது அன்பொடு பழகி ஆசிரியர் வாவென்று உரைத்தபோது வந்து, இரு என்று சொன்னபோது இருந்து, சொல்லென்று சொல்லும் போது சொல்லி, போவென்று உரைக்கும் போது போதல் வேண்டும். அவ்வாறு கேட்கும் போது நெஞ்சு களனாகவும் செவியை வாயாகவும் கொண்டு கேட்டவற்றை எல்லாம் மனத்தின் உள்ளே நிறுத்திக் கொள்வது மாணாக்கனின் தொழிலாகும்.

எத்திறத்து ஆசிரியர்க்கும் அறநிலை திரியாது வழிபாடு செய்து ஆசிரியரின் பல்லுரையும் கேட்டுத் தெய்வத்திற்கு இணையாகப் போற்றி மதித்துப் பாடம் கேட்டல் வேண்டும். இலக்கணம் மாறாது பாடம் கேட்டு; கேட்டவற்றை நினைவில் நிறுத்தி, ஆசான் சார்ந்து அமைவரக்கேட்டு அம்மாண்பினைக் கொண்ட மாணாக்கரோடு கலந்து உரையாடி வினாதல் வினையவை விடுத்தல் என்று இவையும் பாடம் கேட்போனின் உடமை என்கிறார்.

**மாணவன் நூலைப் பயிலும் முறை**

ஆசான் உரைத்தவை அமைவரக் கொளினும் காற்கூரல்லது பற்றலனாகும். அவ்வாறு கேட்டவற்றை உடன்பயில்வாரோடு உரையாடலின் வழி ஒரு பாதியும், புலமையுடையோரிடம் கேட்டுணர்ந்த வழி மறுபாதியும் கற்றதற்கு ஒப்பாகும். இதேபோன்று கற்கும் முறையைப் பழமொழி நானூறு,

***“கற்றொறும் கல்லாதோர் என்று வழியிரங்கி***
***உற்றென்று சிந்தித்து உழன்று ஒன்(று) அறியுமேல்***
***கற்றெறுந்தான் கல்லாத வாறு”[49]***

***(பழமொழி.3)***

என்று கூறியுள்ளது. அதாவது மாணவன் கற்கும்போது தான் எதையும் கற்கவில்லை என நினைத்துக் கற்கவேண்டும் என்று கூறுகின்றது.

பாடம் கேட்கும்முறை, நூலைப் பயிலும்முறை ஆகிய இரண்டையும் எடுத்துரைக்கும் உரையாசிரியர்கள் தம் அனுபவங்களையும் அக்கால நடைமுறையையும் எடுத்துரைத்துள்ளனர். மேலும் பாடங்களை எவ்வாறு மனத்தில் நிறுத்திக் கொள்வது என்ற வழிமுறைகளை அனைவரும் எளிதில் அறியும் பொருட்டு எடுத்துரைத்துள்ளனர்.

இத்தகைய வழிமுறைகளை முறையாகப் பின்பற்றுவோரே முதல்நிலை மாணாக்கனாகத் திகழமுடியும். மாணாக்கர்களின் கலந்துரையாடல் வழிக் கற்றல் என்ற முறை உரையாசிரியர்கள் காலம் முதலே பின்பற்றப் பட்டுள்ளது. இதனை இன்று கூட்டுப்படிப்பு (Compain Study) என்று இன்றளவும் கடைபிடித்து வருவதும் குறிப்பிடத்தக்கது.

மாணவர்கள் வகுப்புகளுக்குத் தவறாது வருதல் வேண்டும். அவ்வாறு வருதலின் மூலம் எதனையும் விட்டுவிடாது கற்கமுடியும். இதனை “இருவென இருந்து, சொல்லெனச் சொல்லிப் போவெனப் போதல்” என்ற அடிகளின் மூலம் அறியமுடிகின்றது. இவற்றையே இன்றையப் பள்ளிகளில் மாணவர்கள் வகுப்புகளுக்கு விடுமுறை எடுத்தல் கூடாது என்று ஆசிரியர்கள் அறிவுறுத்துகின்றனர்.

இவ்வாறு ஈவோன் தன்மை, ஈதல் இயற்கை, கொள்வோன் தன்மை, கோடன் மரபு என்ற பொதுப்பாயிரத்திற்கு விளக்கம் கூறும்

உரையாசிரியர்கள் மேற்கண்ட நூற்பாக்களை மேற்கோளாகக் காட்டுகின்றனர். இந்நூற்பாக்கள் நன்னூலில் இருந்து எடுக்கப்பட்டவையல்ல. மேலேகண்ட நூற்பாக்களுக்கும் நன்னூல் நூற்பாக்களுக்கும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆயினும் வெண்பாப் பாட்டியலிலும் இந்நூற்பாக்களுள் சில இடம் பெற்றுள்ளன. எப்படியாயினும் இவையனைத்தும் 11 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 12 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இயற்றப்பட்டவை எனலாம். இதனை உரையாசிரியர் காலம், நன்னூலின் காலம், பாட்டியல் நூல்கள் எழுந்த காலம் இவற்றை வைத்து அறியலாம். சோம இளவரசு "நன்னூல் விருத்தியுரையில் நன்னூலின் பொதுப்பாயிர நூற்பாக்கள் தொல்காப்பியம், இறையனார் களவியல் உரை, யாப்பருங்கல விருத்தியுரை தொல்காப்பிய இளம்பூரணர் உரை ஆகியவற்றில் காணப்படுபவை என்கிறார்"[50] இவரின் கூற்றுப்படி நன்னூலாருக்கு முற்பட்டவை எனலாம்.

**நன்னூலில் ஆசிரியர் மாணவர் பற்றிய பதிவுகள்**

தொல்காப்பியம் தமிழ் நாகரிகத்தின் கலங்கரை விளக்கம், வரலாற்றின் பிறப்பிடம், பெருநூல். இந்நூலினைப் பின்பற்றி எத்தனையோ இலக்கியங்கள் இலக்கணங்கள் எழுந்துள்ளன. தொல்காப்பியம் போலக் காலவெள்ளத்தைக் கடந்து நிற்பது நன்னூல். இந்நூலின் ஆசிரியர் பவணந்தி முனிவர். சீயகங்கனின் வேண்டுதலுக்கிணங்க பவணந்தியாரால் நன்னூல் இயற்றப்பட்டது என்று பாயிரம் கூறுகின்றது. சீயகங்கனின் காலத்தை வைத்துப் பார்க்கின்ற பொழுது இந்நூல் கி.பி.12 ஆம் நூற்றாண்டின் இறுதியும் 13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் என்பது தெளிவாகின்றது.

நன்னூலின் முதல்நூல் தொல்காப்பியமும் இளம்பூரணர் உரையும் ஆகும். தொல்காப்பியத்திற்குப்பின் தோன்றிய இலக்கியங்களையும் உலக வழக்கினையும் ஆராய்ந்து பவணந்தியார் இலக்கணம் கூறியுள்ளார்.

**நல்லாசிரியரின் இலக்கணம்**

நன்னூல் ஆசிரியரான பவணந்தி முனிவர் பண்டைக்கால ஆசிரியர் – மாணவர் வரலாறுகளை விரிவாகக் கூறியுள்ளார்.

> **"குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை**
> **கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
> **நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**
> **உலகியல் அறிவோடு உயர்குணம் இணையவும்**
> **அமைபவன் நூலுரை யாசிரி யன்னே"**
>
> **(நன்.எழுத்து.26)**

இதன்வழி நல்லாசிரியரின் இலக்கணம் வலியுறுத்தப் பெறுகிறது. உரையாசிரியர்கள் நல்லாசிரியரின் தன்மைகளாக நிலம், மலை, பூ, துலாக்கோள் ஆகியவற்றோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

நன்னூலார் ஆசிரியரது குலம், அதாவது குடிப்பிறப்பு, அதனினும் உயர்குடிப்பிறப்பு, அருள், கடவுள் வழிபாடு ஆகிய இவைகளால் அடைந்த மேன்மை பொருந்தி, பல நூல்களைக் கற்றுணர்ந்த தேர்ச்சியோடு, நூற்பொருளை மாணாக்கர்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படி எடுத்துச் சொல்லும் சொல்வளத்தையும் கொண்டவராக இருத்தல் வேண்டும் என்கிறார்.

இதனை அடுத்து நிலத்தையும், மலையையும், துலாக்கோலையும், மலரையும் ஒத்த குணங்களையும் பெற்று நல்லாசிரியர் திகழ வேண்டும். மேலும் உலகியல் அறிவையும் உயர்ந்த குணங்களையும் பெற்றவரே நூலைக் கற்பிக்கும் ஆசிரியர் என்கின்றார்.

**நிலம்போல்பவன் ஆசிரியன்**

ஆசிரியர் என்பவர் பிறரால் அறிய இயலாத கல்விப் பெருமையைக் கொண்டவர். மிகுந்த மனஉறுதியுடையவர். தன்னைத் தோண்டினாரையும்

துன்புறுத்தாத பொறுமைக்குணம் கொண்டவர். நிலத்திலே உழைக்கும் உழைப்பிற்கு ஏற்றவாறு நிலம் பலன் தரும். அதுபோன்று மாணாக்கரின் முயற்சிக்கு ஏற்பப் பயன் தருபவர் ஆசிரியர். இவ்வகையால் நிலம் ஆசிரியருக்கு உவமையாகக் கூறப்பட்டது. இதனை,

***"தெரிவரும் பெருமையும் திண்மையும் பொறையும்***
***பருவமுயற்சி அளவிற் பயத்தலும்***
***மருவிய நன்னில மாண்பா கும்மே"***

***(நன்.எழுத்து.27)***

என்ற நூற்பாவின் வழி அறியமுடிகின்றது. ஆசிரியர் எல்லையில்லாக் கல்வி அறிவும், அளவற்ற பெருமையும், உழைப்பிற்கு ஏற்பப் பயன்தருபவராகவும் விளங்க வேண்டும் என்கின்றது. நல்ல நிலத்திற்குரிய குணங்கள் நல்லாசிரியருக்கு இருப்பதால் நிலம் ஆசிரியருக்கு உவமை. ஆசிரியருக்குப் பொறுமைக்குணம் இன்றியமையாதது என்பதால் அதனை நிலத்திற்கு ஒப்பாகக் கூறியுள்ளார் திருவள்ளுவர்.

***"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை***
***இகழ்வார்ப் பொறுத்தல் தலை"***[51]

***(குறள்.151)***

எனப் பொறுமைக் குணத்திற்கு நிலத்தையே உவமையாகக் கூறுகின்றார்.

ஆசிரியரை மலைக்கு நிகராகக் கூறும்பொழுது,

***"அளக்க லாகா அளவும் பொருளும்***
***துளக்க லாகா நிலையும் தோற்றமும்***
***வறப்பினும் வளந்தரும் வன்மையும் மலைக்கே"***

***(நன்.எழுத்து.28)***

வடிவத்தால் அளவிட முடியாத அளவு உயர்ந்தது மலை. அத்தகைய அளவிடமுடியாத கல்விப் பெருமையை உடையவராகவும், அளவிட முடியாத

பல்வேறு பொருள்களும் உடைய மலைபோல அளவிட முடியாத பலவகை நூற்பொருளையும் அறிந்தவராகவும், எத்தகைய அறிவுடையவராலும் அசைக்க முடியாத ஆற்றல் படைத்தவராகவும், நெடுந்தூரத்தில் உள்ளவராலும் அடையாளம் காணப்படும் ஆற்றல் படைத்தவராகவும், வறண்ட காலத்தில் தன்னைச் சார்ந்தவற்றைக் காத்துக் கொள்ளும் மலைபோல பொருள் இல்லாத காலத்தில் தன் மாணாக்கருக்குக் கல்விப் பொருளைக் கொடுக்கும் மனம் படைத்தவராகவும் ஆசிரியர் திகழவேண்டும் என்பதால் ஆசிரியர் மலைக்கு உவமை.

புலமைபெற்ற ஆசிரியர்களைத் தேடிச்சென்று அவர்களிடம் கல்வி கற்க விரும்பும் மாணாக்கர்களை நாம் இன்றும் பார்ப்பதுண்டு இத்தகைய ஆசிரியர்களே மலைக்கு ஒப்பாவர். மாணாக்கர் இடர்பட்ட காலத்தும் கற்பிக்கும் அருளுடைமையும் நல்ல ஆசிரியர் பெற்றிருத்தல் வேண்டும்.

**நிறைகோலுக்கு நிகரானவர் ஆசிரியர்**

ஆசிரியரை நிறைகோலுக்கு ஒப்பாகவும் குறிப்பிட்டுள்ளனர்.

**''ஐயம்தீரப் பொருளை உணர்த்தலும்**
**மெய்ந்நடு நிலையும் மிகும்நிறை கோற்கே''**

**(நன்.எழுத்து.29)**

என்கிறது நன்னூல். ஒரு பொருளின் எடையை அறிய துலாக்கோலின் முனை நடுவு நிலையில் நின்று ஐயம் தீர்க்கும். அதைப்போன்று மாணாக்கரிடத்தில் கற்பிக்கும் நிலையில் வேறுபாடு காட்டாமல் பாரபட்சமின்றி நடுநிலைமையோடு கற்பித்தல் வேண்டும். மாணாக்கரிடம் மட்டுமல்லாது ஏனையோரிடமும் பாரபட்சமின்றி நடந்து கொள்ளல் வேண்டும். இதனைத் திருவள்ளுவர்,

**''சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி''**[52]

**(குறள்.118)**

என்று வலியுறுத்துகின்றார். ஐயம் நீங்க வினாவப்பட்ட பொருளை விளக்கி, மாறுபாடின்றிப் புலவர் இருவர் மாறுபட்ட போது அதன் உண்மைத் தன்மை வெளிப்படுமாறு நடுவாக நிற்றலும் ஆகிய குணங்களால் துலாக்கோலுக்கு உவமையாகின்றார்.

**மலர் போன்றவர் ஆசிரியர்**

ஆசிரியரை மலருக்கு நிகராகக் கூறும்போது,

**''மங்கலம் ஆகி இன்றி யமையாது**
**யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்**
**பொழுதின் முகமலர்வு உடையது பூவே''**

**(நன்.எழுத்து.30)**

என்கின்றது நன்னூல். மங்கலம் என்றபோது அங்கே மலர் முக்கிய இடத்தைப் பெறுகின்றது. மலர் எல்லோராலும் மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளப்படுவது. அதனைப்போன்று நல்ல நிகழ்ச்சிகளுக்கு ஆசிரியர் உரியவராகின்றார், அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றார். ஆசிரியர் பூவினைப் போன்ற மென்மையான குணத்தைப் பெற்றவராகவும் பாடம் சொல்லும் காலத்தில் பூவினைப் போன்று முகமலர்ச்சியுடன் விளங்குதல் வேண்டும்.

''உயர்ந்தோர் எவ்வாறு நடக்கின்றனரோ அவரோடு பொருந்திய வகையில் தானும் அவ்வாறு நடப்பதே அறிவுடைமை. உலகம் எவ்வழி அவ்வழி யாமும் பொதுவுண்மையைக் கருத்தில் கொண்டு திகழ்வதாக நன்னூலாரின் கல்விச் சிந்தனை எனும் ஆய்வேட்டில் கனகலட்சுமி குறிப்பிட்டுள்ளார்.''[53] இதனை,

**“எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**

**அவ்வது உறைவது அறிவு”[54]**

**(குறள்.426)**

என்ற குறளின் வழி உயர்ந்தோர் வழியில் உலகம் எவ்வாறு நடைபெறுகின்றதோ அதற்கேற்ப நடந்து கொள்வதே அறிவாகும் என்கிறார். இத்தகையக் குணங்களால் ஆசிரியர் மலருக்கு உவமை.

மேற்கண்ட நல்ல பண்புகளைக் கொண்டவர்களே நல்லாசிரியர் என்று போற்றப்படுகின்றனர். “ஆசிரியரென்போர் பண்டமாற்றுச் செய்யும் வணிகரையும் தாம் பெறும் சம்பளத்திற்கு ஏற்ப வேலை செய்யும் கூலித்தொழிலாளர் அல்லது உத்யோகஸ்தர் போன்றவரல்லரென்பதும் புனித சிந்தையும் புனித வொழுக்கத்தையும் உடையவராய்த் தம்மைச் சார்ந்தாரையெல்லாம் புனிதராக்கி வாழ்விக்கும் பேரருளாளர்”[55] என்று வேங்கடசாமி நாட்டார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

“கல்வி கற்பிக்கும் ஆசிரியர் நூலறிவைப்பு கட்டும் பொழுது மெய்யறிவை மறந்துவிடலாகாது”[56] என்பது அயல்நாட்டு அறிஞர் ‘டெம்பிள்’ கருத்தாகும்.

“நல்ல ஆசிரியர் மாணவருக்குப் பாடம் மட்டும் கற்றுக் கொடுக்காமல், கூடவே ஒழுக்கம், தைரியம் மற்றும் மனிதநேயம் போன்றவற்றையும் வளர்க்க வேண்டும். மேலும் பேச்சுத்திறன், ஆளுமைத்திறன், தன்னம்பிக்கை மற்றும் ஒழுக்கம் போன்ற பண்புகளை வளர்க்கும் வகையில் இருக்க வேண்டும்”[57] என இராசரத்தினம் தமது ஆய்வுக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய நற்பண்புகளைக் கொண்டு ஆசிரியர்கள் விளங்கவேண்டும் என்பது அறிஞர்களின் கருத்து.

**ஆசிரியராகாதவர்**

'கதே' என்ற அயல்நாட்டு அறிஞர் "யாரிடம் கற்கிறோமோ அவரே ஆசிரியர், போதிப்பவர் எல்லாம் ஆசிரியராகிவிடமாட்டார்"[58] என்று குறிப்பிடுகின்றார். ஆசிரியர் என்பவர் மாணாக்கருக்குப் புதிய புதிய செய்திகளைக் கற்றுத்தர வேண்டும். ஆசிரியருக்குப் பொறாமைக் குணம், இழிகுணம் போன்றவை இருத்தல் கூடாது. இதனையே நன்னூலும்,

> **"மொழிகுணம் இன்மையும் இழிகுண இயல்பையும்**
> **அழுக்காறு அவாவஞ்சம் அச்சம் ஆடலும்**
> **கழற்குடம் மடற்பனை பகுத்திக் குண்டிகை**
> **முடத்தெங்கு ஒப்பென முரண்கொள் சிந்தையும்**
> **உடையோர் இலர் ஆசிரியர் ஆகுதலே"**
>
> ***(நன்.எழுத்து.31)***

எனும் நூற்பாவின் வழி ஆசிரியரல்லாதோருக்கான இலக்கணத்தைக் கூறுகின்றது. அனைத்தையும் கற்று அதனைப் பிறர் அறியுமாறு எடுத்துச் சொல்லும் குணம் இல்லாத ஆசிரியர் ஆசிரியராகமாட்டார். இழி குணம் படைத்தோர், பொறாமைக் குணம் உடையோர் போன்றோரும் ஆசிரியராகமாட்டார்.

நல்லாசிரியர் என்பவர் பொருளின் மேல் மிகுதியாகப் பற்றுக் கொள்ளுதல் கூடாது. தன்னிடம் கற்கும் மாணவரிடத்தே பாடம் பற்றிய அச்சத்தை ஏற்படுத்துதல் கூடாது, இத்தகைய ஆசிரியரும் ஆசிரியராக மாட்டார். இத்தகைய ஆசிரியர்களைக் கழற்குடம், மடற்பனை, பருத்தக் குண்டிகை, முடத்தெங்கு போன்றவற்றிற்கு நன்னூலார் உவமையாகக் கூறியுள்ளார்.

ஆசிரியராய் இருந்தும் பாடம் சொல்லும் குணம் இல்லாத ஆசிரியர்களும் அக்காலத்தில் இருந்துள்ளனர் என்பதை 'மொழி குணம் இன்மை' என்ற சொற்றொடர் மூலம் அறியலாம். ஆசிரியர் தொழிலுக்குரிய விருப்பம், ஆர்வம் ஆகிய குணங்களைக் கொண்டு பாடம் கற்பித்திடாத

ஆசிரியர் மொழிகுணம் இல்லாத ஆசிரியராவர். இன்றைய காலகட்டத்திலும் இத்தகை ஆசிரியர்கள் உள்ளனர். வருந்தி முயன்று பாடம் சொல்லித்தராமல் மாணவர்களைப் பார்த்து நீங்களே கற்றுக் கொள்ளுங்கள் என்று கூறிடும் சோம்பேறி ஆசிரியர்களும் இருக்கின்றார்கள். இவர்களைப் போன்றே சில சோம்பேறி ஆசிரியர்கள் இருந்து வந்துள்ளனர்.

உலகம் பழிக்கும் இழிந்த குணமுடைய ஆசிரியர்கள் அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர் என்பதை 'இழிகுண இயல்பும்' என்ற சொற்றொடர் அறிவுறுத்துகின்றது. ஒழுக்கத்திற்கு இலக்கணமாகத் திகழவேண்டிய ஆசிரியர்கள் அவற்றிலிருந்து நீங்க இகழத்தக்க எண்ணங்களையும் செயல்களையும் பெற்றிருந்தால் அவர்களை ஆசிரியர் என்று கூற இயலாது. பொய்யுரைத்தல், சூதாடுதல், காமக்களியட்டங்களில் ஈடுபடுதல் போன்றன யாவும் இன்றும் சில ஆசிரியர்களிடம் இருக்கின்றன.

தம்மிடம் கல்வி கற்கும் மாணவர்களில் சிலர் இயல்பாகவே அறிவுக் கூர்மையும் நுண்மதியும் உடையவர்களாய் இருப்பர். பாடங்கேட்ட அளவிலே அதன் பொருளை அறிந்து கொள்வர். இத்தகு அறிவு சான்ற மாணவரைக் கண்டு பொறாமை கொள்ளும் ஆசிரியர்கள் முந்தைய காலத்தில் இருந்துள்ளனர். இதேபோன்று அழுக்காறு உடைய ஆசிரியர்கள் இன்றளவும் இருந்து வருகின்றனர்.

அழுக்காறு போன்று தான் அவாவும் 'அவா' என்பது பேராசை மாணவர் கொடுத்த நேர்மையான ஊதியத்தைப் பெற்று மனநிறைவு அடைந்திடாமல் மிகுதியாகக் கேட்பது ஆசிரியருக்கு அழகன்று. இத்தகையோரும் ஆசிரியராகமாட்டார்.

ஆசிரியர் என்பார் மனத்தில் வஞ்சமற்றவராய் இருத்தல் வேண்டும். தாம் பெற்ற கல்விச் செல்வத்தைத் தம் மாணவருக்கு ஒழிவு

மறைவின்றி கற்றுத்தர வேண்டும். 'யாம் பெற்ற செல்வம் பெறுக வையகம்' என்ற பரந்த உள்ளத்தோடு தாம் கற்ற வித்தைகள் அனைத்தையும் வஞ்சமின்றிக் கற்பித்தலே ஆசிரியருக்கு அழகாகும். அவ்வாறின்றி வஞ்சித்துப் பாடம் சொல்வோர் அன்று முதல் இன்றுவரை இருந்துள்ளமையை அறியமுடிகின்றது.

பாடம் சொல்லும் ஆசிரியர்கள், பாடம் கேட்கும் மாணவர் அஞ்சி அலறி ஓடும்படி பாடம் சொல்லுதல் கூடாது. மாணவர் மனம் புண்படும் படியாகவும், வேதனையடையும் படியாகவும், கோபமுற்றுப் பேசுவதும், ஏசுவதும் ஆசிரியர்களிடம் இருக்கக்கூடாத குணங்களாகும்.

தொல்காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் ஆசிரியராகாதவர்க்குரிய உவமையாகக் கழற்கடம், மடற்பனை, முடத்தெங்கு, பருத்திக்குண்டிகை என்பனவற்றை ஒரே நூற்பாவாகக் கூறியுள்ளனர். பவணந்தியார் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி நூற்பாவின் வழி விளக்கம் தருகின்றார். பவணந்தியாரின் வரிசை முறையில் கழற்குடம், மடற்பனை, பருத்திக்குண்டிகை, முடத்தெங்கு என்று முடத்தெங்கை இறுதியாகக் கூறியுள்ளார்.

**கழற்குடம் போன்ற ஆசிரியர்**

> **"பெய்த முறையன்றிப் பிறழ உடன்தரும்**
> **செய்தி கழற்பெய் குடத்தின் சீரே"**
>
> ***(நன்.எழுத்து.32)***

என்ற நூற்பாவின் வழி பாடம் சொல்லும் ஆசிரியர் முன்னே கூறவேண்டிய வற்றைப் பின்னேயும் பின்னே கூறவேண்டியவற்றை முன்னே கூறியும் முறையற்ற வகையில் கல்வி கற்பிக்கும் ஆசிரியர் கழற்குடத்திற்கு ஒப்பாவர். இம்முறையால் மாணாக்கர்களுக்கு வீண் குழப்பமே ஏற்படும். பாடம்

சொல்லும் ஆசிரியர் ஆற்றொழுக்குப் போன்று உரைக்கப்படும் கருத்தைத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**மடற்பனை ஆசிரியர்**

மடல் அடர்ந்திருக்கும் பனை மரத்தில் பழம் கீழே விழும்வரை நாம் காத்திருக்க வேண்டும். அதனை அடைய மரத்தின் மீது ஏறினால் கூரிய மடல்கள் உடம்பில் கீறி இரத்தக் காயத்தை ஏற்படுத்திப் பழத்தை அடையாதவாறு தடுத்துவிடும். ஆசிரியர்களில் சிலர் இம் மடற்பனையைப் போன்றவர்களும் உண்டு. தாம் கற்றறிந்த கல்வியை அவ்வாசிரியரே மனம் விரும்பிச் சொன்னாலேயன்றி, மாணவர் அவரிடம் நெருங்கி வினவிக் கற்றறிய இயலாது. இத்தகையோரைப் பவணந்தியார்,

**"தானே தரக்கொளின் அன்றித் தன்பால்**
**மேவிக் கொளக் கொடா இடத்து மடற்பனை"**

***(நன்.எழுத்து.33)***

என்ற சூத்திரத்தின்வழி எடுத்துரைக்கின்றார். ஆசிரியரின் விருப்பத்திற்கு ஏற்பக் கல்வி கற்கும் போது நீண்டகாலம் செலவாகும். இதனால் மாணவர் சரியான காலத்திற்குள் கல்வி கற்க இயலாது.

**பருத்திக் குண்டிகை ஆசிரியர்**

குடுக்கைக்குள் பஞ்சை உள்ளே செலுத்துவதும் கடினம், செலுத்திய பஞ்சை வெளியே எடுப்பதும் கடினம். ஆவலுடன் பாடம் கேட்கச் செல்லும் மாணாக்கர்களுக்குத் தக்கவாறு ஆசிரியர் பாடம் சொல்லாது மாணாக்கர்களின் வற்புறுத்தலின்படி சிறிது கற்றுக்கொடுப்பர். இவர்கள் கற்பதிலும் கூட இதே நிலையைக் கையாள்வர். கற்கும் காலத்திலும் வருத்தத்தோடு கற்று அதனைக் கற்பிக்கும் காலத்திலும் எளிதில் கற்பிக்காதவர் ஆசிரியராகாதவர். இவர்களைப் பவணந்தியார்,

***“அரிதிற் பெயக்கொண்டு அப்பொருள் தான் பிறர்க்கு***

***எளிது ஈவில்லது பருத்திக் குண்டிகை”***

***(நன்.எழுத்து.34)***

*என்ற சூத்திரத்தின்வழி சுட்டுகின்றார்.*

**முடத்தெங்கிற்கு ஒப்பான ஆசிரியர்**

*பொருள் கொடுத்தல், வழிபாடு முதலியன குறைவறப் புரிந்து வரும் மாணாக்கர்க்குப் பாடம் சொல்லாது மாணாக்கர் அல்லாத பிறருக்குத் தாம் கற்ற கல்வியைக் கொடுப்பவர் முடத்தொங்கிற்கு ஒப்பாவர். முடத்தெங்கானது தன்னைப் பராமரித்து வளர்ப்பவர்க்கன்றி வேறொருவருக்குப் பயன்தரும் தென்னை மரம் முடத்தெங்கு என்று அழைக்கப்படும். இதனைப் பவணந்தியார்,*

***“பல்வகை உதவி வழிபடு பண்பின்***

***அல்லோர்க்கு அளிக்கும் அதுமுடத் தெங்கே”***

***(நன்.எழுத்து.35)***

*என்ற சூத்திரத்துள் விளக்கியுள்ளார். இத்தகைய ஆசிரியர்கள் ஏதோ ஒரு பள்ளியில் பணியாற்றுவார்கள். இவர்கள் தங்களின் அறிவாற்றலை பட்டிமன்றம், கருத்தரங்கு போன்ற நிகழ்ச்சிகளுக்காக பணம் ஈட்டும் நோக்கில் செலவிட வெளியூர் மற்றும் வெளிநாடுகளுக்குச் சென்றுவிடுவர். இவர்களது அறிவுத்திறன் அனைவரும் அறியப்பட வேண்டியது தான் என்றாலும் இவ்வாசிரியர்களை நம்பிக் கற்க வந்த மாணவர்கள் ஏமாற்றமடைகின்றனர். வெளி நிகழ்ச்சிகளுக்காகச் செல்லும் சில ஆசிரியர்கள் பள்ளி வேலைநாட்களில் செல்வதால் மாணவர்களின் பாடம் பாதிக்கப்படுகிறது. சில ஆசிரியர்களும் பாடத்தைத் திட்டமிட்டு நடத்தாமல் காலம் கருதி விரைவாகப் பாடத்தை நடத்தி முடித்துவிடுகின்றனர். இவர்களின் அறிவாற்றல் மாணாக்கர்களுக்கு முழுமையாகச் சென்றடையாமல் போய்விடுகின்றது. இதனால் அவ்வாசிரியரை*

நம்பி வந்த மாணவர்களின் நிலை கேள்விக்குறியாக உள்ளது. ஆசிரியர்கள் பள்ளிகளின் விடுமுறை நாட்களில் தங்களின் நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டு; மாணாக்கர்களுக்குப் பாடம் நடத்துவார்களேயாயின் அவர்களின் பணி சிறப்பாக அமையும். பெயருக்கும் பொருளுக்கும் ஆசைப்பட்டு மாணாக்கர்களைப் புறக்கணிப்பார்களேயாயின் இவ்வாசிரியர்கள் முடத்தெங்கிற்கு ஒப்பானவர்கள் என்பதை உணரமுடிகிறது.

'செய்யும் தொழிலே தெய்வம்' என்பதற்கு ஏற்ப அவரவர் செய்யும் தொழிலில் மனநிறைவோடு செயலாற்ற வேண்டும். பிற தொழில் செய்வோரைவிட ஆசிரியர்களுக்குப் பூரண மனநிறைவு வேண்டும். ஏனெனில் எதிர்காலச் சமுதாயம் மாணவர்களை நம்பியிருக்கிறது. நிகழ்கால மாணவர்கள் ஆசிரியர்களை நம்பியிருக்கிறார்கள்.

"ஓர் ஆசிரியர் தமது ஆசிரியர் தொழில் பற்றி உயர்வான எண்ணங்களைக் கொண்டிருந்தால் அத்தொழில் அதிகமான மனநிறைவும், தாழ்வான எண்ணங்கள் கொண்டிருந்தால் குறைவான மனநிறைவும் ஏற்படும்"[59] என்று கனகலட்சுமி குறிப்பிட்டுள்ளார்.

தொழிலில் மனநிறைவைத் தீர்மானிக்கும் காரணிகளாக ஊக்குவிப்புக் காரணிகள், பராமரிப்புக் காரணிகள் என்ற இருநிலைகளை 'கெஸ்பர்க்கு' என்பார் விளக்கியுள்ளார்.

**1. ஊக்குவிப்புக் காரணிகள்**

"✻ சாதனை (Achievement)

✻ ஏற்பளிப்பு (Recognition)

✻ கற்பித்தல் (Teaching work itself)

✻ பொறுப்பு (Responsipility)

✻ பணி உயர்வு (Advancement)

இத்தகைய காரணிகள் இருந்தால் மனநிறைவு ஏற்படும் இல்லையெனில் மனநிறைவு குறையும்.

**2. பராமரிப்பு காரணிகள்**

ஆசிரியர் தொழிலில் விருப்பமோ, வெறுப்போ ஏற்படுவது கீழ்க்கண்ட காரணிகளைப் பொறுத்ததாகும். அவை,

- ✱ பள்ளி விதிமுறைகளும் நிர்வாகமும்
- ✱ மேற்பார்வையிடுதலின் தரம்
- ✱ ஊதியம்
- ✱ ஆசிரியர் – தலைமையசிரியர் உறவுகள்
- ✱ பணிச்சூழலும் நிலைமையும்
- ✱ பணியின் தகுதிநிலை (Status)
- ✱ பணியின் நிரந்தரத் தன்மை
- ✱ பணியின் செய்திப் பரிமாற்றம்"[60]

போன்றவைகளாகும்.

**3. ஆசிரியர் தொழிலில் மனநிறைவை உயர்த்தும் வழிகள்**

"✱ பிற பணியாளர்களுக்கு இணையாக ஆசிரியர்களுக்குப் பொருத்தமான ஊதியம் வழங்கப்பட வேண்டும்.

✱ சிறப்பாகப் பணியாற்றும் ஆசிரியர்களுக்குப் பாராட்டும் பரிசும் கிடைத்திட வேண்டும்.

✱ பள்ளிச் செயல்களிலும் திட்டமிடுதலிலும் ஆசிரியர்கள் பங்கேற்க, ஊக்குவிக்கப்படுதல் வேண்டும்.

✱ பணி செய்வதற்கு உகந்த சூழல் பள்ளியில் நிலவுதல் வேண்டும்.

* ஆசிரியரின் புதுமையான கருத்துக்கள் ஏற்கப்பட்டு நடைமுறைப் படுத்துதல் வேண்டும்.
* ஆசிரியர் ஜனநாயகத் தன்மையுடன் மேற்பார்வையும் மதிப்பீடும் செய்யப்படுதல் வேண்டும்.
* பள்ளி மேலாண்மையில் ஆசிரியின் கருத்துக்கள் ஏற்கப்படல் வேண்டும்.
* ஆசிரியர் வழக்கமாகச் செய்யும்ஒரே மாதிரியான பணிகளைச் செய்திடாமல் அத்தொழிலில் வெவ்வேறு விதமான பணிகளை மேற்கொள்ள வேண்டும். சான்றாக வகுப்பில் கற்பிக்க மட்டுமே செய்யும் ஆசிரியர் செயலாய்வில் ஈடுபடலாம்.
* ஆசிரியர் தம் பணிகளைப் பிறர் ஏவுதலுக்கும் கட்டளைக்கும் காத்திராமல் தானே செய்யும் தற்சார்பு நடத்தையைப் பெறுதல் வேண்டும்.''[61]

**பாடஞ்சொல்லும் வரலாறு**

ஆசிரியர் பாடம் நடத்தும் பொழுது கையாள வேண்டிய வழிமுறைகளாகப் பின்வருவனவற்றைப் பவணந்தியார் கூறுகின்றார்.

***''ஈதல் இயல்பே இயம்பும் காலை***
***காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்***
***சிறந்துழி இருந்துதன் தெய்வம் வாழ்த்தி***
***உரைக்கப் படும்பொருள் உள்ளத்து அமைத்து***
***விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து***
***கொள்வோன் கொள்வகை அறிந்து அவன் உளங்கொளக்***
***கோட்டமில் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப''***

***(நன்.எழுத்து.36)***

பாடம் சொல்லும் போது உரிய காலமும் இடமும் செவ்வையாகப் பார்த்துப் பாடம் நடத்த வேண்டும் என்பதை உணர்த்தவே இதனைப் பவணந்தியார் கூறியுள்ளார். பாடம் எவ்வாறு நடத்துதல் வேண்டும் என்பதை உணர்த்துதலில் சில ஆசிரியர்கள் முறையாக உரிய காலமும் இடமும் அறிந்து பாடம் நடத்தப்படவில்லை என்பதும் புலப்படுகிறது.

பாடம் சொல்லும் முன்பு ஆசிரியர் தான் வழிபடும் கடவுளை வணங்கி அதன்பின்பு பாடத்தைத் தொடங்குதல் வேண்டும் என்கிறார். 'சிறந்துழி இருத்தல்' என்பது பாடம் சொல்வதற்கும் பாடம் கேட்பதற்கும் ஏற்ற சிறப்பான இடத்தில் அமர்தல் என்பது பொருள். மேலும் 'தெய்வம் வாழ்த்தி' என்பதன் மூலம் கடவுளைத் தொழுது பாடம் சொல்லல் வேண்டும் என்கிறார்.

**மாணாக்கர் வகை**

மாணாக்கர்களைத் தலைமாணாக்கர், இடைமாணாக்கர் கடைமாணாக்கர் என மூவகையாகப் பிரிக்கலாம். ஆசிரியர்களில் அனைவரும் திறமையானவர்கள் இல்லை. அதுபோன்று மாணாக்கர்களில் அனைவரும் முதல்நிலை மாணாக்கர்கள் இல்லை என்பதை மேலேகண்ட ஆய்வுகளின் வழி அறியமுடிகின்றது. ஆசிரியர் சொல்லும் பாடத்தினைத் தங்களின் அறிவுத் திறனுக்கு ஏற்ப மனத்தில் பதிய வைத்துக் கொள்ளும் மாணாக்கர்களை முதல், இடை, கடை மாணாக்கர்கள் என்று தரம் பிரித்து உவமைகளின் வழி விளக்குகின்றார் பவணந்தியார். இதனை,

**"அன்னம் ஆவே மண்ணொடு கிளியே**
**இல்லிக் குடம் ஆடு எருமை நெய்யரி**
***அன்னர் தலை, இடை, கடை மாணாக்கர்"***

***(நன்.எழுத்து.38)***

என்ற சூத்திரத்தின் வழி அறியலாம்.

மாணாக்கர்கள் குணத்தையும் குற்றத்தையும் பிரித்து ஆய்ந்து குணத்தை மட்டும் கொள்வர். மேலும் பாடம் சொல்லும் பொழுது முழுமையும் கேட்டு மனத்தில் நிறுத்தி, பாடம் சொல்லி முடித்த பின்பு மனத்தில் நிறுத்தியவைகளை வெளிக்கொணர்ந்து; சிந்தித்துச் செயல்படுபவர்கள் முதல்நிலை மாணாக்கர்கள். இவர்களுக்கு முறையே அன்னமும் பசுவும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

இடை மாணாக்கர்கள் என்பவர்கள் ஆசிரியர் எந்த அளவிற்கு முயற்சி எடுத்து மாணாக்கர்களைக் கற்க வைக்கின்றனரோ அந்த அளவிற்கே மாணாக்கர்கள் பயன்பெறுவர். முயற்சிக்கு ஏற்பப் பயன்பெறுவதால் இம்மாணாக்கர்கள் இடைமாணாக்கர்கள் எனப்படுகின்றனர். முறையே இவர்களுக்கு நிலமும் கிளியும் உவமையாகக் கூறுகின்றார்.

மேற்கண்ட எம்முயற்சிகளாலும் பயன்பெறாத மாணாக்கர்கள் கடைமாணாக்கர்கள். ஆசிரியர் சொல்லும் பாடத்தை மறந்துவிடுவர். கற்கும் போது ஒரு நிலையில் நில்லாது, எதனையும் முழுமையாகக் கற்காது, தான் மட்டும் அல்லாது ஆசிரியரையும் குழப்பமடையச் செய்து வருத்திப் பாடம் கேட்பர். இத்தகைய மாணாக்கர்களுக்கு இல்லிக்குடம், ஆடு, எருமை, நெய்யரி என்பன உவமைகளாகும்.

இம்மாணாக்கர்களைப் பற்றி ந.மு.வேங்கடசாமி நாட்டார் “மழைத்துளியானது முத்துச் சிற்பியின் வாயில் விழுந்தால் முத்தாகப் பரிணாமிக்கின்றது. தாமரை இலையில் விழுந்தால் விழுந்த அளவினதாக இருக்கின்றது. பழுக்கக் காய்ச்சிய இரும்பில் விழுந்தால் சுவறிவிடுகின்றது. அங்ஙனமே ஆசிரியன் கற்பிக்கும் நூற்பொருள் உத்தம மாணாக்கரைச் சார்ந்தால் விஷேச நலத்துடன் வெளிப்படுகின்றது; மத்திமரைச் சார்ந்தால் அவ்வளவில் நிற்கின்றது; அதமரைச் சார்ந்தால் பயனின்றி அழிந்துவிடுகிறது”[62] என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

சுந்தர சண்முகனார் “கற்பூரத்தைப் போல் சொல்லியதும் பற்றிக் கொள்ளும் மாணாக்கர்கள் முதல்மாணாக்கர்கள். விறகைப் போல் சற்று முயன்று பற்றிக் கொள்ளும் மாணாக்கர்கள் இடை மாணாக்கர்கள். வாழைமட்டையைப் போல் எவ்வளவு முயன்றும் பற்றாத மாணாக்கர்கள் கடை மாணாக்கர்கள்”[63] ஆவார்கள் என்று மாணாக்கர்களின் மூன்று தரம் பற்றித் தமிழர் கண்ட கல்வி எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

விவேகானந்தர் மாணாக்கர்களுக்கு ‘உண்மைக் கல்வி’ என்னும் தலைப்பில் 16 வகையான கட்டளைகளைக் கூறுகிறார். அவை பின்வருமாறு,

1. “மரியாதை செய்தல் – உன்னுடைய பெற்றோர், ஆசிரியர் மற்றும் மூத்தவர்களுக்கு மரியாதை செய்
2. அன்பு செய்தல் – உன்னுடைய நாடு, கலாச்சாரம் மற்றும் மூதாதையர்களை நேசி
3. உதவுதல் – ஏழை, கல்லாதவர், நோய்வாய்ப்பட்டவர்களுக்கு உதவிசெய்
4. தன் ஒழுக்கம் – உன்னுடைய உடல், உணர்வு, மற்றும் மனதை அடக்கி ஒழுக்கமாக வைத்திரு
5. தன்னடக்கம் – உன் சொல், எண்ணங்கள் மற்றும் செய்கைகளைக் கட்டுப்படுத்து
6. விசுவாசம் – உனக்கும் பிறருக்கும் கடவுளுக்கும் விசுவாசமாய் இரு
7. வித்யாசப்படுத்து – நன்மை, தீமை, உண்மை, பொய், துர்குணம், நற்குணம் இவற்றைப் பிரித்துப்பார்
8. கவனம் – படிப்பு, வேலை, விளையாட்டு, பக்தி ஆகியவற்றை முழுமனதுடன் கவனமாகச்செய்

9. உண்மையாய் இருப்பது – உன் சொல், எண்ணங்கள் மற்றும் செய்கைகளில் உண்மையாய் இரு

10. கடின உழைப்பு – கடின உழைப்புடன் ஆழ்ந்த அறிவும் திறமையும் விவேகமும் தேவை

11. பலம் – உடலாலும் மனதாலும் அறிவாலும் பண்பாலும் பக்தியாலும் தைரியமாய் இரு

12. திடநம்பிக்கை – திடநம்பிக்கையின் சக்தி – நன்மை, தூய்மை மற்றும் உண்மை ஆகும்

13. பக்தி – கடமை, சமயநூல், புனித அடியவர்கள் மற்றும் இறைவனைத் துதி

14. பழக்கம் – பிராத்தனை செய்தல், தியானித்தல் மற்றும் துணிவு தரும் நூல்களைப் படித்தல் இவற்றை முறையாகப் பழக்கு

15. ஒரு நோக்குத் தன்மை – நீ மற்றவர்களை எப்படிப் பார்ப்பாயோ அல்லது நடத்துவாயோ அதே மாதிரி நீ மற்றவர்களால் நடத்தப்படுவாய் என்பதை உணர்

16. திடமான தீர்மானம் – மனோதிடமும், நல்ல பழக்கமும் பயன் படுத்துகின்ற திடமான முடிவால் நிரந்தர மகிழ்ச்சி, அமைதி, வெற்றி மற்றும் மன நிறைவும் வாழ்வில் கிடைக்கும்"[64]

விவேகானந்தர் மாணாக்கர்களுக்குக் கூறியுள்ள இந்த அறிவுரைகளைப் பின்பற்றினால் முதல்நிலை மாணாக்கர்களாக விளங்குவதற்கு ஏற்புடையதாக அமையும்.

**மாணாக்கரல்லாதோர்**

உரையாசிரியர் மாணாக்கரல்லாதோர் பற்றிக் கூறும்போது மடி, மானி, பொச்சாப்பன், காமுகன், கள்வன், அடுநோய்ப் பிணியாளன், ஆறாச்சினத்தன், தடுமாறு நெஞ்சத்தவன் என்ற எட்டு வகையினரைத் தொல்காப்பியர் உரைத்துள்ளார். நன்னூலார் பதினைந்து வகையாக விரித்துக் கூறியுள்ளார். அவை கள் உண்பவன், சோம்பேறி, செருக்குடையவன், காமுகன், திருடன், நோயாளி, அறிவில்லாதவன், மாறுபாடு உடையவன், கோபம் உடையவன், மிகுதியாகத் தூங்குபவன், அறிவு நுட்பம் இல்லாதவன், பழைய நூல்களைக் கண்டு அஞ்சித் தடுமாறும் உள்ளம் படைத்தவன், அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சாதவன், பாவி, பொய் பேசுபவன் ஆகியோர்களைக் குறிப்பிடுகின்றார். உரையாசிரியர் கூறாத கள் உண்பவன், மிகுதியாகத் தூங்குபவன், அறிவு நுட்பம் இல்லாதவன், அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சாதவன், பாவி, பொய் உரைப்பவன் உள்ளிட்டவர்களை நன்னூலார் கூறியுள்ளார். இதனை,

***“களிமடி மானி காமி கள்வன்***
***பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்***
***துயில்வோன் மந்தன் தொன்னூற்கு அஞ்சித்***
***தடுமாறு உள்ளத்தன் தறுகணன் பாவி***
***படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே”***

***(நன்.எழுத்து.39)***

என்ற சூத்திரத்தில் விளக்கியுள்ளார். இத்தகையோர்க்குக் கல்வி கற்பித்தலால் எத்தகைய பயனும் இறாது என்பதை உணர்ந்தார் போலும்,

இம்மாணாக்கர்கள் தாங்கள் கெடுவதும் இன்றி ஏனைய பிற மாணாக்கர்களையும் கெடுத்துவிடுவர். ஆதலாலேயே கற்பிக்கக் கூடாதவர்கள் என்று பவணந்தியாரும் உரைத்துள்ளார். மாணாக்கராகாதவர்களுக்கு நன்னூலார் உவமை கூறவில்லை.

**பாடம் கேட்கும் முறை**

ஆசிரியர் எவ்வாறு பாடம் சொல்ல வேண்டும் என்று பவணந்தியார் கூறியுள்ளாரோ! அதேபோன்று மாணாக்கர்களும் பாடத்தை எவ்வாறு கேட்க வேண்டும் என்றும் விளக்குகின்றார். இதனை,

> **"கோடல் மரபே கூறுங்காலை**
> **பொழுதொடு சென்று வழிபடல் முனியான்**
> **குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்து**
> **இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்**
> **பருகுவன் அன்ன ஆர்வத்தான் ஆகிச்**
> **சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கிச்**
> **செவி வாயாக நெஞ்சு களனாகக்**
> **கேட்டவை கேட்டவை விடாது உள்ளத்து அமைத்துப்**
> **போவெனப் போதல் என்மனார் புலவர்"**
>
> ***(நன்.எழுத்து.40)***

என்ற நூற்பாவின் வழி விளக்குகின்றார். அஃதாவது பாடம் கேட்கும் மாணாக்கர் ஆசிரியர் வருவதற்கு முன்பாகச் சென்று; வழிபாடு செய்வதில் வெறுப்பில்லாதவனாய் ஆசிரியரின் குணம் அறிந்து அதற்கு ஏற்பப் பழகி அவரது குறிப்பினை அறிந்து அக்குறிப்பின்படி சேர்ந்து ஆசிரியர் 'இரு' என்றவுடன் இருந்து 'படி' என்றவுடன் படித்து; தாகம் உடையவன், நீரினை விரும்பிப் பருகுவதைப் போலவும், ஓவியம் எவ்வாறு அசையாமல் இருக்குமோ அதுபோல இருந்து மனம், மொழி, மெய்களால் அடங்கி, காதுகளைக் கல்வியைப் பருகும் வாயாகவும், மனத்தையே கொள்ளும் இடமாகிய வயிறாகவும் கொண்டு ஆசிரியர் கூறியதை மறந்துவிடாமல் உள்ளத்தில் பதியவைத்துக் கொண்டு 'போ' என்று சொல்லிய பின்னர்ப் போதல் வேண்டும். இவ்வாறாக மாணாக்கர்கள் ஆசிரியர்களிடத்தில் பாடம் கேட்டல் வேண்டும் என்கிறார் பவணந்தியார்.

“தூய்மை (Purity), அறிவைத் தேடுவதில் உண்மையான தாகம், விடாமுயற்சி (Perseverance), பொறுமை (Endurance) ஆகியன மாணவரின் பண்புகளாக இருத்தல் வேண்டும்”[65] என்கிறார் கோகிலா தங்கச்சாமி. தேடலும், விடாமுயற்சியும், பொறுமையுமே ஒரு மாணவனை சிறந்த மாணவனாக உருவாக்க முடியும்.

**நூலைப் பயிலும் முறை**

பயிலும் போது நமக்கு ஏற்படுகின்ற ஐயங்களைத் தீர்க்க வேண்டுமாயின் பவணந்தியாரின் கூற்றுப்படி மாணாக்கர்கள் நூலைப் பயிலுதல் வேண்டும்.

ஆசிரியர் உரைத்த மூலப் பாடத்தை மறவாது தான் கேட்டவற்றை எல்லாம் பலமுறை சிந்தித்து ஆசிரியரை அடுத்துத் தான் கேட்ட கருத்துக்களைத் தன் மனத்தில் பதியுமாறு மீண்டும் கேட்டு, இவ்வாறு கற்கும் மாணவர்களோடு பழகி தான் ஐயப்பட்ட பொருளைக் கேட்டும் அவர்களின் ஐயத்தைத் தீர்த்தும் நூலைப் பயிலுதல் வேண்டும் என்கிறார். இவ்வாறு பயிலும் போது உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்னும் இருவகை வழக்குகளையும் அறிந்து பயிலுதல் வேண்டும். இதனை,

***“ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்***
***பெருக நூலில் பிழைபாடு இலனே”***

***(நன்.எழுத்து.42)***

***“முக்காற் கேட்பின் முறையறிந்து உரைக்கும்”***

***(நன்.எழுத்து.43)***

என்பதன் வழியே விளக்குகின்றார்.

இதன்வழி முதல்நிலை மாணாக்கன் மூன்றுமுறை பாடம் கேட்பின் அவன் ஆசிரியரைப் போன்று, கற்பித்த முறையை அறிந்து பிறருக்குக் கற்றுக்

கொடுக்க முடியும் இடை, கடை மாணாக்கர்கள் நூலை ஐயமின்றிக் கற்க முடியும்.

இவ்வாறு ஆசிரியர் கற்பித்த பொருளைத் தன் மனத்தில் நிறையக் கொண்டாலும் ஆசரியனது புலமைத் திறத்தில் கால் பங்கு பெறுவானே தவிர அதைவிட அதிகமாகப் பெறமாட்டான் என்றும் பவணந்தியார் கூறுகின்றார். இதனை,

***"ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்***
***கால்கூறு அல்லது பற்றலன் ஆகும்"***

***(நன்.எழுத்து.44)***

என்ற நூற்பாவின் வழி விளக்குகின்றார்.

முழுமையான அறிவையும் திறமையையும் பெறவேண்டுமாயின் கற்கும் தொழிலையுடைய மாணவர்களோடு பழகும் வகையால் கால்பங்கும், தான் கற்றதைத் தன் மாணவர்க்கும் அவையினருக்கும் தெளிவாகச் சொல்லுதலால் ஏனைய அரைப்பங்கும் பெற்று முழுமையான அறிவையும் திறமையையும் பெறமுடியும் என்கிறார்.

'அவ்வினையாளரொடு பயில்வகை ஒருகால்' என்றமையால் கற்கும் தொழிலையுடைய மாணவர்கள் என்றது. இங்கே நன் மாணாக்கர்களைக் கூறியுள்ளமையும் 'செவ்விதின் உரைப்ப' என்றமையால் கருத்தரங்கில் எடுத்துரைத்தலையும் கூறியுள்ளார்.

**ஆசிரியரை வழிபடும் முறை**

ஆசிரியரை வழிபடும் முறை பற்றித் தொல்காப்பியத்தில் உரைக்கப்படவில்லை. பவணந்தியாரே ஆசிரியரை எவ்வாறு வழிபடல் வேண்டும் என்று எடுத்துரைக்கின்றார்.

**“அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி**
**நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமொழி**
**எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம்**
**அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடே”**

**(நன்.எழுத்து.46)**

இந்நூற்பாவின் வழி ஆசிரியர் மாணவர் உறவு எவ்வாறு அமைய வேண்டும் என்பதையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

மாணாக்கர்கள் ஆசிரியரிடத்தில் பழகும்போது குளிர் காய்பவன் எவ்வாறு நெருப்பினை நீங்காமலும் நெருங்காமலும் இருக்கின்றானோ அவ்வாறே ஆசிரியரிடம் பழகுதல் வேண்டும். இது மாணாக்கர்களுக்கு மட்டுமின்றி ஆசிரியருக்கும் பொருந்துமாம். மாணாக்கன் ஆசிரியரின் பின்னால் நிழல் போலச் சென்று அன்புடன் ஆசிரியர் எவ்வகையால் மகிழ்ச்சி அடைவாரோ அவ்வகையோடு பொருந்தி அறவழியிலிருந்து மாறுபடாமல் நடத்தலே மாணவன் ஆசிரியரை வழிபடும் முறை என்கிறார்.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர் இருவரும் தொல்காப்பியப் பாயிரத்திற்கு உரையெழுதிய காலத்தில் ஆசிரியரை வழிபடும் முறைபற்றிக் குறிப்பிடவில்லை. நன்னூலில் ஆசிரியரை வழிபடும் முறை பற்றிக் கூறியிருப்பதை உற்று நோக்கும்போது நச்சினார்க்கினியர், இளம்பூரணர் இவ்விருவரின் காலத்தில் ஆசிரியர் மாணவர் உறவுமுறை என்பது சரிவர அமைந்துள்ளது. அதன் பின்னரே இவ்உறவில், அவ்வழிபாட்டில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. அதனைக் களையும் முகமாக நன்னூலில் பவணந்தியார் ஆசிரியரை வழிபடும் முறை பற்றிக் குறிப்பிடுகின்றார்.

இவற்றினின்று நன்னூல் எழுந்த காலத்தில் இருந்து ஆசிரியர் மாணவர் உறவுமுறையில் மாற்றங்கள் ஏற்படத் தொடங்கிவிட்டன என்பதை உணரமுடிகிறது.

கல்வி கற்கப் பணம் இன்றியமையாதது என்பதை எடுத்துரைப்பதும் நன்னூலே. ஒரு காலத்தில் நிகழ்ந்த ஒன்றை மீண்டும் எடுத்தாளப்படுவதன் நோக்கம் அது சரிவர மக்களைச்சென்றடையாமை அல்லது அதன் தாக்கம் என்பது அதிகரித்துவிட்டமை என்று கொள்ளலாம்.

இவ்வுறவு முறை பின்வரும் காலகட்டங்களில் எவ்வாறு இருந்தன என்பது அடுத்துவரும் இயல்களில் சுட்டப்பெற்றுள்ளன.

இவற்றினின்று பார்க்கும் பொழுது தொல்காப்பியர் காலத்தில் ஆசிரியர்களுக்குச் சிறந்த மதிப்பு இருந்துள்ளது என்பது அறியப்படுகின்றது.

**தொகுப்புரை**

- மனித இனம் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளதைப் போன்று நம் கல்விமுறையும் பல கல்விமுறையும் பல வளர்ச்சி நிலைகளைக் கடந்து வந்துள்ளது.

- மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த காலத்தில் தனது முதற்கல்வியை இயற்கையிடமிருந்து கற்றுள்ளான்.

- நாகரிகம் வளர்ச்சி பெற்ற நிலையில் ஒலியின் அவசியத்தையும் மொழியின் அவசியத்தையும் உணர்கின்றான்; மொழி பிறக்கின்றது. தான் கற்றுக் கொண்டதை அடுத்துவரும் தன் குடும்பத்தார்க்கும் தன் கூட்டத்தார்க்கும் திரும்பத் திரும்பச் சொல்லி மனத்தில் படியவைக்கின்றான். தொடக்கக் காலக்கல்வி வாய்மொழியாகக் கற்பிக்கப்பெற்றன.

- ஏடும் எழுத்தாணிகளும் பயன்படுத்திய காலத்தை முதன்முதலில் முத்தொள்ளாயிரத்தின் வாயிலாக அறியமுடிகின்றது.

✳ கல்வி சங்க காலத்தில் ஒரு சிலரின் உரிமையாக இல்லை. எக்குலத்தைச் சார்ந்தவர்களும் செல்வந்தர்களும் வறியவர்களும் மன்னரும் எளிய குடிமக்களும் ஆண்களும் பெண்களும் கல்வியைத் தேடிப்பயின்றனர்.

✳ பள்ளி என்ற சொல் சங்க காலத்திற்கு முன்பு பாடம் கற்பிக்கும் இடத்தையும் அதன் பின்னால் பள்ளிக்கூடம், படுக்கையறை என்ற இருநிலைகளிலும் வழங்கப்பட்டன. (சீவகசிந்தாமணி – சமணப்பள்ளி)

✳ வில், வாள், வேல், அம்பு ஆகிய கலைகளைக் கற்றுக் கொடுக்கும் இடத்திற்குக் கல்லூரி எனும் பெயரைத் திருத்தக்கத்தேவர் பயன்படுத்தியுள்ளார்.

✳ கல்வி, கலை கற்பிப்பவர் ஆசிரியர் என்று வாழ்வியல் களஞ்சியம் பொருள் தருகின்றது.

✳ கல்வி கற்பித்தவர்கள் கணக்காயர், வித்துவான், மகாவித்துவான், கவிராயர், நாவலர், புலவர், குரு, குரவன், உபாத்தியாயர், குலபதி என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர். ஆசான், ஆசிரியர், தேசிகர், பண்டிதர் என்ற பெயர்களாலும் முற்காலத்தில் அழைக்கப்பட்டனர்.

✳ கணக்கும் இலக்கணமும் கற்பிப்பவர் கணக்காயர், இலக்கியம், நிகண்டுகள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், கற்பிப்பவர்கள் வித்துவான், புலவர், உபாத்தியாயர் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

✳ கற்பிப்பவர் அனைவரும் ஆசிரியர் எனப் பொதுப்பட அழைக்கப்பட்ட போதும் இடைநிலை ஆசிரியர், முதுநிலை ஆசிரியர், விரிவுரையாளர், உதவிப் பேராசிரியர், இணைப்பேராசிரியர், பேராசிரியர் என்று அழைக்கப்படுவது போன்று கற்பிக்கும் கல்விக்கு ஏற்ப அக்கால கட்டங்களில் வேறுவேறு பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

✳ இசை, கூத்து முதலிய கலைகளைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் ஆடற்கமைந்த ஆசான், தலைக்கோலாசான் என்றும் அழைக்கப்பட்டனர்.

✳ தொல்காப்பியர் ஆசிரியர்களைப் 'புலவர்' என்று அழைக்கின்றார். வேங்கடசாமி நாட்டார் நூலாசிரியர், உரையாசிரியர், போதக ஆசிரியர் என்று வகைப்படுத்துகின்றார்.

✳ ஆசிரியர் உயர்ந்த மதிப்புப் பெற்றவராகவும், பொறுமைக் குணமுடையவராகவும், அனைத்தும் கற்றறிந்தவராகவும் இருத்தல் வேண்டும். மாறாக மாணாக்கர்களுக்குப் பாடத்தின் பால் அச்சத்தை ஏற்படுத்துபவராகவும், மாணவர்களைக் குழப்பமடையச் செய்பவராகவும், மாணாக்கரல்லாத பிறருக்குக் கற்றுத்தந்து பொருளாசை உடையவராகவும் இருத்தல் கூடாது என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

✳ கற்பிக்கும் ஆசிரியர் ஆழ்ந்த அறிவுடையவராகவும் மாணாக்கர் அறிந்து கொள்ளும் வகையினை அறிந்து முதல், இடை, கடை என்ற மூவகை மாணாக்கர்க்கும் புரியுமாறு கற்பித்தல் வேண்டும்.

✳ பள்ளியில் மாணவன் ஆசிரியரின் மகனாகவே வளர்கின்றான். கல்வி கற்க ஆசிரியர்க்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து பொருள் கொடுத்துக் கற்றான். மாணவரைப் பற்றி ஆசிரியர் முழுமையும் அறிந்த பின்னரே பள்ளியில் அனுமதிக்கின்றார். ஆசிரியர்தமது வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை மாணாக்கர்களிடமிருந்தே பெற்றுள்ளார்.

✳ மாணக்கர்களின் தலைவன் சட்டாம்பிள்ளை என அழைக்கப்பட்டான்.

சட்டான் – ஓலைச் சுவடி படிப்போன்

சட்டநம்பி – திண்ணைப்பள்ளி மாணவர் தலைவன்

* கற்கும் மாணவன் ஆசிரியரிடம் பணிந்து கற்றல் வேண்டும். ஆசிரியர்க்கு எவ்வளவும் கீழ்ப்படிந்து ஊழியஞ் செய்தாலும் அவை மாணாக்கரின் உயர்ச்சிக்குக் காரணமாகும்.

* எந்த மாணவன், கடமை தவறதவனாகவும், தூயவனாகவும், வித்தையை ஏற்றுக்கொள்பவராகவும், கவனம் நிறைந்தவனாகவும் இருக்கின்றானோ அவன் சிறந்த மாணவனாகக் கருதப்பெற்றான்.

* சோம்பேறி, செருக்குடையவன், பொறாமைக்குணம் உடையவன், காமுகன், கள்வன், தீராத நோயினை உடையவன், ஆறாச் சினத்தன் ஆகியோர் கல்வி கற்கத் தகுதியற்றோராகக் கூறப்பட்டுள்ளது.

* நல்ல குணங்களையும், பண்புகளையும் கொண்டவர்களுக்கு மட்டுமே கல்வி கற்றுத்தரப்படல் வேண்டும் என்பதில் தீர்மானமாக இருந்துள்ளனர்.

* மாணாக்கனின் அறிவுத் திறனுக்கு ஏற்ப முதல் தரம், இரண்டாம் தரம், மூன்றாம் தரம் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளனர்.

* பாடம் கேட்கும்பொழுது மாணவன் ஆசிரியர் கூறிய கருத்துக்களை மனத்தில் நிறுத்தி அத்தகைய மாணாக்கர்களோடு பழகுவதால் பாதிக் கல்வியைப் பெறுகின்றான். பின்பு அப்பாடத்தில் புலமையுடையோரிடம் கேட்டுணர்ந்து மறுபாதியையும் பெறுகின்றான்.

* தொல்காப்பியமும் இளம்பூரணரின் உரையும் நன்னூலின் முதல் நூலாகும். தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய இலக்கியங்களையும் உலக வழக்கினையும் ஆராய்ந்து பவணந்தியார் இலக்கணம் கூறுகின்றார்.

* பவணந்தியார் ஆசிரியர்க்குரிய பண்புகள் குணநலன்கள் ஆகியவற்றை எடுத்துக் கூறும்பொழுது உயர்ந்த மதிப்பு, நற்குணம்,

பொறுமை, உலகியல் அறிவு ஆகியவற்றோடு நற்குடிப்பிறப்பும், கடவுள் வழிபாடு உடையவராகவும் இருத்தல் வேண்டும் என்று கூறுகின்றார்.

* ஆசிரியரல்லாதோர் பற்றிக் குறப்பிடும் பொழுது கழற்குடம், மடற்பானை, முடத்தெங்கு, பருத்திக் குண்டிகையோடு பாடம் சொல்லும் குணம் இல்லாதவர்களும் இழிந்த குணத்தை உடையவரும் ஆசிரியராகமாட்டார் என்று கூறியுள்ளார்.

* இவற்றினின்று காலம் மாற்றம் பெறும் பொழுது ஆசிரியராய் இருப்பவர்களுக்குரிய தகுதிகள் அதிகரித்துக் கொண்டு செல்கின்றன என்பதைப் பவணந்தியார் குறிப்பிட்டுள்ளார்.

* கற்பிக்கும்முறை பற்றிக் கூறும்பொழுது தொல்காப்பியர் பொழிப்பு, அகலம், நுட்பம், பல்லுரை பயில்தல் போன்ற தன்மைகளோடு தெளிந்த அறிவினையுடையோர் கற்பிக்க வேண்டும் என்கிறார். பவணந்தியார் கற்பிப்பதற்கு உரிய காலத்தையும் இடத்தையும் தேர்வு செய்து தெய்வத்தைத் தொழுது விரைவாகக் கூறாமலும், கோபம் கொள்ளாமலும், விருப்பத்துடனும் முகமலர்ச்சியோடும் மாணவன் ஏற்றுக்கொள்ளும் தன்மை அறிந்து கற்பித்தல் வேண்டும் என்கிறார்.

* மேற்கூறிய முறைகள் தொல்காப்பியர் காலத்தில் இம்முறை குறிப்பிடப்படவில்லை. தொல்காப்பியம் அன்போடு பாடம் நடத்துதல் வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளது. விரையாது, வெகுளாது என்பன நன்னூலார் குறிப்பிடுபவை. பாடம் கூற விளைபவர் ஆழ்ந்த அறிவு, பாடத்தில் தெளிவு ஆகியவற்றைப் பெற்றிருந்த போதிலும் அதனை வெளிப்படுத்தும் முறையும் இன்றியமையாதது என்று பவணந்தியார் குறிப்பிட்டுள்ளார்.

* மாணாக்கர்களைப் பாகுபாடு செய்வதில் இவர்களுக்கு இடையே மாறுபாடு கிடையாது. நன்னூலார் கூடுதலாக உவமைகளைக் கூறி விளக்குகின்றார்.

* கற்பதற்குத் தகுதியற்றவர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது பவணந்தியார் ஏழையைக் குறிப்பிட்டுள்ளார். அவரது காலத்தில் கல்வி கற்கப் பணம் இன்றியமையாததாக இருந்துள்ளதை உறுதி செய்கின்றது.

* நூலைக் கற்கும் முறையில் தொல்காப்பியர் நன்னூலார் இவ்விருவருக்கு மிடையே மாறுபட்ட கருத்து இல்லை. பவணந்தியார் ஆசிரியரை வழிபடும் முறை பற்றித் தனியாகக் குறிப்பிடுகின்றார். முதல் நூலான தொல்காப்பியம் வழிபாடு பற்றிக் குறிப்பிடாத பொழுது வழிநூல் குறிப்பிட்டுள்ளமையை நோக்கும் பொழுது தொல்காப்பியர், பவணந்தியார் காலத்திற்கு இடைப்பட்ட காலத்தில் ஆசிரிய வழிபாட்டில் குறைபாடு நிகழ்ந்துள்ளமையை அறியமுடிகின்றது.

## அடிக்குறிப்பு எண்கள்

1. மாணிக்கவாசகர், திருவாசகம், ப.116
2. இளம்பூரணம், (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.30
3. மேலது, ப.590
4. ந.சி.,கந்தசாமிப்பிள்ளை, சரித்திர காலத்திற்கு முற்பட்ட தமிழர், ப.5
5. மு.கோவிந்தராசன், மொழித்திறன்களும் சில சிக்கல்களும், ப.56
6. இளம்பூரணம், (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.521
7. முத்தொள்ளாயிரம், ப.75
8. ஜெ. ஸ்ரீசந்திரன், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.520
9. கி.வா. ஜகந்நாதன், (ப.ஆ.), தனிப்பாடல் திரட்டு, (முதற்தொகுதி), ப.8
10. தி. பட்டுச்சாமி ஓதுவார்,(ப.ஆ.), கந்தபுராணம், ப.86
11. மு. கோவிந்தராசன், தமிழ்நூல்களில் கல்வி, ப.15
12. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப.158
13. இளம்பூரணம், (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.360
14. மேலது, ப.58
15. எஸ். கௌமாரீஸ்வரி, (தொ.ஆ.), பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், ப.392
16. ஞா. தேவநேயப்பாவாணர், (உ.ஆ.), திருக்குறள் தமிழ் மரபுரை, ப.443
17. எஸ். கௌமாரீஸ்வரி, (தொ.ஆ.), பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ப.980
18. மேலது, ப.930
19. உ.வே. சாமிநாதையர், (ப.ஆ.), குறுந்தொகை, ப.50
20. ஜெ. ஸ்ரீசந்திரன், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.460
21. உ.வே. சாமிநாதையர், (ப.ஆ.), நல்லுரைக்கோவை முதற்பாகம், ப.121
22. தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, வாழ்வியல் களஞ்சியம், தொகுதி–1, ப.266

23. பி.விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர், ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக்கட்டுரை, ப.483

24. மயிலை.சீனி. வேங்கடசாமி, 19 ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப.50

25. ஞா. தேவநேயன், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், ப.139

26. நக்கீரர் உரை, இறையனார் அகப்பொருள், ப.10

27. கோவை இளஞ்சேரன் ஆய்வுக் கட்டுரைகள், ப.35

28. புலியூர், கேசிகன், சிலப்பதிகாரம், ப.47

29. பசுபதி, உ.வே.சா. வாழ்வும் தொண்டும், ப.24

30. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி–1, ப.72

31. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–2, ப.266

32. கோகிலா தங்கச்சாமி, இந்திய சமுதாயத்தில் கல்வி, ப.35

33. இளம்பூரணம். (உ.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.358

34. மேலது, ப.552

35. மேலது, ப.30

36. மேலது, ப.336

37. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர். ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.482

38. மேலது, ப.482

39. மேலது, ப.487

40. பதிப்பாசிரியர் குழு, வளர்தமிழ் ஆய்வுக்கோவை 2008, ப.591

41. பசுபதி. உ.வே.சா. வாழ்வும் தொண்டும், ப.24

42. ஞா. தேவநேயன், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், ப.141

43. கே. பழனிவேலு, கல்வி வரலாறு, ப.15

44. ஞா. தேவநேயன், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், ப.141

45. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.488

46. மேலது, ப.141

47. மேலது, ப.486

48. மேலது, ப.488

49. ம. இராசமாணிக்கம் பிள்ளை, பழமொழி நானூறு, ப.3

50. சோம. இளவரசு, (உ.ஆ.), நன்னூல் விருத்தியுரை, ப.4

51. ஞா. தேவநேயப்பாவாணர், (உ.ஆ.), திருக்குறள், தமிழ்மரபுரை, ப.122

52. மேலது, ப.110

53. க. கனகலெட்சுமி, (ஆய்வாளர்), நன்னூலாரின் கல்விச் சிந்தனைகள், ப.44

54. ஞா. தேவநேயப்பாவாணர், (உ.ஆ.), திருக்குறள், தமிழ்மரபுரை, ப.251

55. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.481

56. ஏ.கே. செட்டியார், (தொ.ஆ.), பண்பு, ப.125

57. பதிப்பாசிரியர் குழு, வளர்தமிழ் ஆய்வு, ஆய்வுக் கட்டுரை 2008, ப.592

58. ஏ.கே. செட்டியார், (தொ.ஆ.), பண்பு, ப.125

59. க. கனகலெட்சுமி, (ஆய்வாளர்), நன்னூலாரின் கல்விச் சிந்தனைகள், ப.49

60. கோகிலா தங்கச்சாமி, கலைத்திட்டமும் கல்வி மேலாண்மையும், ப.188

61. மேலது, பக்.189–190

62. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.488

63. வீ. சந்திரன், தமிழர் கண்ட கல்வி, ப.108

64. விவேகானந்தர், உண்மைக் கல்வி, பக்.2–3

65. கோகிலா தங்கச்சாமி, இந்தியச் சமூகத்தில் கல்வி, ப.37.

### இயல் இரண்டு

## காலந்தோறும் ஆசிரியர் மாணவர் உறவுநிலைகள்

### முன்னுரை

ஆசிரியர்களும் மாணாக்கர்களும் முற்காலத்திலிருந்தே இருந்து வந்துள்ளனர் என்பதைத் தமிழ் இலக்கிய, இலக்கணங்கள் எடுத்தியம்புகின்றன. சமுதாயத்தில் ஆசிரியர்கள் அனைவராலும் மதிக்கப்பெற்று உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தமையும் மாணாக்கர்கள் அவர்களுக்குப் பணிந்து நடந்தனர் என்பதையும் அறியமுடிகின்றது. ஆசிரியர் என்பவர் யார்? அவர் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும், எவ்வாறு நடந்து கொள்ளக்கூடாது என்பன பற்றியும் அதுபோன்றே மாணாக்கர் என்போர் யார்? அவர்கள் எவ்வாறு நடத்தல் வேண்டும், எவ்வாறு நடந்துகொள்ளக் கூடாது என்பன பற்றியும் இலக்கணங்கள் வழி கண்டறியப்பட்டன. இலக்கியங்களில் இத்தகைய பதிவுகள் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதைக் கண்டறியும் முகமாக இவ்வியல் அமைகின்றது.

இலக்கணங்களைவிட இலக்கியங்கள் அந்தந்தக் காலகட்டச் சூழ்நிலைகளைத் தெளிவாக எடுத்துக்காட்டவல்லவை. ஏனெனில் இலக்கியம் சமுதாய இயங்குநிலையை வெளிப்படுத்துவதை முதன்மையாகக் கொண்டது. ஒரு புலவன் அவன் கண்ட சமூக இயக்கங்களை இலக்கியமாக வெளிக்கொணர் கின்றான். அவற்றின் அடிப்படையில் இவ்வியல் அமைகின்றது. முதலாவதாக ஆசிரியர், மாணவர் இருவருக்கும் உள்ள பொதுப்பண்புகள் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து ஆசிரியர், மாணாக்கர் பற்றிய பதிவுகள் இடம்பெறுகின்றன.

### ஆசிரியர் மாணவர்களுக்கான பொதுப்பண்புகள்

சங்க காலத்தில் கல்வி உயர்நிலையில் விளங்கிற்று என்பதை அக்காலத்தில் பாடல்கள் இயற்றிய புலவர்களின் பெயர்களைக் கொண்டே

அறியமுடிகின்றது. ஆசிரியர் என்ற அடைமொழி கொண்ட புலவர்கள் சங்ககாலத்தில் எண்ணற்றோர் இருந்தனர். “ஆசிரியன் பெருங்கண்ணன், கிடங்கில் குலபதி நக்கண்ணனார், மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார், மதுரைப் பாலாசிரியன் சேந்தன் கொற்றனார். மதுரைப் பாலாசிரியன் நற்றாமனார், மதுரைப் பாலாசியர் நப்பாலனார், மதுரை வேளாசனார், முக்கோல் ஆசான் நல்வெள்ளையார்”[1] போன்ற புலவர்களைக் குறிப்பிடலாம். இப்பெயர்கள் அனைத்தும் அக்காலப் புலவர்கள் தாங்கள் கற்ற கல்வியால், தொழிலால் பெற்ற பெயர்கள் என்பது அறியப்படுகின்றது.

**சங்க காலத்தில் ஆசிரியர் மாணவர் நிலை**

சங்க காலத்தில் ஆசிரியர்களின் நிலை எவ்வாறு இருந்தது என்பதை,

> **“உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்**
> **பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே”**
>
> **(புறம்.183)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது. தன்னுடைய ஆசிரியர் வறுமையுற்றவிடத்து அவற்றைத் தீர்க்கும் பொருட்டு உதவி செய்தும் மிகுந்த பொருளைக் கொடுத்தும், ஆசிரியரை வழிபடுதலில் வெறுப்புக்காட்டாது கல்வி கற்றல் ஒருவர்க்கு அழகு என்கிறது.

ஒரு தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் பலர் இருப்பினும் கல்வி கற்றவன் ஏனையோரிடமிருந்து மிகுந்த மதிப்பும் மரியாதையும் பெறுகின்றான். தாய் என்பவள் தான் பெற்ற பிள்ளைகளிடத்திலே வேறுபாடு காட்டமாட்டாள். அனைவரையும் ஒன்றாகவே கருதுவாள். தான் பெற்ற பிள்ளைகளைப் பிரித்துப் பார்க்கும் எண்ணம் தாய்க்குக் கிடையாது. அத்தகைய தாயின் மனத்தையும் ஒருவன் கற்கும் கல்வியானது மாற்றிவிடுகிறது. அத்தகைய

சிறப்பினைத் தருவது கல்வி, அக்கல்வியை நமக்குக் கற்றுத் தருபவர் ஆசிரியர் ஆதலால் ஆசிரியரை வழிபடுதலில் நாம் வெறுப்புக் காட்டுதல் கூடாது.

அறிவுடையவனையே அரசனும் விரும்புவான். கல்வி கற்றவன் கீழ்க்குலத்தில் பிறந்தவன் என்றாலும் அவனை இச்சமூகமானது கீழ்க்குலத்தில் பிறந்தவன் என்று பாராது. அவன் பெற்ற கல்விச் சிறப்பால் மேற்குலத்தில் பிறந்தவனாயினும் கீழ்க்குலத்தில் கல்வி, கற்றவனை வழிபட்டு நிற்பான். அத்தகைய பெருமையைக் கல்வி கற்றவனுக்குத் தருகின்றது. இதனையே

**"மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு"**[2]

***(குறள்.409)***

என்று திருக்குறளும் கூறுகின்றது. ஆதலால் அத்தகைய மேன்மையான கல்வியைக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியரை வழிபடும்போது வெறுப்பின்றி உள்ளன்போடு வழிபட்டுக் கற்க வேண்டும் என்கிறது.

ஆசிரியர்கள் இத்தகைய சிறப்புக்களைப் பெற்று வந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. மாணாக்கர்கள் ஆசிரியர்களை எந்த அளவிற்கு மதித்து வந்துள்ளனர் என்பதையும் பிறர் மதிக்கும் அளவிற்கு ஆசிரியர்களும் நடந்து கொண்டமையும் அறியமுடிகின்றது.

ஆசிரியரின் செயல்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை கலித்தொகை

***"கற்பித்தான் நெஞ்சமுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்***
***தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்***
***ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான், மற்றுஅவன்***
***எச்சத்துள் ஆயினும், அஃது எறியாது விடாதேகாண்;"***

*(கலி.149:4–7)*

என்ற பாடலடிகளின் மூலம் விளக்குகிறது. தனக்குத் துன்பம் வந்தபோது உதவியவனுக்கு நன்றியுணர்வோடு அவ்வுதவியைத் திரும்பச் செய்யாதவன் தன்

செயலாலே நலிந்துபோவான். எவ்வாறெனில்; கற்பித்த ஆசிரியன் தன் மாணவனிடம் பொருள் ஒன்றும் பெறாது வருந்தும் போது அம்மாணவன் நன்றியின்றி நடந்து கொண்டால் கல்வி கற்றலில் கடமை தவறியவனாகத் தன் செயலாலேயே நலிந்து போவான். அவன் மறுபிறவி எடுப்பினும் அத்தீவினை அவனை விடாது என்று குறிப்பிட்டுள்ளது.

ஊதியத்தின் இன்றியமையாமையைப் பற்றி நீதி நூல்களும் எடுத்துரைப்பதால் ஊதியம் பெறாமல் தவித்துள்ளமை சங்க காலத்திலிருந்தே தொடங்கி யுள்ளமையை அறியமுடிகின்றது. ஆசிரியருக்குத் தரவேண்டிய கூலியைத் தராமல் ஏமாற்றும் மாணாக்கர்கள் இப்பிறவியிலில்லாது மறுபிறவியிலும் துன்பப்படுவார்கள் என்பது ஆசிரியரின் கூலியை வைத்திருக்க வேண்டாம் என்பதை எடுத்துரைக்கின்றது. இவற்றின் வழி ஆசிரியர்கள் சங்ககாலம் முதல் மாணாக்கர்களிடமிருந்து பொருளைப் பெறாமல் தங்கள் பணியைச் செய்து வந்ததையும் ஆசிரியரின் பெருமையையும், கூலி கொடுக்காத மாணாக்கனின் சிறுமையையும் அறியமுடிகின்றது.

**திருக்குறளில் ஆசிரியரும் மாணாக்கரும்**

தொல்காப்பியர் காலத்தை அடுத்துத் திருவள்ளுவர் காலத்திலும் ஆசிரியர்கள் இருந்ததற்கு திருவள்ளுவர் வகுத்த 'கேள்வி' எனும் அதிகாரம் சான்றாகும். இவ்அதிகாரத்திற்கு விளக்கம் தரப்புகுந்த பரிமேலழகர் "கேட்கப்படும் நூற்பொருளைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல்"[3] என விளக்குவதினின்று அறியமுடிகின்றது.

கல்வியறிவு உடையவரேனும் ஒழுக்க உணர்வு இன்றெனில் அறிவிலராகவே கருதப்பெறல் வேண்டும். ஆசிரியர் நிலையில் நின்று கற்றதைப் பிறருக்கு எடுத்துச் சொல்லும் பெருமையுடையவர்கள் ஒழுக்கம் உடையவர்களாக இருத்தல் வேண்டும் என்பதை,

**“ஒழுக்க முடையார் வாய்ச்சொல்”**

**(குறள்.415)**

என்ற அடி உணர்த்துகின்றது. ஆயினும் ஆசிரியருக்கான இலக்கணம் பற்றியும் குணவியல்புகளைப் பற்றியும் தனித்து எதனையும் திருவள்ளுவர் கூறவில்லை.

**“உடைசெல்வம் ஊண்ஒலி கல்வி என்றைந்தும்**
**அடையாவாம் ஆயம் கொளின்”**

**(குறள்.939)**

என்ற திருக்குறளின் மூலம் சூதாட்டத்தைப் பொழுது போக்காகவோ அல்லது பொருளீட்டும் வழியாகவோ ஒருவன் மேற்கொள்வானாயின் அவனிடத்தில் கல்வியானது சேராது. அவ்வாறு அவன் கற்றிருந்தோனாயினும் நூறுநாள் ஓதி ஆறுநாள் விடத்தீரும் என்ற பழமொழிக்கு ஏற்ப மறந்துபோகும் என்கிறார்.

சூதாடும் மாணவனுக்குக் கல்வி கற்பதற்கு நேரமிருக்காது. சூதாடும் ஆசிரியருக்குத் தான் கற்ற கல்வியும் மறந்து போகும் என்பது அறிவுறுத்தப்படுகிறது.

**நல்லியல்புகள்**

நீதி நூல்களில் ஒன்றான சிறுபஞ்சமூலம் ஆசிரியர், மாணவர்களுக்கான பண்புகளை,

**“ஆணாக்கம் வேண்டாதான் ஆசான் அவற்கியைந்த**
**மாணாக்கன் என்பான் வழிபடுவோன் – மாணாக்கன்**
**கற்பனைத்து மூன்றுங் கடிந்தான் கடியாதான்**
**நிற்பனைத்தும் நெஞ்சிற்கோர் நோய்”**

**(சிறு.23)**

என்ற பாடலின் மூலம் எடுத்துரைக்கின்றது. பிரம்மச்சரியம் காப்பவன் ஆசிரியன். அவனுக்குப் பொருந்திய மாணாக்கன் என்பவன் ஆசிரியனிடத்திலே

அன்பு செலுத்துபவனும் ஆசிரியரை வழிபட்டு நிற்பவனும் ஆவான். அத்தகைய மாணவன் காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றையும் ஒழித்தவனாக இருத்தல் வேண்டும். இல்லையேல் அவன் மாணாக்கனாகமாட்டான். அத்தகைய மாணாக்கன் ஆசிரியருக்கு ஒருநோய் போன்றவனாவான் என்கின்றது.

நன்னூலாரும் களி, மடி, மானி, கள்வன் ஆகியோருக்குக் கற்றுக் கொடுத்தல் கூடாது. அவர்கள் மாணாக்கராகத் தகுதியற்றோர் என்று கூறுகின்றார்.

நல்லியல்புகளைக் காப்பதும் காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை நீக்குவதும் ஆசிரியர், மாணவர் ஆகிய இருவருக்கும் உள்ள பண்புகளாகும்.

**"வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிகன்**
**உய்ப்பானே ஆசான் உயர்கதிக்கு – உய்ப்பான்**
**உடம்பினார் வேலி யொருப்படுத்தூண் ஆரத்**
**தொடங்கானேல் சேறல் துணிவு"**

***(சிறு.34)***

என்ற பாடலின் மூலம் ஒருவனுக்கு நல்லறிவூட்டி அவனை மேலான பதவிக்கு உயர்த்துபவனே சிறந்த ஆசிரியனாவான். அவ்வாறு மாணாக்கன் உயர்கதிக்குச் செல்ல வேண்டுமாயின் அவன் உயிரைக் கொன்று ஊனைத் திண்ணாதவனாக இருத்தல் வேண்டும் என்பதால் அசைவ உணவு உண்ணுதல் கூடாது என்பது வலியுறுத்தப்பெறுகிறது.

ஒருவர் நல்லாசிரியராகத் திகழவேண்டுமாயின் தமது மாணாக்கனை உயர்கதிக்கு இட்டுச்சென்று மேலான பதவியைப்பெற வழிகாட்டுதல் வேண்டும் என்று உரைப்பதன் மூலம் ஓர் ஆசிரியர் அவரைச் சார்ந்த மாணாக்கனுக்கு நல்ல வழிகாட்டியாக இருத்தல் வேண்டும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

**கசடறக்கற்க**

ஆசிரியர் என்பவர் தான் கற்ற கல்வியை மாணாக்கருக்கு உரைக்கும்பொழுது சொற்குற்றம், பொருட்குற்றம் இல்லாதவாறு தெளிவாக எடுத்துரைக்க வேண்டும். கற்கும் மாணவர்களும் தெளிவாகக் கற்க வேண்டும் என்பதை வெற்றி வேற்கை,

**"கல்விக் கழகு கசடற மொழிதல்"**

**(வெற்றி.2)**

என்ற அடியின் மூலம் உணர்த்துகின்றது. ஒருவன் கற்ற கல்விக்குச் சிறப்பு என்பது சொற்குற்றம், பொருட்குற்றம் இல்லாமல் பேசவேண்டும். பிழையின்றிப் பேசுவதும் எழுதுவதும் ஆசிரியர், மாணவர் இருவர்க்கும் பொதுவானது.

**குருவில்லாக் கல்வி வீண்**

**"………. குருவிலான் கொண்ட ஞானம்**
**ஆப்பில்லாச் சகடுபோலே பழியுமென் றுரைக்க லாமே"**

**(விவேக.61)**

இப்பாடலில் குரு இல்லாமல் பெறும் அறிவு அச்சாணி இல்லாத வண்டி அழிவதுபோல் அழிந்துவிடும் என்கின்றது. மாணாக்கர்கள் குருவின் துணையால் கல்வி கற்றல் பயனைத்தரும். இல்லையேல் அது அழிவைத்தரும். மேலும் இப்பாடலின் உரையில் சரியான குரு இல்லாத மாணவனின் கல்வி அழியும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசிரியர் நிறைந்த அறிவைப் பெற்றவராக இருத்தல் வேண்டும் என்பதும் உரைக்கப்பட்டுள்ளது. மாணாக்கர்களின் வாழ்வும் தாழ்வும் ஆசிரியர் கையில் உள்ளது என்பதையும் எடுத்துக்காட்டுகின்றது.

குருவில்லாக் கல்வி வீண் என்ற நிலை மாறி ஆசிரியர் இல்லாமலும் பாடம் கற்க முடியும் என்ற நிலையை இன்றைய தொலைதூரக் கல்வி

இயக்கங்கள் வழி அறியமுடிகிறது. ஆசிரியின் துணையோடு கற்பதையும் ஆசிரியரின் துணையின்றிக் கற்பதையும் ஒரே நிலையில் வைத்து மதிக்கப் படுவது முரண்பாடு. இதுவே இன்றையக் கல்வியின் நிலை.

**ஆசிரியர், மாணாக்கராகார்**

**''வேம்புக்குத் தேன்வார்த் தாலும் வேப்பிலை கசப்பு மாறா**
**தாம் பல நூல்கற் றாலுந் துச்சனர் தக்கோராகார்''**
***(விவேக.61)***

கசப்புச் சுவையுடைய வேம்புச் சாற்றில் தேன் கலந்து குடித்தாலும் அதன் சுவை மாறாது. அதுபோல தீயகுணம் உடையவர்கள் அறிவுத்திறன் மிகுந்த நூல்களைக் கற்றாலும் தாங்கள் கொண்ட குணத்தில் இருந்து மாறமாட்டார்கள். ஒன்றனுக்கு எது குணமோ அது மாறாது. தீய குணமுடையவர்களுக்கு எத்தகைய நல்லறிவு புகட்டினாலும் திருந்தமாட்டார்கள். தீக்குணம் கொண்டவர்கள் என்று பொதுப்படக் கூறினமை ஆசிரியர், மாணவர் இருவரையும் குறிக்கும் எனலாம்.

அறிவுத்திறம் மிகுந்த நுல்களைக் கற்றாலும் என்றமையால் ஆசிரியர்க்கும், எத்தகைய நல்லறிவு புகட்டினாலும் என்றமையால் மாணாக்கருக்கும் பொருந்தும்.

**தீதும் நன்றும் பிறர்தரவாரா**

**''தொண்டர்கள் செய்த தோஷந் தொடர்ந்து தங்குருவைச் சேரும்''**
***(விவேக.73)***

மாணாக்கர் செய்யும் குற்றம் கற்றுக் கொடுக்கும் ஆசிரியனைச் சென்று சேரும் என்று குறிப்பிடப்படுகிறது.

இதனின்று மாணாக்கனை நல்வழிப்படுத்தும் கடமை ஆசிரியரைச் சாரும். மாணாக்கனை நல்வழிப்படுத்தி நன் மாணாக்கனாக மாற்றிய பின்னர்

அம்மாணாக்கன் தன் வாழ்நாளில் தன்னுடைய செயலால் தன்னாசிரியர்க்குக் கெட்ட பெயரை ஒரு நாளும் பெற்றுத் தருதல் கூடாது. இது மாணாக்கனின் கடமைகளில் ஒன்று. ஆசிரியர்க்கு அவப்பெயர் நேருமாயின் அதற்கு மாணாக்கனே காரணம் என்கிறார். அத்தகைய அவப்பெயரை மாணாக்கர்கள் ஆசிரியருக்கு ஏற்படுத்துவானாயின் அது ஆசிரியருக்குச் செய்யும் தீங்காகவே கருதப்படும்.

ஆசிரியர் அவப்பெயர் ஏற்படுத்தும் மாணவனைப் பெறுதல் கூடாது. அத்தகைய மாணவனைத் தன்னகத்தே பெற்றாலும் ஆசிரியர் தன்னுடைய முயற்சியால் அவனை நல்வழிப்படுத்த வேண்டும். அவ்வாறு செய்ய இயலாதது ஆசிரியரின் குற்றம்.

எத்தகைய மாணவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதை அறிந்து கற்பிக்கப்படுகின்றது. பண்பில் சிறந்தவர்களையே மாணவர்களாகத் தேர்வு செய்கின்றனர். மாணவர்கள் கெடுவது ஆசிரியரின் குற்றம். இத்தகைய குற்றத்தை ஆசிரியர், மாணவர் இருவரும் செய்தல் கூடாது.

### இலக்கியங்களில் ஆசிரியர்கள்

குறிப்பிட்ட காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் அக்கால ஆசிரியர்கள் பற்றிய பதிவுகளையும் எடுத்துரைக்கின்றன. ஆசிரியரின் நிலை, ஒழுக்கம், பண்புகள், பாடம் நடத்தும்முறை, சமூக மதிப்பு, ஆசிரியராகாதவர், நல்லாசிரியர்கள், ஆசிரியரின் கடமைகள் ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவற்றின் வழி அந்தந்தக் காலகட்டங்களில் இருந்த ஆசிரியர்களைப் பற்றியும்; கற்றல், கற்பித்தல் முறைகள் பற்றியும் அறியமுடிகின்றது.

**ஆசிரியர்களின் ஊதியம்**

*சங்ககால ஆசிரியர்கள் மாணவர்கள் பற்றி,*

***"உற்றுழி உதவியு முறுபொருள் கொடுத்தும்***
***பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே"***

***(புறம்.183)***

*என்கிறது புறநானூறு. ஆசிரியர்கள் தங்களுக்கு வேண்டியவற்றை மாணாக்கர்களிடமிருந்து பெற்று வந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. ஆசிரியர் வறுமை உற்றவிடத்து அவற்றைத் தீர்த்துக்கொள்ள மாணாக்கரிடம் சென்றமையும். உறுபொருள் கொடுத்து என்ற சொல்லின் மூலம் மிகுதியான பொருளைப் பெற்றமையும் அறியப்படுகின்றது.*

*ஆசிரியரின் ஊதியம் புறநானூற்றுக் காலத்தில் மாணாக்கர் களிடமிருந்து பெறப்பட்டுள்ளது. ஆசிரியர்கள் வருத்தப்பட்டிருந்த காலங்களில் மாணவர்கள் அதனைத் தீர்த்து வைத்துள்ளனர். ஆசிரியர்களின் நிலையறிந்து மாணாக்கர்கள் நடந்து வந்துள்ளனர். அதனாலேயே கலித்தொகை "கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான்"[5] என்று கூறுகின்றது. ஆசிரியர்கள் மாணாக்கர்களை நம்பி இருந்துள்ளனர். ஆசிரியர்கள் ஏமாற்றப் பெற்றதும் இருந்துள்ளது.*

*உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை முனியாது கற்றல் நன்றே என்று எடுத்துக் கூறியதன் நோக்கம் ஆசிரியர்கள் மாணாக்கர்களை நம்பியிருக்கின்றனர். ஆதலால் ஆசிரியர்களின் நிலையறிந்து மாணாக்கர்கள் உதவவேண்டும் என்பதாகும்.*

*கலித்தொகையும் அன்றைய கால ஆசிரியரின் நிலையை எடுத்துரைத்துள்ளது. "அக்கால கட்டங்களில் மாணவர்கள் ஆசிரியர்களுக்குக் காசாகவோ பொருளாகவோ குருதட்சணையளித்தனர்"[6] எனச் சங்ககால*

வாழ்வியல் என்ற நூல் குறிப்பிடுகின்றது. சிலர் குருதட்சணை வழங்காமலும் இருந்துள்ளனர். இதனையே கீழ்க்காணும் பாடல் உணர்த்துகின்றது.

> **''கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்**
> **தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்**
> **ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான், மற்று அவன்**
> **எச்சத்துள் ஆயினும், அஃது எறியாது விடாதேகாண்;''**
> ***(கலி.149:4–7)***

தனக்குத் துன்பம் வந்தபோது உதவியவனுக்கு நன்றியுணர்வோடு அவ்வுதவியைத் திரும்பச் செய்யாதவன் தன் செயலாலேயே நலிந்துபோவான். எவ்வாறெனில் கற்பித்த ஆசிரியன் தன் மாணவனிடம் பொருள் ஒன்றும் பெறாது வருந்துமாறு; அம்மாணவன் நன்றியின்றி நடந்து கொண்டால் கல்வி கற்றலில் கடமைதவறியவனாகத் தன் செயலாலேயே நலிவது போல நலிந்து போவான் என்கின்றது. அதுமட்டுமின்றி அவன் மறுபிறவி எடுப்பினும் அத்தீவினை விடாது என்று குறிப்பிட்டுள்ளது.

இவற்றின் வழி சங்க காலத்திலேயே ஆசிரியர்கள் தாங்கள் செய்த பணிக்காக ஊதியம் பெறமுடியாமல் தவித்திருப்பது தெரியவருகின்றது. ஊதியத்தின் இன்றியமையாமை பற்றிப் பிற்காலத்தில் தோன்றிய நீதிநூல்கள் எடுத்துரைத்த போதிலும் அதன் தொடக்கம் சங்க காலத்திலிருந்தே இருந்து வந்துள்ளது.

ஆசிரியர் மனநிறைவுடன் இருந்தால்தான் மாணவர்களுக்குச் சிறந்த முறையில் கற்றுத்தர இயலும். ஆசரியர்களுக்கான ஊதியம் என்பது இன்றியமையாத ஒன்று. இவற்றில் வேறுபாடு காட்டுதல் கூடாது. இந்நிலையில் மாணவர்கள் ஆசிரியர்களை ஏமாற்றியுள்ளனர். இதனைக் களையும் முகமாக இப்பாடல் எழுந்துள்ளது. ஆசியருக்குத் தரவேண்டிய கூலியைத் தராமல் ஏமாற்றும் மாணவர்கள் இப்பிறவி மட்டுமின்றி

மறுபிறவியிலும் துன்பப்படுவார்கள். ஆதலால் ஆசிரியரது கூலியை வைத்திருக்க வேண்டாம் என்பது வலியுறுத்தப் பெற்றுள்ளது.

ஊதியத்தால் விளைந்த சிக்கல் என்பது காலம்தோறும் நடைபெற்றே வந்துள்ளது. இந்நிலை இன்றளவும் தொடர்ந்து கொண்டிருக்கின்றது. பல ஆசிரியர்கள் சங்ககாலம் முதல் மாணாக்கர்களிடமிருந்து பொருளைப் பெறாமல் தங்கள் பணியைச் செய்து வந்தமையும் உணரப்படுகின்றது. இவற்றினின்று ஆசிரியரின் பெருமையும் மாணாக்கரின் சிறுமையும் அறியப்படுகின்றது.

**ஆசிரியரின் ஒழுக்கமும் பண்பும்**

திருவள்ளுவர் ஆசிரியர் பற்றிய பதிவுகளை நேரடியாக எடுத்துரைக்காமல் மறைமுகமாக உணர்த்தியுள்ளார்.

***“இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே***
***ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்”***

***(குறள்.415)***

ஒழுக்கமுடையார் என்று எடுத்துரைத்தமை இங்கு ஆசிரியர்க்குப் பொருந்தும். ஏனெனில் ஒழுக்கத்தில் சிறந்தவராக இருந்தால் மட்டுமே ஆசிரியராகத் தகுதி பெறுவர் என்று இலக்கியங்களும் இலக்கணங்களும் எடுத்துரைத்துள்ளன.

வழுக்கும் சேற்று நிலத்தில் நடப்போர்க்கு ஊன்றுகோல் உதவுவது போல ஒழுக்கமுடைய பெரியோர் வாய்ச்சொற்கள் உலகில் வாழ்க்கை நடத்துவோர்க்கும் ஆட்சி செய்வோர்க்கும் துன்பக் காலத்தில் உதவும் தன்மை பெற்றவையாக இருக்கும். “ஒழுக்கம் இல்லாதார் கல்வியுடையாரேனும் அவர் வாய்ச்சொல் பயன்படாது”[7] என்று பாவாணர் குறிப்பிடுகின்றார்.

***“உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்***
***எண்ணப்பட வேண்டா தார்.”***

***(குறள்.922)***

*உயிரையும் மதிப்பையும் காத்துக்கொள்ள விரும்புபவர் கள்ளை உண்ணாமலிருத்தல் வேண்டும். அங்ஙனமின்றி கள்ளை விரும்புவாரேயாயின் அறிவுடையவர்கள் மக்களாகக் கருதப்படமாட்டார்கள். சான்றோராயின் கள்ளினை விரும்பமாட்டார். அறிவுடையவர்கள், சான்றோராகக் கருதப்படுபவர்களில் ஆசிரியரும் ஒருவர். அத்தகைய ஆசிரியர் தன்னைப் பிறர் பாராட்டுமாறும் தன்னை மதித்துப் போற்றுமாறும் நடந்துகொள்ள வேண்டும். ஆசிரியரைச் சான்றோர் என்றலும் பெரியோர் என்றலும் இலக்கிய வழக்கு “ஆசாரக்கோவை பெரியாரை முறைகொண்டு கூறார்”[8] என்று உரைத்துள்ளது. ஈண்டு பெரியார் என்றது ஆசிரியரையே.*

*தவறுகளைத் திருத்தி ஒழுக்கமுடையவராக விளங்கும் ஆற்றல் உடையவர் ஆசிரியர் என்று ஏலாதி எடுத்துரைத்துள்ளது. இதனை,*

***“அறுவர் தந்நூலு மறித்துணர்வு பற்றி***
***மறுவரவு மாறான நீக்கி–மறுவரவின்***
***மாசா ரியனா மறுதலைச்சொல் மாற்றுதலே***
***ஆசாரி யன தமைவு”***

***(ஏலாதி.75)***

*என அறு சமயத்தாரின் அறுவகைச் சமய நூல்களையும் கற்று ஞானமடைந்து, குற்றமுடையனவான கருத்துக்களையும் மாறுபட்ட கருத்துக்களையும் கழித்து; குற்றமில்லாத சிறந்த ஒழுக்கத்தை உடையனவாய் நன்மைக்கு மாறான மறுப்புச் சொற்களைப் போக்குதலே குருவின் இயல்பாகும் என்பது பாடற்கருத்து.*

*ஆசிரியர் சமய நூல்கள் பலவும் உணர்ந்து, தவறு நீக்கியொழுகும் ஒழுக்கமுடையவனாய்த் தனக்கு எதிரானவர் கூறும் மறுப்புரைகளை மாற்றி நிறுத்தவல்ல ஆற்றலை உடையவர். அவர் அனைத்தையும் கற்றுணர்ந்து;*

நன்மை, தீமைகளை ஆராய்ந்து, தவறுகளை நீக்கி ஆசிரியரின் கருத்துக்களுக்கு எதிராகக்கூறும் மறுப்புரைகளை மாற்றியமைக்கும் ஆற்றல் பெற்றவராக இருத்தல் வேண்டும். சமய நூல்கள் பலவும் கற்றுணர்ந்து என்றமையால் ஆசிரியர் சமயச் சார்பற்றவராக இருத்தல் வேண்டும் என்பது உணர்த்தப்படுகின்றது. மேலும் அக்கால கட்டத்தில் சமய இலக்கியங்கள், சமயக் கருத்துக்கள் மேலோங்கியிருந்தமையை அறிந்துகொள்ள முடிகின்றது. எவ்வாறாயினும் ஆசிரியர் என்பவர் பல நூல்களையும் கற்றறிந்து நன்மை தீமைகளை ஆராய வல்லவராக இருத்தல் வேண்டும் என்கின்றது.

**"அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்"**

**(வெற்றி.14)**

என்பதில் அதிவீரராம பாண்டியர் ஆசிரியர்களுக்கான ஒழுக்கம் என்பது சிறந்த நூல்களைப் படித்துத் தெளிந்து அடக்கமாக ஒழுகுவது என்கின்றார்.

எண்ணற்ற நூல்கள் இருப்பினும் அவற்றுள் சிறந்த நூல்களைத் தேடிப்பிடித்துத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். மேலும் அடக்கமாக நடந்து கொள்வதும் அறிவுடையவர்களுக்கு அழகு என்கிறார். அறிவுடையார் என்பது ஈண்டு ஆசிரியரைக் குறிக்கின்றது.

அறநெறிச்சாரம் ஆசிரியர்க்குரிய ஒழுக்கங்களை

**"அறங்கேட்ட டருள்புரிந் தைம்புலன்கள் மாட்டும்**
**அறங்கா திருசார் பொருளும் – துறந்தடங்கி**
**மண்ணுயிர்க் குய்ந்துபோம் வாயிலுரைப்பானேற்**
**பன்னுதற்குப் பாற்பட் டவன்"**

**(அறநெறி.4)**

என எடுத்துரைக்கின்றது. அறம் உரைப்பவர்கள் ஆசிரியர்களாவர். அறம் கூற விரும்புவோர்கள் அறநூல்கள் கூறும் நல்ல கருத்துக்களைக்

கேட்டறிந்தவராகவும், உயிர்களின் மேல் இரக்கம் காட்டுபவராகவும், மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களையும் அடக்கி ஐம்புலன்களால் அனுபவிக்கப்படும் இன்பங்களை விரும்பாதவராகவும், மனத்தின் கண் மாசு இல்லாதவராகவும், புற உலக வாழ்வால் வரும் ஆசைகளை ஒழித்தவராகவும், வீடுபேறு அடையும் வழியை எடுத்துக் கூறும் தன்மை உள்ளவராகவும் ஒருவர் இருந்தால் அவரே அறம் கூறத் தகுதியானவர் என்று எடுத்துரைக்கின்றது.

நல்லனவற்றைக் கேட்டு, உயிர்களிடத்திலே அன்பு செலுத்தி, ஐம்புலன்களை அடக்கி வீடுபேற்றை அடையும் வழியை ஏற்படுத்துபவரே ஆசிரியர்.

**“ஐம்புலக் கதவடைத்து மனமானவ யறிவாங்**
**கம்பம்வீக் கியஞருஞ் சுகமெனக் கருதியே**
**செம்பொனைத் திரணமா மதித்திடத் தகுதியோர்**
**தம்பெரும் புகழியம் புதற்குத் தரமதோ”**

***(நீதிநூல்.அதி.5.பா.6)***

மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்புல ஆசையை அகற்றி, மனமாகிய விலங்கை அறிவுத் தூணிற் கட்டித் துன்பத்தையும் இன்பமாகக் கருதிப் பொன்னைத் துரும்பு என மதித்து நடக்கும் பெரியோர் பெரும் புகழைச் சொல்ல முடியாது.

ஐம்புலன்களால் உண்டாகும் ஆசையை அடக்குபவராகவும் துன்பத்தைக் கண்டு அஞ்சாதவராகவும் இன்பங்களுக்கு ஆட்படாதவராகவும் இருப்பவர் ஆசிரியர். இத்தகைய பண்பைப் பெற்றிருப்பவரின் புகழ் சொல்ல முடியாத அளவிற்கு உயர்ந்து நிற்கும் என்கின்றது. ஐம்புல ஆசைகளை அடக்குதல் என்பது வேறு அகற்றுதல் என்பது வேறு. அகற்றுதல் என்பது ஆசைகளைப் பூட்டி வைப்பது போன்றதாகும். இது தற்சமயத்திற்கான நடவடிக்கை. அகற்றுதல் என்பது முற்றிலும் இல்லாமல் செய்வது. ஆதலால் ஆசிரியர் ஆசைகளை அறவே ஒழித்தல் வேண்டும். பொன்னையும் கூடத்

துரும்பென மதித்தல் வேண்டும் என்பதன் மூலம் ஆசிரியர் ஆடம்பர வாழ்க்கையை மேற்கொள்ளக் கூடாது என்கின்றது. இதனையே ஆசிரியன் என்னும் நூல் "பெருமிதமான வாழ்வு ஒருவனுக்கு ஒருநாளும் பொருந்தாது"[9] என்கின்றது.

விளக்கினைத் தலைகீழாகப் பிடிப்பினும் சுடரொழி வானத்தையே நோக்கும். திங்கள் தேய்ந்துவரினும் குளிர்ந்த கதிரையே வீசும் மாணிக்கத்தைப் பொடியாக்கிய போதிலும் அதன் தன்மை குறையாது. இதனைப் போன்றே பெரியவர்கள் துன்பப்படும் போதிலும் தன் பெருந்தன்மையினின்று குன்றாமலிருப்பர் என்பதை,

> ***"தலைகீழுறச் செய்யினுந் தீபம்விண் டன்னை நோக்குங்***
> ***கலைதேயினுந் தண்கதிர் வீசுமக் கங்குற் றிங்கள்***
> ***விலைமாமணி யைப்பொடி செய்யினு மின்ன றாது***
> ***நிலைநீங்குவ ரோதுயர் மேவினு நீர்மை யோரே"***
> ***(நீதிநூல்.அதி.5.பா.7)***

என்ற பாடல் அறிவுறுத்துகின்றது. ஆசிரியர் என்போர் தன் நிலையினின்று தாழாமல் இருத்தல் வேண்டும். தான் துன்பப்படுங் காலங்களிலும் தன் நிலையில் நின்று இறங்கிவாராமல் தன் பெருந்தன்மையைக் காத்து நிற்க வேண்டும். அவ்வாறு நிற்பது ஆசிரியரின் சிறந்த பண்பைக் காட்டும். ஒரு மனிதன் தன் நிலையில் தாழும்போதே தவறு செய்ய முற்படுகின்றான். அந்நிலையில் ஆசிரியர் என்பவர் சாதாரண மனிதரல்லர். ஆதலால் அவர் தன் நிலையில் தாழாமை வேண்டும்.

> ***"பாவச் சலதிக்கு ளூறாவகை பாருளோர்க்குக்***
> ***காவற் றுணையாங் குரவன்குணங் கல்வியின்றி***
> ***ஆவற் றளைபூண் டவனேயெனி லாருங் கொள்ளார்***
> ***ஏவத் தெரியாதன றிமின்மீதெவ ரேறுவாரே"***
> ***(நீதிநூல்.அதி.6.பா.3)***

*என்கிறது நீதிநூல். ஆசிரியர் என்பவர் ஆசையற்றவராக இருத்தல் வேண்டும். நல்ல குணத்தையும் நற்பண்பையும் பெற்றவராக இருத்தல் வேண்டும். மாணவன் நல்ல குணமும் நற்படிப்பும் இல்லாத பேராசை கொண்டவரை ஆசிரியராகப் பெற்றான் எனில் அவன் இப்பிறவிப் பெருங்கடலினை நீந்தமுடியாது. இதனையே,*

**"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார்"**[10]

***(குறள்.10)***

*என்று திருக்குறளும் எடுத்துரைக்கின்றது. அவ்வாறு பெறுவது மரக்கலத்தைச் செலுத்தத் தெரியாதவனைத் துணையாகக் கொண்டு கடலைக் கடப்பதற்குச் சமமாகும். மரக்கலத்தைச் செலுத்தத் தெரியாதவனை நம்பி யாரும் கடலைக் கடக்க முன்வரமாட்டார்கள்.*

*இவற்றின் வழி ஆசிரியர் என்பவர் பேராசை அற்றவராகவும் நல்ல குணத்தையும், நற்பண்பையும்பெற்றவராகவும் இருத்தல் வேண்டும் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது. எதிர்கால மாணவ சமுதாயம் ஆசிரியரை நம்பியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. நீதிநூல்*

**"பழிதீர் கலையாகவும் உணர்ந்தும் பலர்க்குரைத்தும்**
**இழிவே யுறத்தாம் அடங்காமதி யீனரார்க்கும்**
**வழிகாட் டிடநாட்டு மரத்தையும் வையமேச**
**விழியற் றவன்கையில் வைத்த விளக்குநேர்வார்"**

***(நீதிநூல்.அதி.6.பா.4)***

*என்கிறது. ஆசிரியர் என்பவர் மாணவர்களுக்குச் சரியான துணையாக இருத்தல் வேண்டும். அறிவில்லாத ஆசிரியரை மாணாக்கர்கள் யாரும் ஏற்றுக் கொள்வதில்லை. அவ்வாறு ஏற்றுக் கொண்டாராயின் அது அவர்களுக்கு வழிகாட்டி மரம் நின்ற இடத்திலே நின்று வழிகாட்டுவதற்கு ஒப்பாகும். ஆசிரியர் என்பவர் வழிகாட்டி மரமாக இல்லாமல் வழித்துணையாக*

இருத்தல் வேண்டும். வழித்துணையாக இல்லாத ஆசிரியர் மரத்திற்கு ஒப்பாவார். பார்வையற்றவர்க்கு வழிகாட்டுபவர் எவ்வாறு இருத்தல் வேண்டுமோ அதுபோன்று ஆசிரியர் இருத்தல் வேண்டும் இல்லையேல் பார்வையில்லாதவர் கையில் விளக்கைக் கொடுப்பதற்குச் சமமாகும். "எவ்வளவுக் கெள்வளவு கல்வி பண்பும் பயனும் உடையதாகும்."[11] ஆதலால் ஆசிரியர் என்பவர் மாணாக்கர்களுக்கு உற்ற துணையாக இருத்தல் வேண்டும்.

**"சொன்னத் திருடன்சிறு கள்வனைத் தூரியேசல்**
**என்னப் பொருளாசை யுளான்பிற ரிச்சை தீர்ந்து**
**மன்னத் திருஞான முரைத்தனமற் றோர்துறக்கும்**
**பொன்னைக் கவரச்செயும் வஞ்சனை போலுமாதோ"**

***(நீதிநூல்.அதி.6.பா.5)***

என்பது நோக்கத்தக்கது. பெருமதிப்புள்ள தங்கத்தைக் களவு செய்வோன் குறைந்த மதிப்புள்ள சிறுபொருள்களைக் களவு செய்பவனைப் பழித்துத் திட்டுவான். அதுபோன்றதேயாம் பண ஆசை உள்ளவன் பிறருக்குத் துறவு ஞானம் போதிப்பது போன்றதாகும். மேலும் துறந்தவர் பொருளைத் தான் கவர்ந்து கொள்ளும் கருத்துக்கும் ஏதுவுமாகும்.

ஆசிரியர் என்பவர் பொருளின் மேல் ஆசையற்றவராக இருத்தல் வேண்டும். அவ்வாறு ஆசையுடையவராயின் மாணவனுக்கு அறிவுரை கூறுவது திருடனே திருடனுக்கு அறிவுரை கூறுவது போன்றதாகும். அதுமட்டுமின்றி பொருளாசை கொண்டானிடம் அருள் இருக்காது. பொருளாசையுள்ளான் அருளாசானாகமாட்டான். ஆசிரியரிடம் அருள்நிறைந்திருக்க வேண்டுமே தவிர பொருள்மேல் ஆசை கொண்டிருத்தல் கூடாது.

**"இகத்தின் வாழ்வினில் இச்சைய றான்றனை**
**சுகத்தி னிற்குரு சாமியென் றோதுதல்**

***சுகத்தை நீங்கித் துயரஞ் செறிநரர்***
***அகத்தை வீடென்(று) அறைதல் சிவணுமே"***

***(நீதிநூல்.அதி.6.பா.7)***

*இவ்வுலக வாழ்வில் விருப்பம் இல்லாதவரை ஆசிரியராகக் கொள். அது துன்பம் நிறைந்தவர் வீட்டைக் கடவுளின் இன்ப நிலையமாகக் கொள்ளுதற்கு ஒப்பாகும். ஆசிரியர் என்பவர் இம்மைப் பற்றில்லாதவராக இருத்தல் வேண்டும். உலக வாழ்வில் பற்றற்றவரே ஆசிரியர் என்கிறது நீதிநூல்.*

***"ஒருமை யாய்த்தன் உதர நிமித்தமே***
***தரும வேடந் தரிக்குதல் வெம்புலி***
***புருவை தன்னைப் புசிக்கப் புருவையின்***
***சருமம் பூண்டங்குச் சார்தல் நிகர்க்குமே"***

***(நீதிநூல்.அதி.7.பா.9)***

*தனித்துத் தன் வயிறு வளர்த்தற்பொருட்டு ஆசிரியக்கோலம் பூணுதல் புலி ஆட்டை உண்ணுதற்பொருட்டு ஆட்டுத்தோலைப் போர்த்தி யிருப்பதற்கு ஒப்பாகும். ஆசிரியராய் இருக்க விரும்புவோர் தன் வயிறு வளர்ப்பவராக இருத்தல் கூடாது. தன்னலம் பாராதவராக இருத்தல் வேண்டும்.*

*மேற்கூறப்பட்ட பல பாடல்களில் பொருளாசை கூடாது என்பதை மீண்டும் மீண்டும் பலமுறை வலியுறுத்தியிருப்பதினின்று அக்காலகட்டத்தில் பல ஆசிரியர்கள் பொருளாசை கொண்டவர்களாக இருந்திருக்கக்கூடும். இதனைக் களையும் பொருட்டே மீண்டும் மீண்டும் பல்வேறு கால கட்டங்களில் தோன்றிய இலக்கியங்கள் எடுத்துரைத்துள்ளன.*

*ஆசிரியர் கூறும் சொற்கள் ஒருவர்க்குத் துன்பக் காலத்தில் உதவும் தன்மை பெற்றவையாகவும், தவறுகளைத் திருத்தி ஒழுக்கமுடையவராக விளங்கும் ஆற்றல் உடையவராகவும், பல நூல்களையும் கற்றறிந்து நன்மை,*

தீமைகளை ஆராயவல்லவராகவும், அடக்கமாக நடத்தலும், வீடுபேறு அடையும் வழியை எடுத்துக் கூறுவதும், தான் துன்பப்படும் காலங்களிலும் தன் நிலையில் தாழாதவராகவும், ஆசை, பேராசையற்றவராகவும், நல்ல வழிகாட்டியாகவும், இம்மை வாழ்வில் பற்றற்றவராகவும், தன்னலம் பாராதவராகவும் இருப்பதே ஆசிரியரின் ஒழுக்கமும் பண்புகளும் ஆகும்.

**ஆசிரியரின் பெருமை**

பல்வேறு உயர்பதவிகளையும், அதிகாரங்களையும் உடைவர்கள் கூட பெறமுடியாத பெருமைக்கு உரியவர்கள் ஆசிரியர்கள். அத்தகைய ஆசிரியரின் பெருமைகள் பழங்காலத்தில் எவ்வாறு இருந்துள்ளது என்பதை இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

> ***“ஏதிலா ரென்பார் இயல்பில்லார் யார்யார்க்கும்***
> ***காதலா ரென்பார் தகவுடையார் – மேதக்க***
> ***தந்தை யெனப்படுவான் தன்னுவாத்தி தாயென்பாள்***
> ***முந்துதான் செய்த வினை”***
>
> ***(நான்மணி.45)***

நற்பண்புகளை உடையவரே அன்பர்; மேலான தந்தை எனப்படுபவரே ஆசிரியர்; தாய் என்பவள் முன்பு செய்த நல்வினையாகும்.

இவற்றுள் ஆசிரியர் என்பவர் தந்தையாக மதித்துப் போற்றப் பட்டுள்ளார். அவற்றினும் மேலான தந்தை என்று உரைத்துள்ளார். “சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடன்”[12] என்பது போல சான்றோனாக்குதல் ஆசிரியர்க்கும் கடமை என்பது உணர்த்தப்படுகிறது. உடம்பை வளர்க்கும் தந்தையைப் போலவே அறிவென்னும் உடம்பை ஆசிரியர் வளர்க்கின்றமையால் ஆசிரியரும் தந்தையை ஒப்பவராகிறார்.

அழிந்து போகும் உடம்பை வளர்ப்பதைவிட அழியாத அறிவை வளர்க்கின்றமையால் ஆசிரியர் என்பவர் மேலான தந்தை என்று

கூறப்பட்டுள்ளது. எல்லாத் தந்தைகளும் தன் மகனைச் சான்றோனாக்குதல் என்பது கிடையாது. ஆசிரியர் என்பவர் எல்லா மாணவனையும் சான்றோனாக்குதல் வேண்டும் என்றமையால் மேலான தந்தை என்று கூறப்பட்டுள்ளது. நல்லியல்புகளை உடையர் அன்பர் என்று கூறியுள்ளமையால் ஆசிரியர் என்பவர் நல்லியல்புகளைக் கொண்டிருத்தல் வேண்டும்.

"இடை மாணாக்கர்களிடத்தும் கடை மாணாக்கர்களிடத்தும் தந்தையினுடைய நிலையில் இருந்து கொண்டு ஆசிரியன் அதிகமாகக் கவனத்தைச் செலுத்திப் பாடம் புகட்ட வேண்டும். அத்தகைய மனப்பான்மை யாரிடத்தில் இருக்கிறதோ அவனே நல்ல ஆசிரியன்"[13] என்று ஆசிரியன் எனும் நூல் குறிப்பிடுகின்றது.

***"மன்ன னுடன்வயிறு மாண்புடைத் தாய்தந்தை***
***முன்னி முடிக்கு முனியாசான் – பன்னியங்***
***காயகுரவர் இவரென்ப வையத்துத்***
***தூய குலஞ்சாதி யார்க்கு"***

***(அறநெறி.61)***

இவ்வுலகில் வணங்கிப் போற்றத்தக்கவர்கள் நாடாளும் மன்னன். தாய் தந்தையர் நினைத்த வினைகளை நினைத்தவுடன் முடிக்கும் திறன் பெற்ற முனிவரும் ஆசிரியரும் ஆசிரியரின் மனைவியும் என்று எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர் என்பவர் நினைத்த செயல்களை நினைத்தவுடன் முடிக்கும் தன்மை பெற்றவராக இருத்தல் வேண்டும். ஒரு செயலைக் காலம் தாழ்த்திப் பின்னர் முடிப்போம் என்று எண்ணாதவராக இருத்தல் வேண்டும் என்பதால் முன்னி முடிக்கும் முனியாசான் என்று கூறப்பட்டுள்ளது. இதனையே திருக்குறளும்,

***"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்***
***திண்ணியர் ஆகப் பெறின்"***[14]

***(குறள்.666)***

என்று கூறுகின்றது. இவ்வாறு ஆசிரியர் நடப்பாராயின் அது ஆசிரியரைப் புகழ்வது மட்டுமின்றி அவரது பத்தினியையும் புகழ்வர் என்று எடுத்துரைத்துள்ளது. ஆசிரியரது செயல் அவரது குடும்பத்தையும் சாரும். ஆசிரியரால் அவரது குடும்பமும் நல்ல மதிப்புடன் நடத்தப்பட்டமை புலனாகிறது.

**"நாட்டமின்றி யொளியெப் பயனை நல்கு மனையில்**
**பூட்டுபொன் றிறவுகோ லினையலாது புகுமோ**
**வேட்டகத் தரியநூல்க ளாளவேனு மினிதாக்**
**காட்டருட் குரவனின்றி யெவர்காண்பர் பயனே"**

***(நீதிநூல்.அதி.5.ப.3)***

கண் இல்லாவிட்டால் ஒளியின் பயனை அறியமுடியாது. திறவுகோல் இல்லாவிட்டால் வீட்டின் உள்ளே புகமுடியாது. அதனைப் போன்றே வீட்டில் எவ்வளவு நூல்கள் இருப்பினும் அவற்றால் பயனில்லை. அதன் பயனை அனுபவிக்க வேண்டுமாயின் ஆசிரியரின் துணை வேண்டும்.

எத்துனை அறிவு பெற்ற மாணவனாக இருந்தாலும் தானாகப் படித்து முழுமையாகத் தெரிந்து கொள்வது என்பது இயலாத ஒன்றாகும். ஆசிரியரின் துணையாலேயே ஒருவன் முழுமையான கல்வியைப் பெறமுடியும். ஆசிரியர் என்பவர் மாணாக்கர்களுக்குக் கண்ணாகவும் நூற்பயனை அறிய உதவும் திறவுகோலாகவும் இருத்தல் வேண்டும்.

எல்லா மாணவர்களும் பிழையின்றிப் பேசுவது, எழுதுவது என்பது இயலாததாகும். அவர்கள் ஆரம்பத்தில் முயன்று தவறியே கற்க முற்படுகின்றனர். அவ்வாறு கற்றாலும் அவர்கள் அனைத்தையும் அறிந்து விடுவது என்பதும் இயலாத ஒன்று. "எழுத்திலும் படிப்பிலும் மாணவர்கள் செய்யும் தவறுகளைச் சுட்டிக் காட்டித் திருத்தும் இயல்பினர், அறிவிலும் ஒழுக்கத்திலும் உயர்ந்து நிற்பவர், பெற்றோருக்கு இணையாகப்

பேசப்படுகின்றவர்.''[15] ஆதலால் ஆசிரியரின் துணையால் கற்பதே முழுமையான கல்வியைத்தரும். அழியாச் செல்வமான கல்வியைத் தரும் ஆசிரியர் பெருமைக்குரியவர்.

**''மண்ணிறைக் கடியரா யுயிர் வளர்ப்பர்பலரும்**
**விண்ணிரைக் கடியரா யெவரும் வீடுபெறவே**
**புண்ணியத் திருமறைப் பொருளையோது புனித**
**ரெண்ணிடற் கரியபெற்றி யையியம்ப லெளிதே''**

**(நீதிநூல்.அதி.5.பா.5)**

''உலகில் உள்ள அனைவரும் தம் மண்ணில் வாழும் அரசர்களுக்கு அடிமையாய் வாழ்வர். மெய்ப்பொருளை உணர்ந்து போதிக்கும் ஆசிரியர்கள் தூய மறைப் பொருளை எல்லோரும் வீடுபேறு அடையும் பொருட்டு ஓதுகின்றவர் ஆதலின் அவர்களின் பெருந்தன்மையை அளவிட்டுக் கூறுவதற்கில்லை. அளவிட முடியாத பெருமைக்குரியவர் ஆசிரியர். மேலும் ஆசிரியன் என்னும் நூல் ''ஆசிரியன் யாருக்கும் அடிமையில்லை''[16] என்று கூறுகின்றது.

மன்னரையும்விட பெருமைக்குரியவர்கள் ஆசிரியர்கள். அவர்களின் பெருந்தன்மையை அளவிட்டுக் கூறிவிட முடியாது. ''மக்களின் கல்வித்தர உயர்வினாலேயே சமுதாயம் வளர்ச்சியடைய முடியும். மற்றவர்களைவிட, ஆசிரியர் உயர்ந்தவர், சமுதாய உழைப்பாளி. அவருடைய திறமை மதிக்கப்பட்டு உரிய அந்தஸ்து அளிக்கப்பட வேண்டும்''[17] என்று அய்க்கண் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு ஆசிரியர்கள் தந்தையாகவும், மன்னனையும் விட உயர்ந்தவர்களாகவும், மதித்துப் போற்றப்பட்டனர். அவரால் அவ்வாசிரியரின் மனைவியும் மதித்துப் போற்றத்தக்கவர். அடிமை வாழ்வு வாழாத பெருமைக்குரியவர்களாக விளங்குகின்றனர்.

**கற்பிக்கும் முறை**

எல்லோரும் கற்கலாம். ஆனால் கற்ற எல்லோரும் கற்பிக்க முடியும் என்று கூறிவிட முடியாது. ஏனெனில் எல்லோரும் பாடம் கற்பிக்கின்றனர். அவர்களில் சிலர் மட்டுமே மாணாக்கரிடத்தில் நன்மதிப்புப் பெறுகின்றனர். சிலர் கடினமான செய்தியைக்கூட மிக எளிமையாகச் சொல்லிவிடுவர். சிலர் எளிமையான செய்தியைக்கூட கடினமாக்கிச் சொல்வர். ஆகவே கற்பித்தல் என்பது ஒரு கலை. அதனாலேயே கற்பித்தல் முறை என்பது காலம்தோறும் மாற்றம் பெற்று வருகின்றது. புதிய புதிய கற்பித்தல் முறைகள் உருவாகி வருகின்றன. பழங்காலத்தில் கற்பித்தல் முறைகள் எவ்வாறு இருந்துள்ளன என்பதைப் பல்வேறு இலக்கியங்களும் எடுத்துரைத்துள்ளன. பயனுள்ள கல்வியே கல்வி.

> ***"கால்தூய்மை யில்லாக் கலிமாவுங் காழ்கடிந்து***
> ***மேல்தூய்மை யில்லாத வெங்களிறுஞ் – சீறிக்***
> ***கறுவி வெகுண்டுரைப்பான் பள்ளி இம்மூன்றும்***
> ***குறுகார் அறிவுடை யார்"***
>
> ***(திரி.46)***

நடையில் தூய்மையில்லாத குதிரையும், கட்டுத்தறியை முறித்து வீரன் இருப்பதற்கு ஏற்ற தன்மையில்லாத களிறும், மாணாக்கன் மேல் சீற்றம் கொண்டு சினந்து பாடம் கூறும் கல்விச் சாலையும் பயன்தராது என்று இப்பாடல் உணர்த்துகின்றது.

ஆசிரியர் பாடம் நடத்தும் பொழுது மாணாக்கர்களைக் கண்டு முகமலர்ச்சியுடன் கூறவேண்டும். அத்தகைய முறையே மாணாக்கர்களுக்குப் பயனைத்தரும். மாறாகச் சினம் கொண்டு கூறுவாராயின் அக்கல்வி மாணாக்கனுக்கு எவ்விதப் பயனையும் தராது. கற்பித்தலின் அடிப்படை அன்பு. அன்போடு கற்பிப்பதன் வாயிலாகவே கற்றலை மாணாக்கரிடத்தில் கொண்டு சேர்க்க முடியும் என்று எடுத்துரைக்கின்றது.

ஆசாரக்கோவை ஆசிரியர் பாடம் கூறும் முறையைக் கொண்டே மாணாக்கர்கள் ஆசிரியரை மதிப்பிடுவர் என்பதைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

**"விரைந்துரையார் மேன்மேல் உரையார் பொய்யாய**
**பரந்துரையார் பாரித்துரையார் ஒருங்கெனைத்தும்**
**சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற்**
**சொல்லுக செவ்வி யறிந்து"**

***(ஆசாரக்.76)***

ஆசிரியர் பாடம் கூறும்போது விரைவாகக் கூறுதல் கூடாது. தான் கூறியதை மீண்டும் மீண்டும் கூறுதல் கூடாது. தவறான அல்லது பொய்யான செய்திகளை விரிவாக்கி மாணவர்களுக்குக் கூறக்கூடாது, கூறவேண்டியவற்றை எளிமையாக்கிக் கூறுதல் வேண்டும். சொல்ல வேண்டிய செய்திகளை விட்டுவிடாமல் கொடுக்கப்பட்ட காலத்திற்குள் கேட்போரின் மனநிலையை அறிந்து சொல்ல வேண்டும். "குன்றக்கூறல், மிகைகொளக்கூறல், கூறியது கூறல்"[18] என்று பத்துக்குற்றம் பற்றிக் கூறுகையில் நன்னூல் மேற்கூறிய கருத்துக்களை எடுத்துக் காட்டியுள்ளது.

கற்பிக்கும் பொழுது மாணாக்கரின் மனநிலை அறிந்து கற்பிக்க வேண்டும் என்று கூறியுள்ளது. இது இன்றைய காலகட்டத்தில் குறையாகவுள்ளது. ஏனெனில் இன்றைய கல்வித் திட்டங்கள் காலத்தை வரையறுத்துக் கொண்டு நடைபெறுகின்றன. இதனால் கற்பித்தலில் ஆசிரியர்க்கும், கற்றலில் மாணாக்கருக்கும் பெருத்த சிக்கல்கள் ஏற்படுகின்றன. இதன் விளைவாக மாணவர்களை ஆயத்தப்படுத்துதல், கவனத்தை ஈர்த்தல் போன்ற நடைமுறைகளைக் கையாள வேண்டியுள்ளது.

**"கைத்திட்ட மருந்திலக் காரங் கலந்து கூட்டி**
**மத்தித்தருள் பண்டிதர் போனமற நோய்த விர்ப்பா**

**னெத்திக்கினுங் கேட்பவர் காதுள மின்பமேவித்**
**தித்தித்திட வாரியர் நன்மறை செப்பு வாரே"**
***(நீதிநூல்.அதி.5.பா.8)***

*மருத்துவர் என்பவர் கைப்பு மருந்தின்மேல் இனிப்புப் பூசி உண்பித்து உடல்நோயை நீக்குவார். அதுபோன்றே ஆசிரியர் என்பவர் தன் இனிய மொழிகளால் அறமுறைத்து; நன்னெறி ஒழுகச் செய்கின்றவராவார். கற்பித்தலுக்கான முதற்படி என்பது அன்பு. அத்தகைய அன்பினாலேயே கல்வியைப் புகட்ட வேண்டும் என்று திரிகடுகம் எடுத்துரைத்துள்ளது. இவ்வாறே "ஆசிரியர் எவ்விதமான பயனையும் எதிர்பாராமல் கற்பிக்க வேண்டும். பணத்துக்காகவோ பெயருக்காகவோ அல்லது புகழுக்காகவோ அவர் கற்பிக்காமல் மாணவன் பேரிலும் மானிட வர்க்கத்தின் பேரிலும் உள்ள அன்பின் காரணமாகவே அவர் தன் பணியை ஆற்றவேண்டும்"[19] என விவேகானந்தர் குறிப்பிடுவதாக அவினாசிலிங்கம் குறிப்பிட்டுள்ளார். அன்பின் வழியாகவே கல்வியைப் புகட்ட முடியும் என்பது கருத்தாக உள்ளது. அதனாலேயே வெவ்வேறு காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்களும் மீண்டும் மீண்டும் இதனை வலியுறுத்துகின்றன.*

*இவற்றின்வழி, பாடம் கற்பிக்கும் ஆசிரியர் என்பவர் மாணாக்கர்களிடம் இன்மொழியைப் பேசி அவர்களின் அறியாமை இருளைப் போக்கவேண்டும். மாறாகக் கடுமொழியுரைத்தலால் மாணாக்கனுக்குப் பயனில்லை என்பதையும் எடுத்துக் காட்டுகின்றது.*

**"சிறுவாய்க் கலத்துட் டுளியாகச் செலுத்து நீர்போ**
**லறியாச் சிறுவர்க்கு முணர்ந்தறி யாத வர்க்கும்**
**வறியார்க்கும் விளங்கிட வேதெளி வாவகுத்து**
**நெறியைத்தெரி விப்பர்நன் னூனெறி நின்ற மேலோர்"**
***(நீதிநூல்.அதி.5.பா.9)***

பலர்க்கும் விளங்கப் பகுத்துரைப்போன் ஆசிரியன். வாய் ஒடுங்கிய கலத்துள் நீரைச் சிறிது சிறிதாகச் செலுத்துவது போன்று நன்னெறி நூல்களைச் சிறுவர்களுக்கும், எதனையும் உணர்ந்து அறியாதவர்க்கும், ஏழைகளுக்கும் விளங்கும்டியாகத் தெளிவாக உரைப்பவர் ஆசிரியர் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

வாய் ஒடுங்கிய கலத்துள் நீரைச் சிறிது சிறிதாகச் செலுத்துவது போன்று என்பது மாணாக்கர்களுக்குக் கற்றுக் கொடுக்கும் போது சிறிது சிறிதாகக் கற்பித்தல் வேண்டும் என்பதை உணர்த்துகின்றது. அனைத்துப் பாடங்களையும் ஒரே நேரத்தில் கற்பிப்பதால் அனைவரும் புரிந்து கொள்வது கடினமான செயலாகிவிடும். உணர்ந்தறியாதவர்க்கும் என்றமையால் மாணாக்கர்களின் திறமைக்கு ஏற்ப அவர்களின் மனம் எளிதில் ஏற்றுக் கொள்ளும்படி கற்பித்தல் ஆசிரியரின் கடமை என்பதும் பெறப்படுகின்றது.

கற்பித்தல் முறைகளில் அனைத்தையும் ஒரே நேரத்தில் முழுமையாகக் கற்பித்தல் என்பது பொருந்தாத ஒன்றாகும். ஒவ்வொன்றையும் ஒவ்வொரு படிநிலையாகக் கற்பித்தலால் மாணாக்கர் வெறுப்பின்றிக் கற்க இயலும்.

கற்பிக்கும் முறைகளில் முதன்மையானது மாணாக்கரிடத்து அன்பு காட்டுதலாகும். அன்பால் மட்டுமே கற்பிக்க இயலும். விரைவாகக் கூறுதல், பொய்யான கருத்தைக் கூறல், கடுமொழியுரைத்தல் கூடாது, சிறிது சிறிதாக மாணாக்கர்களுக்குக் கற்றுக் கொடுத்தல் வேண்டும் என்பது அக்காலக் கற்பித்தல் முறைகளாகும்.

**நல்லாசிரியர்**

**“புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியார்**
**உய்த்தக மெல்லாம் நிறைப்பினும் – மற்றவற்றைப்**

**போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து**
**தேற்றும் புலவரும் வேறு''**

***(நாலடி.318)***

*இப்பாடலில் பொதுவான ஆசிரியர்களுக்கும் ஆசிரியர்களில் சிறந்தவர்களுக்கும் உள்ள வேறுபாடு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பல்வேறு ஆசிரியர்களிடத்தே ஒருவரை மட்டும் சிறந்த ஆசிரியராக அடையாளம் காட்டுகின்றது.*

*ஆசிரியர்களும் நூல்களும் பிரிக்க முடியாதவை. புத்தகங்களை மிகுதியாகத் தொகுத்துச் சேகரித்து வைத்திருப்பவர்களிடம் அனைத்து வகையான நூல்களும் காணப்பட்டாலும் அந்நூல்களின் பொருளை அவர்கள் அறிந்திருக்காவிட்டால் அவற்றால் எவ்விதப் பயனுமில்லை. சிலர் முயன்று சேகரித்து நூல்களைத் தக்கபடி பாதுகாத்துப் படிக்காமல் வைத்திருப்பார்கள். மிகுதியான நூல்களைத் தேடித் தொகுத்தும், அவற்றைப் பாதுகாத்தும், அந்நூல்களின் பொருள்களைக் கற்றும், தாம் கற்றவற்றைப் பிறர் அறியுமாறும் எடுத்துரைப்பவர்கள் நல்லாசிரியர்களாவர்.*

*ஆசிரியர் என்பவர் நூல்களைத் தேடிச் சேர்த்து வைப்பவர் மட்டுல்லர்; அவற்றின் பொருளை மாணாக்கர்களுக்கு எடுத்துரைப்பவருமாவர். ஆசிரியர் என்பவர் வழிகாட்டி மரமன்று அவர் வழித்துணையாளர்.*

**''கொடுப்பான் பசைசார்ந்து கொள்வான் குணத்தில்**
**கொடுக்கப் படுதல் அமையின் – அடுத்தடுத்துச்**
**சென்றாங் கடைந்து களைவினை யென்பரே**
**வென்றார் விளங்க விரித்து''**

***(அறநெறி.184)***

*ஞானத்தைப் போதிக்கின்ற ஆசிரியர் என்பவர் மாணவனுக்கு ஏற்றவகையில் ஞானத்தை வழங்குதல் வேண்டும். அவ்வாறு அமைந்துவிட்டால் நலம் பயக்கத்தக் மொழிகளைக் கேட்டறிந்து தீவினைகள் அணுகாமல் காத்துக்*

கொள்ளலாம். நலம்பயக்கத்தக்க நல்ல ஆசிரியர்களே தீவினைகளிலிருந்து காக்க முடியும்.

நற்குணம் கொண்ட ஆசிரியர்கள் நல்வழியைக் காட்டுவார்கள். மாணாக்கரை நல்வழிப்படுத்துபவரே நல்லாசிரியர் ஆவார். ஆசிரியர் மாணவனுக்கு ஏற்ற வகையில் போதிப்பவராக அமைந்துவிட்டால் என்றமையால் மாணாக்கனுக்கு ஏற்ற வகையில் போதிக்காத ஆசிரியரும் இருந்துள்ளனர் என்பது அறியப்படுகின்றது.

**''வைவார்தமை வாழ்த்தியு நெஞ்சில் வருத்த முற்று**
**நைவாருட னைந்தழு துந்தமை நண்ணித் துன்பஞ்**
**செய்வாருறு பீழை நினைந்துதஞ் சிந்தைநொந்து**
**மெய்மாமறை யின்பய னோதுவர் மேன்மையோரே''**

***(நீதிநூல்.அதி.5.பா.10)***

மெய்யுணர்ந்தார் தம்மை வைவாரை வாழ்த்துவர். உளம் வருந்தித் துன்புறுவாருடன் தாமும் துன்புற்று அழுவர். தமக்குத் துன்பம் செய்வார்க்கு அத்தீவினைப் பயனால் துன்பம் வருமே என்று மனம் நொந்து ஆண்டவன்பால் மன்றாடுவர். அனைவர்க்கும் உண்மைத் தெய்வ மறையின் சிறப்பை எடுத்துக் கூறுவர்.

ஆசிரியர் தம்மை வைவாரையும் இகழாது அவற்றின் உண்மை நிலையை ஆராய்ந்து அறிந்திருப்பாராயின் அவரை வையாது வாழ்த்தும் தன்மையைப் பெற்றிருத்தல் வேண்டும். மேலும் தமக்குத் துன்பத்தைத் தந்தாலும் தீவினைப் பயனால் அவருக்குத் துன்பம் நேருமே என்று நினைத்து அவருக்குத் துன்பம் நேராதவாறு பார்த்துக்கொள் என்று இறைவனிடம் வேண்டி நிற்பார். துன்பப்பட்டு வருந்துவாருடன் சேர்ந்து தாமும் துன்புற்று அழுவார். ஆசிரியர் என்பவர் யாருக்கும் தீங்கினை நினையாதவராக இருத்தல் வேண்டும் என்று இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

ஆசிரியர் என்பவர் தன்னலமற்றவராகவும், தம்மை இகழ்வாரையும் பொறுப்பவராகவும் இருத்தல் வேண்டும். இதனையே திருக்குறளும்,

**"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை"[20]**

***(குறள்.151)***

என்று கூறுகின்றது. மேலும் தனக்குத் துன்பம் செய்வாரிடத்தும் அன்பு செய்பவரே உண்மையான ஆசிரியர் என்றும் எடுத்துரைக்கின்றது.

நூற்பொருளை அறிந்து மாணாக்கர்களுக்கு எடுத்துரைப்பவரும், மாணாக்கர்களை நல்வழிப்படுத்துபவரும், தன்னலமற்றவராகவும், தமக்குக் கேடு நினைப்பவருக்கும் தீங்கினை உண்ணாதவராகவும் இருப்பவர் நல்லாசிரியர்.

**ஆசிரியரின் செயல்**

ஆசிரியர் தன்னலமற்றவர். ஆசிரியரின் செயல்பாடுகள் அனைத்தும் அவரை மட்டும் சார்ந்தது அல்ல. அது அவரைச் சார்ந்த மாணாக்கரையும் சமுதாயத்தையும் சார்ந்ததாகும். ஆதலின் அவரது செயல்கள் உன்னதமானவையாக இருத்தல் வேண்டும். அவர்களது வாழ்க்கைமுறை மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாக அமைதல் வேண்டும். "தான் புகட்டுகின்ற பாடத்தின் மூலமாகவன்றி வாழுகின்ற வாழ்வின் மூலமாகவே மாணாக்கர்களுக்கு அவன் சிறந்த அறிவைப் புகட்டுகின்றான்"[21] என்று ஆசிரியன் எனும் நூல் குறிப்பிடுகின்றது. ஆதலின் ஆசிரியரது செயல்கள் மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக அமைதல் வேண்டும்.

**"அகவிரு ளகல ஞான விளக்கினை யருளி னேற்றிச்**
**சகலமு நல்குங் கேள்வித் தனத்தினை நல்கி யாதிப்**

**பகவன்றன் சொரூபங் காட்டிப் பவமற மிரண்டுங் காட்டிச்**
**சுகநிலை காட்டுந் தியாகத் தோன்றலை மறவாய் நெஞ்சே''**
***(நீதிநூல்.அதி.5.பா1)***

ஆசிரியர் என்பவர் மனத்தில் உள்ள இருள்நீங்க மெய்யுணர்வு விளக்கை ஏற்றுபவர். ஒருவருக்கு எல்லா நலத்தையும் தருகின்ற கேள்விச் செல்வத்தைத் தருகின்றவர். கடவுளின் திருவுருவத்தையும் காட்டுகின்றவர். ஒருவருக்கு பாவ, புண்ணியங்களை உணர்த்துகின்றவர். பேரின்பத்தில் ஆழ்த்துகின்றவர். இத்தகைய ஆசிரியரை ஒருநாளும் மறத்தல் கூடாது என்று எடுத்துரைக்கின்றது. ஆசிரியர் தன் செயல்களால் மற்றவர்களுக்கு உதாரணமாக விளங்குகின்றவர் என்பதை இப்பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

ஆசிரியர் மனவிருளை (ஆசு + இரியர்) அகற்றுபவராகவும், கேள்விச் செல்வத்தைத் தருகின்றவராகவும், பாவ, புண்ணியங்களை உணர்த்துகின்றவ ராகவும், பேரின்பத்தில் ஆழ்த்துபவராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய ஆசிரியர்கள் நாளடைவில் தங்களின் செயல்பாடுகளை மாற்றியிருக்கக்கூடும். ஆசிரியர்கள் தங்களின் செயல்பாடுகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதையும் அறிவுறுத்துகின்றது.

**''கான லெனப்படு காய மிதப்பன்**
**றானவ மேபுவி தங்க வளித்தா**
**னீனமி லாரிய னென்று மொருங்கா**
**ஞானவு டம்பினை நல்கின னன்றோ''**

***(நீதிநூல்.அதி.5.பா.2)***

இப்பாடல் பொய்யாகத் தோன்றும் உடம்பினை இவ்வுலகில் தங்க வைக்கும் முயற்சி எவ்விதப்பயனையும் தராது ஆசிரியர் தரும் ஞான உடம்பே அழியாத புகழைத் தரும் என்று கூறுகின்றது. இவற்றின்வழி ஒருவனுக்கு அழியாத நிலையான புகழினைத் தருகின்றவர் ஆசிரியர் என்பது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. ஆசிரியர் எனபவர் மாணாக்கர்களுக்கும் தன்னைச் சார்ந்த

சமுதாயத்திற்கும் அழியாத புகழைத் தருகின்றவராக இருத்தல் வேண்டும். "ஆசிரியன் சமூகத்தின் சிறந்த பணியாளன்"[22] என்கிறார் கோதண்டராமன். ஆசிரியரின் செயல்பாடுகள் மற்றவர்களால் உற்றுநோக்கப்படுகின்றன என்பதை உணர்ந்து ஆசிரியர் செயல்பட வேண்டும்.

> ***"ஞானாசி ரியன் என்னும் குரவனின்றி நரர்த்த***
> ***மீனரவம் பவவிரா வையகலா ரெவருமே***
> ***கானம்வாழ் மிருகமாவர் கதிவாயில் பொதியு***
> ***மானவர்க் குறையுளாய் நிரயம் வாய்விரியுமே"***
>
> ***(நீதிநூல்.அதி.5.பா.4)***

என்ற இப்பாடல் மக்களுக்கு அறியாமை இருளைப் போக்குபவர் ஆசிரியர். இவ்வறியாமை இருளைப் போக்காதவர் விலங்கிற்கு ஒப்பாவர். அவர்களுக்குக் கடவுளின் அருள் கிட்டாது. கடவுளின் அருள் கிடைக்கப்பெற வேண்டுமெனில் கல்வி இன்றியமையாதது என்று எடுத்துரைக்கின்றது. இதனைத் திருக்குறள்,

> ***"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்***
> ***கற்றாரோ டேனை யவர்"[23]***
>
> ***(குறள்.410)***

என்று கூறியுள்ளது. இவற்றின் வழி ஆசிரியரது செயல்கள் அறியாமை இருளை நீக்குவதாகவும், கல்வியின் இன்றியமையாமையை எடுத்துரைப்பதாகவும் அமைதல் வேண்டும் என உணரமுடிகின்றது.

ஆசிரியரது செயல்கள் மன இருளை நீக்குவனவாகவும், பாவ, புண்ணியங்களை உணர்த்தி, அவர்களை நல்வழிப்படுத்துவதாகவும், சமுதாயத்தில் அழியாத புகழைத் தருகின்றதாகவும், கல்வியின் அவசியத்தையும் எடுத்துரைப்பதாகவும் இருத்தல் வேண்டும்.

**ஆசிரியராகாதோர்**

ஆசிரியர், நல்லாசிரியர் என்று குறிப்பிடும் பொழுதே இரண்டிற்கும் உள்ள வேறுபாடு புலப்படுகின்றது. இவற்றினும் ஆசிரியராகாதோர் என்று குறிப்பிடும் பொழுது அப்பணிக்குத் தகுதியற்றோர் என்பது உணரப்படுகின்றது. இது ஆசிரியர், மாணவன் என்ற இருவரும் தோன்றிய காலம்தொட்டுக் காணப்படுகின்றது. ஏனெனில் ஆசிரியர் மாணவர் பற்றிய குறிப்புகள் காணப்படும் பொழுதே ஆசிரியர், ஆசிரியரல்லாதோர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசிரியரல்லாதோர் பற்றிய குறிப்புகள் சங்க மருவிய காலத்திற்குப் பின் அதிக அளவில் காணப்படுகின்றன.

தொல்காப்பியம் ஆசிரியரல்லாதோர்க்கான இலக்கணங்களை எடுத்துரைக்கின்றது. சங்க காலத்தில் ஆசிரியல்லாதோர் பற்றிய பதிவுகள் காணப்படவில்லை. சங்க மருவிய காலங்களிலே இம்மாதிரியான பதிவுகள் நிறையக் காணப்படுகின்றன.

> **“நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போற்செறிக்கும்**
> **தீப்புலவர் சேரார் செறிவுடையர்; தீப்புலவன்**
> **கோட்டியுள் குன்றக் குடிப்பழிக்கும் அல்லாக்கால்**
> **தோட்புடைக் கொள்ளா எழும்”**
>
> ***(நாலடி.312)***

ஆசிரியர் என்பவர் பாடத்தைப் பற்றித் தெளிவாக ஆராய்ந்து மாணாக்கர்களுக்கும் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும். எதனையும் தெளிவாக ஆராயாமலும் மாணாக்கர்களுக்குப் புரியும்படித் தெளிவாக எடுத்துரைக்காமலும் தான் மனப்பாடம் செய்தவற்றை அப்படியே மாணாக்கர் களுக்கு எடுத்துரைத்து ஏதோ பொருள் உணர்ந்தவர் போல் நடித்துத் தன்னுடைய அறியாமைக் கருத்துக்களை அவற்றுள் புகுத்திச் சொல்லும் பொய்யான புலவர்கள் நல்லாசிரியர்களை நெருங்கமாட்டார்கள்.

அவர்களிடமிருந்து எப்போதும் விலகிச் செல்வர். ஏனெனில் நல்லாசிரியர்கள் செல்லுமிடத்தில் தீய ஆசிரியர்களின் உண்மைநிலை வெளிப்பட்டு அவர்களுக்கு இழுக்கு நேர்ந்துவிடும். அவ்வாறு நேர்வதால் அப்பொய்ப்புலவன் நல்லாசிரியர்கள் மேல் கோபம் கொண்டு அவர்களைப் பற்றி இழிவாகப் பேசிவிடுவான். இல்லையேல் தோளைத் தட்டிக்கொண்டு சண்டையிடுவதற்கு வருவான். இத்தகைய குணத்தை உடையவர்கள் ஆசிரியரல்லாதோராவர்.

இவற்றின் வழி ஆசிரியர் என்பவர் தனக்குரிய தகுதிகளை வளர்த்துக் கொண்டு செல்லுமாறும் தன் போன்ற ஆசிரியர்கள் தன்னைப் பற்றிக் குறை கூறாத அளவிற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ளுமாறும் அறிவுறுத்துகின்றது. தன்னைப் பற்றிக் குறை கூறினாலும் அவற்றைக் கண்டு சினங்கொல்லாது தன்னை மேம்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் கூறுகின்றது. அப்போது தான் சக ஆசிரியர்களும் தன்னோடு நன்றாகப் பழகுவர் என்பதும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர் என்பவர் தன்னை வளர்த்துக் கொண்ட பின்பு கற்பிக்க வேண்டும். இல்லையேல் அவ்வாசிரியர்கள் தன்னாசிரியர்களிடத்தும் தன்னுடைய மாணாக்கர்களிடத்தும் அவமானப்பட நேரும். இத்தகைய ஆசிரியர்களும் அக்கால கட்டங்களில் இருந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

**“சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்**
**கற்றாற்றல் வன்மையும் தாம் தோற்றார்; கற்ற**
**செலவுரைக்கும் ஆற்றறியார் தோற்ப தறியார்**
**பலவுரைக்கும் மாந்தர் பலர்”**

***(நாலடி.313)***

இப்பாடல், சொல் என்னும் முள்குச்சி கொண்டு நாத்தினவெடுத்துப் பேச ஆசை கொள்ளும் அறிவிலார், கல்வி கேள்விகளின் நுட்பத்தைச் சிறிதும் ஆராயாமல் இருப்பர். கற்பித்தலின் நுட்பத்தை ஆராயாதவர்கள்

ஆசிரியர்களாகமாட்டார்கள். தாம் கற்றவற்றைப் பிறர் மனம் அறியுமாறு எடுத்துரைக்கும் ஆற்றலற்றவராய் இருப்பர். தாம் பேசுகின்றவைகள் எல்லாம் வீணான சொற்கள் என்பதையும் அறியாமலிருப்பர். இவர்களைப் போன்றோர் தாம் கூறக்கருதிய ஒன்றை விளக்கப் பல சொற்களைக் கையாண்டு காலத்தை வீணடிப்பார்கள் என்று உரைத்துள்ளது.

அஃதாவது முழுமையும் கற்றறியாத ஆசிரியர் கற்றறிந்தார் அவையில் பேசுதல் கூடாது. இவர்களால் காலம் வீணாகின்றதே தவிர இத்தகைய ஆசிரியர்களால் எவ்விதப் பயனும் இல்லை. முழுமையாகக் கற்று அவற்றை எளிமையான முறையில் பலரும் அறிந்து கொள்ளுமாறு உரைப்பவரே ஆசிரியர். அவ்வாறு கூற இயலாதவர்கள் ஆசிரியராகமாட்டார்கள்.

மாணாக்கர்களின் காலத்தை வீணடிப்பவரும் கற்பித்தலின் நுட்பத்தை அறியாதவர்களும் ஆசிரியராகார். திறமையானவர்களே ஆசிரியராதல் வேண்டும்.

> **“கற்றதூ மின்றிக் கணக்காயர் பாடத்தால்**
> **பெற்றதாம் பேதையோர் சூத்திரம் மற்றதனை**
> **நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்**
> **புல்லறிவு காட்டி விடும்”**
>
> ***(நாலடி.314)***

அறிவில்லாதவன் தான் ஆழமாகக் கற்காமல், கேள்வியறிவும் இல்லாமல், நெட்டுருச் செய்து மனப்பாடத்தால் தெரிந்து கொண்ட சூத்திரத்தை நல்ல புலவர்கள் கூடிய அவையில் வெட்கம் இன்றி விரிவாக எடுத்துக்கூறி தன் சிற்றறிவைப் புலப்படுத்திக் கொள்வார்கள்.

அறிவில்லாதவன் எதனையும் ஆராய்ந்து ஆழமாகக் கற்பதில்லை. ஆயினும் தன்னையும் அறிவாளி என்று காட்டிக் கொள்வதற்கு முற்படுவான். அதற்காக அவன் பள்ளிக்கூட ஆசிரியர் கற்றுக்கொடுத்த ஒன்றைப் பொருள்

புரியாமல் மனப்பாடம் செய்து கொண்டு வந்து கற்றறிந்தோர் அவையில் சிறிதும் வெட்கமின்றித் தன்னையும் அறிவாளியாகக் காட்டிக் கொள்வான். உண்மையான அறிவைப் பெற்றவர் தன்னைத் தானே புகழ்ந்து கொண்டு திரிவதில்லை.

> ***"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை***
> ***அணியுமாம் தன்னை வியந்து"***[24]
>
> ***(குறள்.978)***

தற்பெருமை கூறுபவர் ஆசிரியராகமாட்டார். ஆழமாகக் கற்றறிந்த ஆசிரியரும் தன்னை வியந்து பாராட்டிக் கொள்வதில்லை.

> ***"பிள்ளைபேய் பித்தன் பிணியாளன் பின்னோக்கி***
> ***வெள்ளை களிவிடமன் வேட்கையான் தெள்ளிப்***
> ***புரைக்கப் பொருளுணர்வா னென்றிவரே நூலை***
> ***உரைத்தற் குரிமையிலா தார்"***
>
> ***(அறநெறி.5)***

ஆசிரியர் என்பவர் நன்மை, தீமைகளை ஆராய்ந்து அறிந்து அவற்றை மாணாக்கர்களுக்கு எடுத்துரைத்தல் வேண்டும். அவ்வாறு அறிய இயலாதவர் ஆசிரியரல்லர். இதனைப் பிள்ளை என்று இப்பாடல் உணர்த்துகின்றது. நன்மை, தீமை என்று இனம்காண இயலாத சிறுவர்கள், ஆசிரியராகத் தகுதியற்றவர் ஆவர். மேலும் பேய் பிடித்தவர், மனநிலை பாதித்தவர், நோய்வாய்ப்பட்டவர் ஆகியோர் ஆசிரியராகார்.

நினைத்ததை அடையும் திறன் இல்லாத பின்னோக்கி, அறிவில்லாதவன், கள்குடிப்பவன், பிறருக்குத் துன்பம் தருவதையே இயல்பாகக் கொண்ட விடமன், பேராசை கொண்டவர்கள், குற்றமுடைய செயல்களை ஆராய்ந்து அவற்றையே செய்கின்றவர்கள் ஆகிய இவர்கள் அனைவரும் அறம் கூறத் தகுதியற்றவர்கள் என்று எடுத்துரைத்துள்ளது. இதனை நன்னூல் ஆசிரியராகாதவர்க்கான இலக்கணமாகக் கூறுகின்றது.

**“திருடன் பொருட்கா வலனாதலுஞ் செல்வழிக்குக்**
**குருடன் குருடன்றனை யேதுணைக் கொள்ளல்போலு**
**மிருடங் குளமாந்தரை வான்கதியேற்ற வென்னா**
**வருடங்கிய நெஞ்சமி லான்குரு வாயவாறே”**

***(நீதிநூல்.அதி.6.பா.1)***

ஆசிரியர் என்பவர் அருள் நிறைந்த நெஞ்சத்தை உடையவராக இருந்தால்தான் அவரிடத்தில் கற்கும் மாணாக்கர்கள் அருளாளர்களாகக் கல்வியின் பயனைப் பெறமுடியும். அன்பும் அருளும் இல்லாத ஆசிரியர் கற்றுக் கொடுக்கும் கல்வி மாணவர்களுக்கு எவ்விதப் பயனையும் தராது. அன்பில்லாத ஆசிரியரிடத்தில் கற்கத் துணிதல் என்பது திருடனிடத்திலே பொருளைக் கொடுத்துப் பாதுகாக்கச் சொல்வதற்குச் சமமாகும். குருடனுக்கு வழித்துணையாகக் குருடனே செல்வது போன்றாகும்.

அன்பில்லாத ஆசிரியரைத் திருடனுக்கும் குருடனுக்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளதால் அன்பால் மட்டுமே ஆசிரியர் கல்வி புகட்ட வேண்டும் என்பது புலனாகின்றது. அன்பில்லாதவர் ஆசிரியராகார்.

**“பெருவெம் பிணியாளன் மற்றோர்பிணி போகும் வண்ணந்**
**திருமந் திரஞ்சொல்வ னென்றோ திடிற் றிணமையாமோ**
**தருமந்தனை நாட்ட வந்தோன்குறை தானுளானேல்**
**இருமண் டலமீதவன் சொல்லெவ ரேற்பர்மாதோ”**

***(நீதிநூல்.அதி.6.பா.2)***

தன் நோயைப் போக்கிக் கொள்ளாதவன் பிறர் நோயைப் போக்க மந்திரிப்பது சரியாகாது. அதுபோன்று குற்றமுள்ள ஒருவன் நன்மையை உலகுக்குச் சொன்னால் உலகத்தார் அதனை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்.

ஆசிரியர் என்பவர் உலகிற்கு நன்மை தீமைகளை எடுத்துக் கூறுகின்றவர். இத்தகைய சிறப்புக்குரிய ஆசிரியர் முதலில் தன்னை

ஒழுக்கமுடையவராக்கிக் கொள்ள வேண்டும். அவ்வாசிரியர் ஒழுக்கமற்றவராக இருந்து கொண்டு உலகிற்கு மட்டும் நல்லனவற்றை எடுத்துக் கூறினால் உலகம் அதனை ஏற்றுக் கொள்ளாது. மாறாக அவரைப் பழித்துப்பேசும். அத்தகைய ஆசிரியர் நல்லாசிரியராகமாட்டார். ஆசிரியரின் வாழ்வு என்பது மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாகும்படி அமைதல் வேண்டும். ‘‘ஆசிரியர்களுள் ஆயிரத்தில் ஒருவராவது நித்திய பிரம்மச்சாரியாகவும் தூய துறவியாகவும் இருப்பானாகில் அவனுடைய வாழ்வு உலகுக்குப் பெரிதும் பயன்படும். அவன் தலைத்தரமான ஆசிரியனாவான்’’[25] என்று ஆசிரியன் எனும் நூல் கூறுகின்றது. ஆசிரியர் என்பவர் சிறந்த ஒழுக்கமும் பண்பும் கொண்டவராக விளங்க வேண்டும்.

ஆசிரியர் என்பவர் இச்சமுதாயத்தின் முன்னோடி, எதிர்கால சமுதாயத்தைத் தீர்மானிக்கும் காரணி. ஆதலால் ஆசிரியர்கள் நன்மை தீமைகளை ஆராய்ந்து எடுத்துரைப்பவராக விளங்க வேண்டும்.

**‘‘வாயில் தேனுந்தன் வாலிற் கொடுக்குஞ்சேர்**
**ஈயின் வாயினி லிங்கிதச் சொல்லொடுந்**
**தீயசெய்கையு ளானைத் தினஞ்சிறு**
**சேயும் எள்ளுந்தன் சிந்தையும் எள்ளுமே’’**

***(நீதிநூல்.அதி.6.பா.6)***

தேனும், கொடுக்கும் முன்னும் பின்னும் அமைந்த ஈயைப் போன்று வாயில் இனிய சொல்லும் கையில் கொடுஞ்செயலும் உள்ளவனை நாளும் சிறுவர்களும் இகழ்வர், அவனுடைய உள்ளமும் சிரிக்கும்.

அன்பினால் விளையும் கல்வியே பயனைத் தரும். அன்புடையோரே ஆசிரியர். அன்பில்லாதோர் ஆசிரியராகார் என்று பல்வேறு நூல்களும் எடுத்துரைத்துள்ளன. வெவ்வேறு காலகட்டங்களில் தோன்றிய நூல்கள் அனைத்தும் அன்பு செலுத்திக் கற்பித்தல் வேண்டும் என்கின்றன. அதுபோன்றே

இந்நூலும் உரைத்துள்ளது. ஆசிரியர் என்பவர் தேனை மட்டும் கொடுப்பவராக இருத்தல் வேண்டும் என்கின்றது. கொடுஞ்செயல்புரிபவராக இருப்பாராயின் அவரைச் சிறுவர்களும் இகழ்வர். தன் உள்ளமும் சிரிக்கும் என்று அறிவுறுத்துகின்றது.

ஆசிரியரின் செயல்கள் மென்மையானதாகவும், அனைவரும் விரும்பி ஏற்கும் வண்ணமும் இருத்தல் வேண்டும். கொடுஞ்செயல் புரிகின்றவர்கள் ஆசிரியராகமாட்டார்கள்.

ஆசிரியர் என்பவர் அனைத்தையும் முழுமையாகக் கற்றுத் தெரிந்து கொள்ளவேண்டும், இல்லையேல் பிற ஆசிரியர்களிடத்தும் தன் மாணாக்கரிடத்தும் அவமானப்பட நேரிடும். முழுமையாகக் கற்காதவர் ஆசிரியராகமாட்டார். கற்பித்தலில், நுட்பத்தை ஆராய்ந்து கற்பித்தல் வேண்டும். கற்பித்தலின் நுட்பத்தை அறியாதவர் ஆசிரியராகமாட்டார். மேலும் தற்பெருமை பேசுபவர்கள், பிணியுடையோன், பின்னோக்கி, அறிவில்லாதவன், கள்குடிப்பவன், நன்மை, தீமைகளை உணர்ந்தறியாதவன், அன்பில்லாதவன், கொடுஞ்செயல் புரிகின்றவன் ஆகியோர் ஆசிரியராகமாட்டார்கள் என்பதை மேற்கண்ட பாடல்களின் வழி அறியமுடிகின்றது.

**இலக்கியங்களில் மாணாக்கர்கள்**

மாணாக்கர்கள் காலம்தோறும் இருந்து வந்தபோதிலும் அவர்கள் காலத்திற்கு ஏற்ப மாற்றம் பெற்றவர்களாகவும் இருந்து வந்துள்ளனர். சங்க காலத்தில் இருந்த மாணாக்கர்களுக்கும் பதினெட்டாம் நூற்றாண்டில் காணப்படும் மாணாக்கர்களுக்கும் நிறைய மாற்றங்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு காலகட்டங்களிலும் காணப்படும் மாணவர்கள் பற்றியும் அவ்வக்கால கட்டங்களில் தோன்றிய இலக்கியங்களில் காணலாம். மாணாக்கர்கள் திசை மாறிய போது அவர்களைத் திருத்தும் முகமாக புலவர்கள்

மாணாக்கர் தம் இயல்புகளையும், அவர்களின் பண்புகளையும், அவர்கள் கல்வி கற்க மேற்கொண்ட வழிமுறைகளையும், அன்றைய மாணாக்கர்களின் நிலையையும், வகுப்பறைகளில் மாணாக்கர்கள் கடைபிடிக்க வேண்டியவற்றையும் நன் மாணாக்கர் பண்புகள், மாணாக்கரற்றோர்க்கான பண்புகள் பற்றியும் இப்பகுதியில் எடுத்துரைக்கப்பெற்றுள்ளது.

**முதனிலை மாணாக்கன்**

> ***“அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்***
> ***தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ***
> ***இரந்தூ ணிரம்பா மேனியொடு***
> ***விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே”***
>
> ***(குறுந்.33)***

இப்பாடலின் வழியே முதன்முதலில் மாணாக்கன் என்ற சொல் கையாளப்பட்டுள்ளது.

தோழியே இவனோர் இளமாணாக்கன். ஆயினும் இவனது செயல்களால் இளமாணாக்கன் என்பதையும் மீறி பெரிய தலைமைத் தன்மை உடையவனாகக் காணப்படுகின்றான் என்று கூறுகின்றாள். இவற்றினின்று மாணாக்கர்கள் என்பவர்கள் ஆண்டானும், கல்வியானும் முதிர்ந்திருத்தல் வேண்டும். இருப்பினும் இங்கே ஆண்டானும் கல்வியானும் முதிராமல் இருந்தும் இவன் திறமையானவனாகக் காணப்படுகின்றான். இதனையே நன்னூலார் முதல், இடை, கடை மாணாக்கர்கள் என்கிறார். முதல் நிலை மாணாக்கனே குணத்தையும் குற்றத்தையும் பிரித்துப் பார்த்து ஆராய்ந்து அறியும் தன்மை பெற்றவனாகக் காணப்படுவான்.

முழுமையான கல்வியும், அதற்கான தோற்றச் சிறப்பும், ஆண்டு முதிர்வும் இல்லாதிருந்தும் மாணாக்கனது அறிவுத்திறம் இங்கே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதனை,

**“அறிவு தோற்றம் ஆராய்ந்த கல்வி இம்மூன்றும்**
**செறிவுடையான் செல்வ விளைக்கு”[26]**

***(குறள்.684)***

இயற்கை அறிவு, விரும்பத்தக்க தோற்றம், ஆராய்ச்சியுடைய கல்வி ஆகிய இம்மூன்றின் பொருத்தம் உடையவன் தூதாகச் செல்லலாம் என்கின்றது. இவற்றின்வழி இயற்கையாகவே அறிவுத்திறம் பெற்ற மாணாக்கர்களும் ஆராய்ச்சி அறிவு பெற்ற மாணாக்கர்களும் சங்க காலத்தில் இருந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. அதுமட்டுமின்றி கற்கும் ஆர்வமும் முழுமையான ஈடுபாடும் கொண்ட மாணவன் யாராக இருந்தாலும் அவர்கள் முதன்மையான மாணாக்கர்களாகத் திகழமுடியும். இதற்கு எடுத்துக்காட்டாக,

அர்ச்சுணனுக்கு ஆசிரியராக இருந்த துரோணாச்சாரியாரிடம் தூரத்திலிருந்தே கண்ணால் கண்டு வில்வித்தையைக் கற்றுத் தேர்ந்த மாணவன் ஏகலைவனைக் கூற இயலும். இதனின்று அன்றைய ஆசிரியரான துரோணரின் பயிற்றும் திறனும் மாணாக்கரின் உற்றுநோக்கும் திறனும் வெளிக்கொணரப்படுகின்றது.

**“உரைமுடிவு காணான் இளமையோன் என்ற**
**நரைமுது மக்கள் உவப்ப – நரைமுடித்துச்**
**சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை**
**கல்லாமல் பாகம் படும்”**

***(பழமொழி.7)***

உண்மையை ஆராயும் அறிவு நிரம்பப்பெற்றவர்கள் முதியோர்களே, இளமையான சிறுவர்கள் ஆராய்ந்து அறியும் திறமை பெறமுடியாது என்று நரைமுது மக்கள் எண்ணுவர். அதுபோன்று கரிகாற் பெருவளத்தான் முதுமைப் பருவம் பூண்டு நீதி கூறினான் என்று கூறப்பட்டுள்ளது.

அறிவும், ஆற்றலும், அனுபவமும் நிறைந்தவர்கள் மட்டுமே நீதி கூறமுடியும். அத்தகையோராக முதியோர்களே இருக்க முடியும்.

இளம் சிறுவர்கள் ஆராய்ந்து அறியும் திறமை பெறமுடியாது என்ற போதிலும் இவ்வாறு வழிவழியாக நீதி கூறும் தன்மை கொண்ட குலத்தில் பிறந்தோர்களுக்கு அக்குணம் இயல்பாகவே அமைந்துவிடும். தத்தம் குலத்திற்கு உரிய அறிவாற்றல் இயற்கையாகவே அமைந்துவிடும். இதனையே 'குலவித்தை கல்லாமலே அமைந்துவிடும்' என்று பழமொழி நானூறு எடுத்துரைத்துள்ளது.

தம் குலத்தார் சிறந்த பண்பும், ஒழுக்கமும், அறிவாற்றலும் பெற்றிருப்பார் எனின் அவ்வழியில் தோன்றும் மக்கள் இயல்பிலே அறிவாற்றல் மிக்கவர்களாக இருப்பர். அவர்களே முதல்நிலை மாணாக்கர்களாகவும் திகழ்கின்றனர் என்பது இப்பாடல் வழி உணர்த்தப்பட்டுள்ளது. நல்லாசிரியர் குடும்பத்தில் தோன்றியவர்கள் நன்மாணாக்கர்களாகத் திகழ்வர். ஆதலாலே கற்பதற்குக் குடிப்பிறப்பு இன்யமையாததாகக் கருதப்படுகின்றது.

இயற்கை அறிவு, விரும்பத்தக்கத் தோற்றம், ஆராய்ச்சியுடைய கல்வி, நல்ல குடிப்பிறப்பில் பிறந்தவன், முதல்நிலை மாணாக்கனாகத் திகழமுடியும்.

**மாணாக்கரின் பண்பு, ஒழுக்கம்**

***"கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்***
***தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்***
***ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான், மற்று அவன்***
***எச்சத்துள் ஆயினும், அஃது எறியாது விடாதேகாண்"***

***(கலி.149)***

கல்வி கற்பிக்கும் ஆசிரியர் தம் மாணவர்களையே நம்பி வாழ்ந்துள்ளனர். அவர்களின் தேவைகள் அனைத்தும் மாணாக்கர்களைக் கொண்டு பூர்த்திசெய்து கொள்வர். அவ்வாறு மாணாக்கர் அளிக்கும் பணமும் பொருளும் குருதட்சணை என அழைக்கப்பட்டன.

மாணாக்கனின் துன்பம் தீர்த்தற்பொருட்டுக் கல்வியைக் கற்றுத்தந்த ஆசிரியரின் குருதட்சனையைக் கொடுத்தல் வேண்டும். கல்வியைக் கற்றுக் கொண்டு ஆசிரியருக்கான கூலியைத் தராமல் ஏமாற்றுவது துன்பம் தரக்கூடியதாக அமையும். அத்துன்பம் என்பது இப்பிறவியில் மட்டுமின்றி அத்தீவினை குருதட்சனை கொடுக்காத மாணவனின் மறுபிறவியிலும் விடாது. அந்த அளவிற்குத் தீய துன்பத்தைத் தருவதாக அமைந்துவிடும் என்று கலித்தொகை குறிப்பிடுகின்றது. அதிவீரராம பாண்டியர் ''பிச்சை புகினும் கற்கை நன்றே''[27] என்று கூறுகின்றார். மாணாக்கனின் துன்பம் தீர ஆசிரியர் கல்வியைக் கற்றுக் கொடுக்கின்றார். அத்தகைய ஆசிரியரின் துன்பத்தைத் தீர்த்தல் மாணாக்கரின் கடமை. ஆதலால் பிச்சையெடுத்தேனும் கல்வி கற்க வேண்டும் என்கிறார். கல்வி கற்றுத்தந்த ஆசிரியருக்குக் கூலியைக் கொடுக்கும் நற்பண்பு கொண்டவராக மாணாக்கர் இருத்தல் வேண்டும்.

***''நாவன்றோ நட்பறுக்குந் தேற்றமில் பேதை***
***விடுமன்றோ வீங்கிப் பிணிப்பின் அவாஅப்***
***படுமன்றோ பன்னூல் வலையிற் கெடுமன்றோ***
***மாறுள் நிறுக்குந் துணிபு''***

***(நான்மணி.81)***

பதறிப்பேசும் நாக்கு நட்பறுக்கும், வற்புறுத்திக் கட்டாயப் படுத்தினால் தெளிவில்லாத அறிவிலி நல்ல செயல்களைக் கைவிடுவான். பல நூல்களைக் கற்றுத் தெளிந்த நன்மாணாக்கனின் தீய அவாக்கெடும். அவ்வாறு அவன் துணிவு எண்ணத்தால் பகைமைக்கண் சென்றால் அவன் கெட்டு அழிவான்.

இவற்றின் வழி மாணாக்கன் என்பான் ஆராய்ந்து அறிந்த சொற்களைப் பேசுதல் வேண்டும் என்று விளம்பிநாகனார் குறிப்பிட்டுள்ளார். இதனைத் திருவள்ளுவர்,

**“யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு”[28] (குறள்.127)**

என்று கூறுகின்றார். மாணவன் என்பான் யாரிடமும் பகை கொள்ளக்கூடாது. நன் மாணாக்கனாக விரும்புகின்றவர்கள் மற்றவர்களிடம் பகை கொள்ள மாட்டார்கள். அவ்வாறு பகை கொள்வான் எனில் அவன் கெட்டு அழிவது உறுதி.

பல நூல்களைக் கற்றறிவதால் மாணாக்கருக்குத் தீய ஆசைகள் கெடும். அவ்வாறு பல நூல்களையும் கற்று அறிந்தவனே நன் மாணாக்கன் என்று நான்மணிக்கடிகை எடுத்துக் கூறுகின்றது.

**“விளக்கு விலைகொடுத்துக் கோடல் விளக்குத்**
**துளக்கம்இன்று என்றனைத்தும் தூக்கி விளக்கு**
**மருள்படுவ தாயின் மலைநாட என்னை**
**பொருள் கொடுத்துக் கொள்ளார் இருள்”**
**(பழமொழி.4)**

நாம் விளக்கிற்கு வேண்டிய எண்ணெய், திரி ஆகிய பொருள்களை விலை கொடுத்து வாங்குவது இருளைப் போக்குவதற்காகவே. அதுபோன்று மாணாக்கர்கள் தங்கள் ஆசிரியர்களுக்குப் பொருளைக் கொடுத்துக் கல்வி கற்பது அறியாமை இருளைப் போக்கவே.

மாறாகப் பொருளைக் கொடுத்துக் கற்கும் மாணவர்கள் நல்ல நூலைப் பயிலாமல் பயனற்றவைகளைக் கற்றல் கூடாது என்கின்றது. கற்கும் மாணவர்கள் பயனுடைய நூல்களைக் கற்றல் வேண்டும். பொருளைக் கொடுத்து இருளைப்பெற யாரும் முன்வரமாட்டார்கள். அதுபோன்றே மாணாக்கர்களும் பொருள் கொடுத்துக் கற்கும் கல்வி அம்மாணவனுக்குப் பயனைத்தரவேண்டும் என்று உரைத்துள்ளது.

இதன்வழி மாணாக்கர்கள் கற்கும்பொழுது நல்லனவற்றைக் கற்றல் வேண்டும் என்று எடுத்துரைக்கின்றது.

> ***“நெய்தன் முகிழ்த்துணை யாங்குடுமி நேர்மயிடும்***
> ***உய்தல் ஒருதிங்கள் நாளாகும் – செய்தல்***
> ***நுணங்குநூல் ஓதுதல் கேட்டல்மா ணாக்கர்***
> ***வணங்கி வலங்கொண்டு வந்து”***
>
> ***(சிறு.30)***

கற்கும் மாணவர்கள் குடுமி வைத்துக்கொள்ள வேண்டும். அக்குடுமியும் கருமையான நெய்தல் பூவின் மொட்டின் அளவே இருந்தல் வேண்டும். தலைமுடியை மாதம் ஒருமுறை திருத்திக் கொண்டு வருதல் வேண்டும். கற்கும் மாணவர்களின் கடமைகளில் இவை இன்றியமையாதவை. ஓதுதலும், படித்தலும், கேட்டலும் மாணாக்கருக்குரிய கடமைகளாகும்.

இப்பாடலின் வழி மாணாக்கர்களின் ஒழுக்கம், பண்பு, கடமை ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அக்கால கட்டத்தில் மாணாக்கர்களுக்கான ஒரே மாதிரியான தோற்ற அமைப்புமுறையும் கடைபிடிக்கப் பட்டமையை அறியமுடிகின்றது. இதுவே பின்னாளில் மாணாக்கர்களுக்கான சீருடை ஏற்படுத்தும் முறையாக மாற்றம் பெற்றுள்ளது. மாணாக்கரின் இன்றியமையாத கடமையாக ஓதுதலும், படித்தலும், கேட்டலும் இருந்தன என்பது உணரப்படுகின்றது.

> ***“வைப்பானே வள்ளல் வழங்குவான் வணிகன்***
> ***உய்ப்பானே ஆசான் உயர்கதிக்கு – உய்ப்பான்***
> ***உடம்பினார் வேலி யொருப்படுந்தூன் ஆரத்***
> ***தொடங்கானேல் சேறல் துணிவு”***
>
> ***(சிறு.34)***

மாணவன் நல்லறிவைப்பெற்று நற்கதிக்கு ஆளாக வேண்டுமாயின் அம்மாணவன் உயிர்க்கொலை செய்தல் கூடாது. மேலும் ஊன் உண்ணாமலும்

இரக்கக்குணம் கொண்டவர்களாக இருத்தல் வேண்டும் என்று அறிவுறுத்துகின்றது.

உயிர்க்கொலை செய்தலையும் புலால் உண்ணுதலையும் ஒரு மாணவன் மேற்கொள்வானாயின் அம்மாணவன் உயர்கதிக்குச் செல்ல முடியாது. மாணாக்கரை உயர்கதிக்கு இட்டுச் செல்பவர் ஆசிரியர். அவ்வாறு மாணவன் உயர்கதிக்குச் செல்ல வேண்டுமாயின் மேற்கூறிய இரண்டையும் ஒழித்தல் வேண்டும்.

**"நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்மல்**
**இவையும் பெரியார்முன் செய்யாரே செய்யின்**
**அசையாது நிற்கும் பழி"**

***(ஆசாரக்.73)***

ஆசிரியர் முன் சிரித்தலும், கொட்டாவி விடுதலும், காறி உமிழ்தலும், தும்மலும் செய்தல் கூடாது. அவ்வாறு செய்யின் அவர்கள் பழிநிலைக்கு ஆளாவார்கள். அவை இழிவுபடுத்தும் செயல்களாகும். கொட்டாவி விடுதலும் தும்முதலும் மாணவர்கள் பாடத்தின் மீது கவனம் செலுத்தாமையை எடுத்துக்காட்டுகின்றன. பிற மாணவர்களுக்குத் தொற்றுநோய் உண்டாவதற்கு வாய்ப்புண்டு. நாகரிகமற்றதாகவும் கருதப்படும்.

மேற்கூறிய செயல்கள் யாவும் மாணவர்கள் ஆசிரியர் முன்பு செய்யக் கூடாதவை. இத்தகைய செயல்கள் ஆசிரியர்களை அவமதிப்பதற்குச் சமமாகும். ஆசிரியர்களை மாணவர்கள் அவமதிக்கக்கூடாது. நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்றும் மாணவர்கள் பண்பும் ஒழுக்கமும் நிறைந்த மாணவர்களாவர்.

**"தந்தையுரை தட்டினவன் றாயுரை யிகழ்ந்தோன்**
**அந்தமுறு தேசிகர்தம் மாணையை மறந்தோன்**

***சந்தமுறு வேதநெறி தாண்டினவிந் நால்வர்***
***செந்தழலின் வாயிடை சேர்வதுமெய் கண்டீர்''***
***(விவேக.68)***

தந்தையின் சொல்லைக் கேளாதவன், தாய் கூறும் அறிவுரைகளை இகழ்ந்தவன், ஆசிரியரின் ஆணையை மறந்தோன், வேதநெறியைத் தாண்டிச் செல்பவன் தீயவழியில்கெட்டு அழிவான். இந்நால்வரின் உரைகள், கருத்துக்கள் அனைத்தையும் ஒரு மாணவன் ஏற்று நடத்தல் வேண்டும்.

ஆசிரியர் கற்றுக் கொடுத்த பாடத்தையும், வாழ்வியல் சிந்தனைகளையும், விழுமியக் கருத்துக்களையும் மாணவன் மறப்பானாயின் அம்மாணவன் எடுக்கும் முடிவு அவனது வாழ்வில் தீயனவாக மாறிவிடும்.

மாணவர்கள் தான் கற்ற பாடங்களையும் நல்லனவற்றையும் மறவாமல் இருத்தல் வேண்டும் என்பதை விவேகசிந்தாமணி எடுத்துரைத்துள்ளது. நல்லோர் சொல்லைக் கேட்டு நல்லனவற்றைச் செய்தல் மாணாக்கரின் பண்புகளாகும். ஆசிரியர் சொல்லினின்று தவறி நடப்பவன் கெட்டழிவான்.

***''அகவிரு ளகல ஞான விளக்கினை யருளி னேற்றிச்***
***சகலமு நல்குங் கேள்வித் தனத்தினை நல்கி யாதிப்***
***பகவன் றன்சொரூபங் காட்டிப் பவமறமிரண்டுங் காட்டிச்***
***சுகநிலை காட்டுந் தியாகத் தோன்றலை மறவாய் நெஞ்சே''***
***(நீதிநூல்.அதி.5.பா.1)***

மாணவனின் மனவிருள் அகல அவனுடைய வாழ்வில் ஞான விளக்கினை ஏற்றி அழியாத செல்வத்தைத் தருகின்ற ஆசிரியரை மாணவர்கள் மறந்துவிடுதல் கூடாது. ஆசிரியரை மறவாத பண்பே மிகச்சிறந்த பண்பாகும்.

நீதிநூல் ஆசிரியரைத் தியாகத் தோன்றல் என்று கூறுகின்றது. தியாகத் தோன்றலை மறவாய் நெஞ்சே என்று கூறுவதன்வழி மாணாக்கன் தனக்குத் தானே அறிவுரை கூறியுள்ளான் என்பது புலப்படுகின்றது.

**“நாட்டமின்றி யொளியெப் பயனை நல்கு மனையில்**
**பூட்டுபொன் றிறவுகோ லினையலாது புகுமோ**
**வேட்டகத் தரியநூல்க ளாளவேனு மினதாக்**
**காட்டருட் குரவனின்றி யெவர் காண்பர் பயனே”**

***(நீதிநூல்.அதி.5.பா.3)***

*கண்ணில்லாவிட்டால் ஒளியின் பயனை அறியமுடியாது. திறவுகோல் இல்லாவிட்டால் வீட்டின் உள்ளே புகமுடியாது. அதுபோன்று வீட்டில் விரும்பிய நூல்கள் நிறைய இருப்பினும் ஆசிரியர் அவற்றை விளக்கிக்காட்டினால் மட்டுமே நூலின் பயனை அறியமுடியும். அவ்வாறு அல்லாமல் ஒருவராலும் நூலின் பயனைப் பெறமுடியாது.*

*நீதிநூல் ஆசிரியரை ஞானாசிரியன் என்றும் பொய்க்குரு என்றும் இரண்டு வகையாகக் கூறுகின்றது. ஞானம் என்பதற்கு அறிவு, கல்வி என்பது பொருள். மாணாக்கனுக்கு அறிவையும் கல்வியையும் ஊட்டுபவன் ஆசிரியன். அவனை ஞான ஆசிரியன் என்கின்றது.*

*ஆசிரியர் என்பவர் மனத்திலுள்ள இருளை நீக்குவதற்கு மெய்யுணர்வு என்னும் கல்வி விளக்கை ஏற்றுபவர். எல்லா வளமும் தரவல்ல கேள்விச் செல்வத்தைத் தருபவர். கடவுளின் திருவுருவைக் காட்டுபவர், பாவ, புண்ணியங்களை உணர்த்துபவர், மனிதனைப் பேரின்பத்தில் ஆழ்த்துபவர். அத்தகைய செயலைச் செய்வதால் நெஞ்சே ஆசிரியரை ஒருபோதும் மறவாதே என்று நீதிநூல் உணர்த்துகின்றது.*

*மாணாக்கனின் மன இருளை நீக்கி அறிவைப்புகட்டி, அழியாத கேள்விச் செல்வத்தைத் தந்து, பாவ, புண்ணியங்களை உணர்த்தி இறைவனைக் காட்டுபவரே நல்லாசிரியர். அப்பேற்பட்ட நல்லாசிரியரை மாணாக்கன் ஒருபோதும் மறந்துவிடுதல் கூடாது.*

கற்பிக்கும் ஆசிரியருக்குக் கூலியைக் கொடுத்தல், தீய ஆசைகளை விடுத்தல், நல்லனவற்றைக் கற்றல், ஓதுதல், படித்தல், கேட்டல், உயிர்க்கொலை செய்யாதிருத்தல், புலால் உண்ணாதிருத்தல், நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்றுதல், ஆசிரியர் கற்றுக் கொடுத்த பாடத்தை மறவாதிருத்தல், ஆசிரியரை மறவாதிருத்தல், ஆசிரியர் துணையோடு கற்றல் ஆகியன மாணாக்கரின் பண்பும் ஒழுக்கமும் ஆகும்.

**கற்கும் முறை**

கற்றல் என்பது பள்ளி, கல்லூரிகளில் முக்கியப் பங்கு வகிக்கின்றது. கற்றல் இல்லாத கல்வியானது குறிக்கோள் அற்றதாக மாறிவிடுகின்றது. "ஒருவரின் நடத்தையில் ஏற்படும் மாற்றமே கற்றல்"[29] என்று கல்வி உளவியல் எனும் நூல் குறிப்பிடுகின்றது. உளவியல் ரீதியில் கற்றல் என்பது தூண்டலுக்கேற்ற துலங்கல் ஆகும். கற்றல் என்பது மாற்றத்தை ஏற்படுத்தக் கூடியதாக இருத்தல் வேண்டும்.

கற்றல் வரையறைகள் எனக் கல்வி உளவியல் நூல்கள் சில கருத்துக்களை எடுத்துரைக்கின்றன. அவை "கற்றல் என்பதற்கான நிலையான வரையறை கிடையாது. வரையறைகள் அனைத்தும் கற்றலின் பண்புகளை உள்ளடக்கியே உள்ளது. உளவியல் அறிஞர்கள், கல்வி அறிஞர்கள் அவர்களின் மனக்கருத்துக்களுக்கு ஏற்ப மாறுபடுகின்றது"[30] என வரையறை செய்கின்றது.

கற்றல் என்பதை அறிஞர்கள் பல்வேறு வகைகளில் வரையறை செய்கின்றனர்.

"கேட்ஸ் (Gates) என்பவர் அனுபவம், பயிற்சி ஆகியவற்றின் மூலம் எழும் நடத்தை மாற்றமே கற்றல் எனப்படும் என்கிறார்.

ஒரு தனிமனிதன் பொதுவாக வாழ்க்கையில் பெறக்கூடிய பழக்கவழக்கங்கள், அறிவு, மனப்பான்மை ஆகியவற்றைத் தரக்கூடிய ஒரு செயல்முறையே கற்றல் எனப்படும் என்கிறார் ஜி.டி. போயஸ் (G.D.Boaz).

ஒவ்வொரு சூழ்நிலைக்கு ஏற்றவாறு தங்களின் நடத்தைகளை மேம்படுத்துவதையே கற்றல் குறிக்கின்றது என்பார் கார்டனர் மர்பி (Gardner Murphy).”[31]

இவ்வாறாகக் கற்றல் பற்றிய பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. அத்தகைய கற்றலில் கற்கும் முறைபற்றி காலந்தோறும் இலக்கியங்கள் எவ்வாறு எடுத்துரைத்துள்ளன என்பது பற்றிக் கண்டறிவது தேவையாகின்றது.

**“உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர்”**

***(குறள்.395)***

செல்வம் நிறைந்தவர் முன் வறியவர் சென்று பொருள் கேட்கும் போது எவ்வாறு பணிந்து கேட்டுப் பெறுகின்றாரோ அதேபோன்று கல்வி கற்பவர் ஆசிரியர் முன் சென்று தாழ்ந்து பணிந்து கற்பதற்கு முன்வராதவர் கடைப்பட்டவரேயாவர் என்கின்றது.

இவற்றினின்று கல்வி கற்றுச் சிறந்து விளங்க வேண்டும் என்ற எண்ணம் உடையவர் ஆசிரியருக்குப் பணிவிடைகள் செய்தே கற்றல் வேண்டும். அவ்வாறு ஆசிரியர் முன் பணிந்து கற்பதற்கு முன்வராதவர் தலைசிறந்து விளங்க முடியாது என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

கல்வி கற்பதற்கான அடிப்படைத்தகுதி ஆசிரியரிடம் பணிவாக நடந்து கொள்ளுதலாகும். இதனைப் புறநானூறும்,

**“உற்றுளி யுதவியும் முறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே”[32]**

***(புறம்.183)***

என்கின்றது. இது மாணாக்கனின் கடமையாகும். இதனை ஏற்காத மாணவனின் மனமானது காலமெல்லாம் கண்ணியமும் இன்பமும் இன்றி பிறந்த நாட்டிலேயே துன்பப்படுவர்.

ஆசிரியரைத் தொழுது வணங்கி அவருக்குக் கீழ்ப்பணிந்து நடந்தால் நன்மதிப்புப் பெற்றுத் திகழ்வது உறுதி. அதேபோன்று அதற்கு அஞ்சி, நாணும் மாணவன் துன்பநிலையை அடைவர் என்பது அறிவுறுத்தப்படுகின்றது.

**"கற்றிலன் ஆயினும் கேட்க அஃதுஒருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை"**

***(குறள்.414)***

கற்றிலன் ஆயினும் கேட்க, கற்றலின் முதற்படி கேட்டல். செவிக்கு உணவு இல்லாதபோது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் என்பது இதனை எடுத்துரைக்கின்றது. ஒருவன் பொருள் நூல்களையும், உறுதிநூல்களையும் கற்றிருத்தல் வேண்டும். அவ்வாறு கற்றிராவிடினும் அத்தகைய நூல்களைக் கற்றுத் தேர்ந்தவரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும். அவ்வாறு தெரிந்து கொண்டால் அஃது அவன் தளர்ச்சி நேர்ந்தவிடத்து அது அவனுக்கு ஊன்றுகோலாக அமையும். நன்னூலும்,

**"நூல்பயில் இயல்பே நுவலின் வழக்கறிதல்**
**பாடம் போற்றல் கேட்டல் நினைத்தல்"[34]**

***(நன்.எழுத்து.41)***

என்கிறது. கேட்டல் என்பது மூலப்பாடங்களை மறவாமல் பாதுகாக்கும், கேட்டலின் விளைவால் சிந்தனை விரிவடையும், கேட்டல் பலமுறை சிந்திக்கத் தூண்டும் என்று கூறுகின்றது. மேலும்,

**"ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்**
**பெருக நூலில் பிழைபாடு இலனே"[34]**

***(நன்.எழுத்து.42)***

இருமுறை கேட்டால் அந்நூலினைப் பிழையில்லாமல் கற்றுத் தெரிந்து கொள்ள முடியும். கற்றலின் கேட்டல் நன்று என்பது அறிவுறுத்தப்படுகின்றது.

**“எண்ணெழுத்து இகழேல்”**

**(ஆத்திச்சூடி.7)**

கணக்கையும் இலக்கணத்தையும் இகழாமல் கற்றுக் கொள்ள வேண்டும். கணக்கும் இலக்கணமும் அன்றையக் கால அடிப்படைக்கல்வி. பழையமுறைக் கல்வியைக் கற்பித்தவர் கணக்காயர். “கணக்காயன் எழுத்தும் சிற்றிலக்கியமும் உரிச்சொல்லும் (நிகண்டு) கணக்கும் கற்பிப்போன்”[35] மாணவர்கள் தாங்கள் கற்கும் பாடத்தின் மீது வெறுப்புக் கொள்ளக்கூடாது. இதனையே கொன்றைவேந்தன்.

**“எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்”[36]**

**(கொன்றை.7)**

என்று எடுத்துரைக்கின்றது. கணக்கும் இலக்கணமும், கற்கும் மாணவனுக்குக் கண் போன்றதாகும்.

**“நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை”**

**(கொன்றை.50)**

நிற்கக் கற்றல் என்பது நிலைபெறக் கற்றலாகும். நிலைபெறக் கற்றல் என்பது சொல்லும் சொல் தவறாமை நிற்றல் ஆகும்.

மாணாக்கர்கள் பொய்யுரைத்தல் கூடாது. அவ்வாறு பொய்யுரைப்பாராயின் அவர்கள் கற்ற கல்வி அவர்களிடம் நிலையாக நிற்காது.

கற்றலுக்கான முதற்படி ஆசிரியருக்குக் கீழ்படிதல், பணிந்து கற்கத் தவறுகின்றவரிடத்திலே கல்வி சென்றுசேராது, கேட்டலின் மூலமே ஒருவன் நிறைவான கல்வியைப் பெறமுடியும். மாணவர்கள் பாடத்தை வெறுப்பின்றிக் கற்றல் வேண்டும். கற்கும் மாணவர்கள் பொய்யுரைத்தல் கூடாது.

**ஆசிரியரை வழிபடும் முறை**

ஆசிரிய வழிபாடு என்பது பழையமுறைக்கல்வியில் இன்றியமையாத ஒன்றாக இருந்துள்ளது. ஆசிரியரை வழிபட்டால் மட்டுமே கல்வி கற்க இயலும். இல்லையேல் கற்க முடியாது. பழையமுறைக்கல்வியில் ஆசிரியரின் இல்லமே பள்ளியாகச் செயல்பட்டது. கல்வி கற்று முடிக்கும் வரை மாணாக்கர்கள் ஆசிரியரின் இல்லத்திலிருந்தே கல்வி கற்று வந்தனர்.

> **''அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முள்**
> **நிகரில் குரவர் இவரி வரைத்**
> **தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே**
> **யாவருங் கண்ட நெறி''**
>
> **(ஆசாரக்.16)**

அரசன், ஆசிரியர், தாய், தந்தை, தமக்கு மூத்தவர் ஆகிய ஐவரையும் தெய்வத்தைப் போன்று வணங்குதல் வேண்டும். இது யாவரும் கண்ட நெறியாகும். இது அனைவருக்கும் பொருந்துமாம். இவர்களை ஐம்பெருங் குரவர்கள் என்பர். இவ்ஐவரையும் கடவுளைத் தொழுது வணங்குதல் போல வணங்குதல் வேண்டும்.

ஆசிரியர் கடவுளைப் போன்று மதிக்கத்தக்கவர். கல்வி வரலாறு எனும் நூலில் ஆசிரியரை வழிபடும் முறை பற்றி பழனிவேலு குறிப்பிடுவதாவது. ''தொடக்கத்திலும் இறுதியிலும் குருவின் முன் விழுந்து தனது இருகரங்களையும் நீட்டி மாற்றிவைத்து வலக்கரத்தால் குருவின் வலது பாதமும், இடக்கரத்தால் அவரது இடது பாதமும் தீண்டுமாறு வணங்கி எழவேண்டும்''[37] என்று குறிப்பிட்டுள்ளார். ஆசிரியரைத் தெய்வத்திற்கு இணையாகப் போற்றப்பட்டமையை அறியமுடிகின்றது. காலில் விழுந்து வணங்கும் முறையை,

***“கால்வாய்த் தொழுவு சமய மெழுந்திருப்பு***
***ஆசார மென்பர் குரவர்க் கிவையிவை***
***சாரத்தாற் சொல்லிய மூன்று”***

***(ஆசாரக்.62)***

*என்ற பாடலும் எடுத்துரைத்துள்ளது. ஆசிரியரைக் குரவர் என்றலும் பெரியோர் என்றலும் முன்னமே உரைக்கப்பட்டுள்ளது. அவற்றின்வழி காலில் விழுந்து தொழுதலும் அவர் நன்று என்று கூறும் சமயத்தின் கண் நிற்றலும் என இவை ஆசிரியருக்குச் செய்யும் ஒழுக்கமுறையாகும்.*

*ஆசிரியரின் காலில் விழுந்து வணங்குதலும், அவர் வழி நின்று நடத்தலும் அறிவுறுத்தப்பட்டுள்ளது.*

***“கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்”***

***(முதுமொழி.த.ப.3)***

*அறிவு நூல்களைக் கற்க விரும்புகின்றவன் ஆசிரியருக்குச் செய்ய வேண்டிய வழிபாடுகளில் குறையிருத்தல் கூடாது.*

*கற்க விரும்புவோன் தன்னைக் கற்பிக்கும் ஆசிரியருக்குச் செய்யும் வழிபாட்டில் குறைபாடு இன்றி இருத்தல் வேண்டும். ஆசிரியரை வழிபடும் மாணாக்கனது கல்வியே சிறக்கும்.*

***“எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்”***

***(வெற்றி.1)***

*கல்வி கற்பித்த ஆசிரியர் மாணவர்களுக்கு இறைவன் ஆவார். மாணவர்கள் கண்ணால் காணும் தெய்வம் ஆசிரியர், ஆதலால் மாணாக்கர் ஆசிரியரை வணங்கி வழிபடுதல் வேண்டும்.*

***“மன்னனுடன் வயிறு மாண்புடைத் தாய்தந்தை***
***முன்னி முடிக்கு முனியாசான் – பன்னியங்***
***காயகுரவர் இவரென்ப வையத்துத்***
***தூய குலந்சாதி யார்க்கு”***

***(அறநெறி.61)***

நாடாளும் மன்னன், தாய் தந்தையர், முனிவன், குரு, குருவின் மனைவி ஆகியோர் நல்லோர்களால் வணங்கிப் போற்றத்தக்கவர்கள்.

நல்லோர்களால் வணங்கிப் போற்றத்தக்கவர்கள் என்று கூறப்பட்டுள்ளது. நல்லோர்கள் என்பவர் நல்லொழுக்கமும் நற்பண்புகளும் பெற்றவர்கள் ஆவர். இவர்கள் ஆசிரியரை வணங்குதல் வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இந்நிலையில் மாணவர்கள் ஆசிரியருடன் நேரடித் தொடர்பில் உள்ளவர்கள் அவர்களும் ஆசிரியரை மதித்துப் போற்றுதல் வேண்டும்.

மாணாக்கர்கள் மட்டுமின்றி அனைவராலும் மதித்துப் போற்றத் தக்கவர்கள் ஆசிரியர்களாவர். மாணாக்கர்களும் சமுதாயமும் மதிக்கத்தக்கவர்கள்.

ஆசிரியர் என்பவர் இறைவனுக்கு நிகரானவர் என்பதை ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றிய ஆசாரக்கோவையும், 16 ஆம் நூற்றாண்டில் தோன்றிய வெற்றி வேற்கையும் எடுத்துரைக்கின்றன. இவற்றினின்று காலம்தோறும் ஆசிரியர் என்பவர் இறைவனுக்கு நிகராக மதிக்கப்படுதல் வேண்டும் என்பது புலப்படுகின்றது. ஆசிரியரைக் காலில் விழுந்து வணங்கித் தொழுது கற்க வேண்டும். ஆசிரியரை வழிபடுவதற்குத் தயங்குதல் கூடாது.

**வகுப்பறையில் மாணாக்கர்களின் செயல்பாடுகள்**

பழங்காலத்தில் திண்ணைகள் பள்ளிகளின் வகுப்பறைகளாக இருந்து தற்பொழுது மாற்றம் பெற்றுள்ளன. திண்ணைப் பள்ளிக்கூடங்களில் மாணாக்கர்களுக்கு ஒழுக்கங்களை முதலில் ஆசிரியர்கள் கற்றுத்தந்தனர். மாணாக்கர்களைத் தேர்ந்தெடுக்கும் பொழுதே ஒழுக்கமானவர்களை மட்டுமே தேர்ந்தெடுத்துள்ளனர். “மாணவரைப் பற்றி முழுமையும் அறிந்த பின்னர் ஆசிரியர் அவரைத் தமது மாணாக்கராகக் கொள்வர்”[38] என கே.பழனிவேலு

குறிப்பிட்டுள்ளார். மாணவர், ஆசிரியர் உறவுமுறைகளும் நடத்தைகளும் குருகுலத்தில் தெளிவாக வரையறுக்கப்பெற்றிருந்தன. ‘‘மாணவர்களுக்குச் சிலநேரம் ஆசிரியர் தண்டனை அளிப்பதுண்டு இத்தண்டனைகள் கொடுமையாக இல்லாமல் பார்த்துக் கொள்ளப்பட்டன’’[39] என கல்வி வரலாறு எனும் நூல் குறிப்பிடுகின்றது. இத்தகைய சூழ்நிலையில் இம்முறையில் காலம்தோறும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இதனைப் பல்வேறு இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன.

**‘‘நின்றக்கால் நிற்க அடக்கத்தா லென்றும்**
**இருந்தக்கால் ஏவாமை ஏகார் பெருந்தக்கார்**
**சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்**
**வினாவற்க சொல்லொழிந்தக் கால்’’**
**(ஆசாரக்.74)**

நன் மாணாக்கர் என்று சொல்லப்படுபவர்கள் ஆசிரியர் முன் அடங்கியிருத்தல் வேண்டும். வகுப்பறையில் ஆசிரியர் பாடஞ்சொல்லுதலைக் கவனமாகக் கேட்டுக்கொண்டு மாணாக்கர்களும் ஏதும் செய்யாதிருத்தல் வேண்டும். ஆசிரியர் பாடத்தை நிறுத்தியவுடன் மாணாக்கர்கள் பேசுதல் கூடாது. ஆசிரியர் எழுந்துபோ என்று சொல்வதற்கு முன்பாக எழுந்து செல்லக்கூடாது. ஆசிரியர் பாடம் கூறும்போது காதுகொடுத்துக் கவனமாகக் கேட்க வேண்டும். ஆசிரியர் யாதொன்றும் சொல்லாவிடில் தாமும் அவரிடத்தில் ஏதும் கேட்காதிருத்தல் வேண்டும்.

மாணாக்கர் வகுப்பறையில் பாடம் கேட்பதில் கவனம் செலுத்த வேண்டும், ஆசிரியரின் சொல்லை மீறுதல் கூடாது, மாணாக்கர்கள் பேசுதல் கூடாது போன்றவை வகுப்பறையில் மாணாக்கர்கள் கடைபிடிக்க வேண்டுவனவாக ஆசாரக்கோவை எடுத்துரைக்கின்றது.

ஆசிரியர் 'இரு' என்று சொன்னபோது இருந்து 'போ' என்று சொன்னபோது போதலும் மாணாக்கனின் வகுப்பறை ஒழுக்கமாகும். இதனையே நன்னூல்

***"குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்து***
***இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்***
***..............................................................***
***போவெனப் போதல் என்மனார் புலவர்"[40]***

***(நன்.எழுத்து.40)***

என்று கூறுகின்றது.

***"உடுக்கை இகவார் செவிசொறுண்டார் கைம்மேல்***
***எடுத்துரையார் பெண்டிர்மேல் நோக்கார் செவிச்சொல்லுங்***
***கொள்ளார் பெரியோரகத்து"***

***(ஆசாரக்.75)***

ஆசாரக்கோவை ஆடைகளைக் களைதல், காதுகளைச் சொறிதல், கைகளை உயர்த்திப் பேசுதல், பெண்களிடம் பேசுதல் ஆகியன வகுப்பறையில் ஆசிரியரின் முன்பு செய்யத்தகாத செயல்களாக எடுத்துரைத்துள்ளது. ஆசிரியர் கூறும் பேச்சைத் தவிர பிறரது பேச்சைக் கேட்கக்கூடாது எனவும் அறிவுறுத்துகின்றது.

***"தெறுவந்துந் தங்குரவர் பேருரையா ரில்லத்து***
***உறுமி நெடிதும் இராஅர் – பெரியாரை***
***என்றும் முறைகொண்டு கூறார் புலையரையும்***
***நன்கறிவார் கூறார் முறை"***

***(ஆசாரக்.80)***

என்ற பாடலின் மூலம் மாணாக்கர்கள் ஆசிரியரின் பெயரைக் கூறுதல் கூடாது என்பது அறிவுறுத்தப் பெற்றுள்ளது. உயிர்க்கு உறுதிபயக்கும் நன்மையை அறிந்தவர் தாம் வெகுண்டாராயினும் தம் குருவின் பெயரைக் கூறமாட்டார். தம் ஆசிரியரை ஒரு போதும் இழிவாகப் பேசமாட்டார்.

***“மன்றத்து நின்றுற்றார் மாசு திமிர்ந்தியங்கார்***
***என்றுங் கடுஞ்சொ லுரையார் இருவராய்***
***நின்றுழியுஞ் சொல்லார் விடல்”***

***(ஆசாரம்.93)***

என்ற பாடல் மூலம் சான்றோர் குழுமிய அவையில் இருந்து கொண்டு அங்கச் சேட்டைகள் செய்தல் கூடாது. இருவராய் இருந்து பேசும் இடத்திற்குச் செல்லமாட்டார்கள் என்பது வலியுறுத்தப்பெறுகிறது.

***“கைசுட்டிக் கட்டுரையார் கான்மே லெழுத்திடார்***
***மெய்சுட்டி இல்லாரை உள்ளாரோ டொப்புரையார்***
***கையிற்குரவர் கொடுப்ப இருந்தேலார்***
***ஐயமில் காட்சி யவர்”***

***(ஆசாரம்.94)***

ஆசிரியர் முன் கைநீட்டிப் பேசுதல், கால்விரலால் தரையில் எழுதுதல், அறிவில்லாரை அறிவுடையார்க்கு இணையாகச் சொல்லுதல், ஆசிரியர் ஒன்றைத் தரும்போது அதனைப் பெரும் மாணாக்கர் அமர்ந்து கொண்டு பேசுதல் இவையாவும் ஆசிரியர் முன்பு செய்யத்தகாத செயல்களாகும்.

மேற்கூறப்பட்டவை அனைத்தும் அக்காலகட்டத்தில் கடைபிடிக்கத் தகாதவைகளாகக் கருதப்பட்டன. சங்கமருவிய காலத்திலோ அல்லது சங்க இலக்கியத்திற்கு அடுத்த களப்பிரர்கள் காலத்திலோ மாணவர்கள் செய்யத்தகாத செயல்களில் ஈடுபட்டிருக்கக்கூடும். அவற்றைக்களையும் முகமாக இத்தகைய கருத்துக்கள் எடுத்தாளப்பட்டுள்ளன.

கல்வி வரலாறு எனும் நூல் மாணவர்கள் பின்பற்றக் கூடாத செயல்களாகச் சிலவற்றை எடுத்துக் கூறுகின்றது. அவை “வேதம் பயிலும்போது குருவின் முன் வலது கையை மேலாடைக்கு வெளியே வைத்துக் கொண்டு

மற்ற உறுப்புகளை ஆடையால் மறைத்து அடக்கமாய் அமரவேண்டும். தேன், புலால், சந்தனம், மலர், இனிப்பு, பெண், தயிர், பால், நெய், மோர், உயிர்க்கொலை, எண்ணெய் முழுக்கு, கண்ணுக்கு மையெழுதல், செருப்பு, குடை, காமம், குரோதம், கூத்து, பாட்டு, கவறாடல், வம்பளத்தல், பழித்தல், பொய்கூறல், பெண்களை விருப்பமுடன் நோக்கல், பிறருக்கு இரண்டகம் எண்ணுதல் ஆகியவற்றை நீக்க வேண்டும் என மாணவர்க்கு அறிவுறுத்தப் பெற்றன"[41] என்று எடுத்துக்காட்டுகின்றது. இவைகளும் அன்றைய காலகட்டங்களில் மாணாக்கர் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்களாகும்.

ஆசிரியரின் சொற்கேளாது நடத்தல், வகுப்பறைகளில் மாணவர்கள் காதுகளைச் சொறிதல், ஆசிரியரின் முன்பு கைகளை உயர்த்திப் பேசுதல், காலால் எழுதுதல், ஆசிரியர் பாடம் கூறாதபோது மாணாக்கர்கள் பேசுதல் ஆகிய செயல்களைச் செய்தல் கூடாது. மாணவர்கள் கோபமுற்ற போதும் ஆசிரியரின் பெயரைக் கூறுதல் கூடாது, பெண்களோடு பேசுதல் கூடாது என்று சொல்லப்பட்டவை எல்லாம் மாணாக்கர்கள் வகுப்பறைகளில் கடைபிடிக்க வேண்டியவைகளாகும்.

**நன் மாணாக்கன்**

ஆசிரியரின் இயல்பு வரையறுக்கப்பட்டது போன்றே மாணாக்கரின் இயல்புகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. யார் யாருக்குக் கற்பிக்கலாம், யார் யாருக்குக் கற்பிக்கக்கூடாது என்பதை இலக்கியங்களும், இலக்கணங்களும் எடுத்தியம்புகின்றன. நல்லறிவு இயல்பாக இல்லாதவன், கீழ்மகன், குடியன், காமம் கொண்டவன் முதலியவர்களுக்குக் கற்பிக்கக் கூடாது எனக் கூறப்பட்டுள்ளது. "ஐம்புலன்கயையும் அடக்கி ஆசிரியரிடம் கற்பவரே நன் மாணாக்கராகக் கருதப்பெற்றனர்"[42] என பழனிவேலு குறிப்பிட்டுள்ளார்.

***“தடுமாற்ற மஞ்சுவான் தன்னை யுவர்ப்பான்***
***வடுமாற்ற மஞ்சித்தற் காப்பான் – படுமாற்றால்***
***ஒப்பரவு செய்தான் குறுதிச்சொல் சேர்பவன்***
***தக்கான் தரும உரைக்கு”***

***(அறநெறி.6)***

மாணவர்களுக்குச் சோம்பேறித்தனம், புகழுக்கு ஆசைப்படுதல் ஆகியன இருத்தல் கூடாது. உதவி செய்யும் மனப்பான்மை உடையவனும், ஆசிரியர் சொல்கேட்டு நடப்பவனும் மாணாக்கன். இத்தகைய மாணவனுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும், அவனே மாணாக்கன் என்பதை இப்பாடல் எடுத்துக் காட்டுகின்றது.

**மாணாக்கர் நிலை**

கற்றல் என்பது இன்றியமையாத ஒன்றாக மாற்றம் பெற்ற நிலையில் மாணவர்கள் கற்க முற்படுகின்றனர். அவ்வாறு கற்கும்போது ‘குருதட்சணை’ இன்றியமையாததாகிவிடுகின்றது. இதனை,

***“கற்கை நன்றே கற்கை நன்றே***
***பிச்சை புகினும் கற்கை நன்றே”***

***(வெற்றி.35)***

என்ற அதிவீரராம பாண்டியரின் பாடல் அறிவுறுத்துகின்றது. பிச்சை எடுத்தேனும் கல்வி கற்பது சிறப்பு. இவற்றினின்று கல்வி கற்பதும் கற்ற கல்விக்கான கூலியைக் கொடுத்தலும் இன்றியமையாததாக அமைந்து விடுகின்றன.

**மாணாக்கர்களுக்கான தண்டனை**

கற்பித்தலுக்கான முதல் படி அன்பு செய்தல் என்று இருந்த போதிலும் மாணாக்கர்களுக்குத் தண்டனைகளும் வழங்கப்பட்டுள்ளன. இதனை நாலடியாரின்

***“பாலாற் கழீஇப் பலநாள் உனக்கினும்***
***வாலிதாம் பக்ம் இருந்தைக கிருநதன்று***
***கோலாற் கடாஅய்க் குறினும் புகலொல்லா***
***நோலா உடம்பிற் கறிவு”***

***(நாலடி.258)***

*என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.*

*பாலினாலே கழுவி நெடுநாள் உலர்த்தி வைத்தாலும் கரியானது வெண்மையான நிறத்தைப் பெறமுடியாது. அதுபோன்றே கோல் கொண்டு அடித்துச் சொன்னாலும் புண்ணியஞ் செய்யாதவனுக்குக் கல்வியானது புகாது என்கிறது. இவற்றினின்று கல்வியைப் புகட்டும் வண்ணம் மாணாக்கர்களைத் தண்டனைக்கு உள்ளாக்கியமை புலப்படுகின்றது.*

**மாணாக்கரல்லாதோர்**

*மாணாக்கராக இருந்தும் மாணாக்கருக்குரிய பண்புகளைப் பெறாதவர்கள் மாணாக்கராகாதவர் எனப்படுவர். இவர்கள் பல நிலைகளில் காணப்படுகின்றனர். குருகுலக் கல்விமுறையில் ஆசிரியர், மாணவர்க்கான கட்டுப்பாடுகள் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன. இவை காலப்போக்கில் மாற்றம் பெற்றுக் காணப்படுகின்றன. அவை அவ்வக் காலங்களில் தோன்றிய இலக்கியங்களின் வாயிலாக வெளிப்படுகின்றன.*

***“கல்லாதான் தான்காணும் நுட்பமும் காதிரண்டும்***
***இல்லாதாள் ஏக்கழுத்தஞ் செய்தலும் – இல்லாதான்***
***ஒல்லாப் பொருளில்லார்க்கு ஈத்தளியான் என்றலும்***
***நல்லார்கள் கேட்பின் நகை”***

***(சிறு.5)***

*ஆசிரியரிடத்துக் கற்க வேண்டிய முறைப்படி கல்லாத ஒருவன் தான் ஆராய்ந்து கண்ட ஒன்றைத் தானே வியந்துகூறி பெருமைப்பட்டுக் கொள்வான்.*

இது இரண்டு காதுகளும் இல்லாத ஒருத்தி தன்னை மிக்க அழகுடையவள் என்று கூறுவதற்குச் சமமாகும். அழகு என்பது முழுமையான உடலமைப்பைப் பெறுவது. அதுபோன்றே மாணவன் என்பவன் முழுமையான கல்வியறிவைப் பெறுதல் வேண்டும். அவ்வாறு முழுமையான கல்வியறிவைப் பெறாதவன் மாணாக்கனாகமாட்டான்.

கற்கவேண்டிய முறைப்படிக் கற்றல் வேண்டும். அவ்வாறு கற்றால்தான் அறிவுடையவர்கள் அவனை ஏற்றுக் கொள்வர். இல்லையாயின் அறிவுடையவர்களால் இகழப்படுவான். இதனைத் திருக்குறள்,

**''கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்**
**கொள்ளார் அறிவுஉடை யார்''**[43]

**(குறள்.404)**

என்று கூறுகின்றது. கற்கும் முறைப்படி கல்லாதவன் மாணாக்கனாகமாட்டான். இதனைப் போன்றே நாலடியார்

**''கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்**
**பெற்றதாம் பேதையோர் சூத்திரம் – மற்றதனை**
**நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்**
**புல்லறிவு காட்டி விடும்''**

**(நாலடி.314)**

மாணாக்கன் என்பவன் தானாக ஆசிரியரிடம் கற்றுத் தெளிதல் வேண்டும். அவ்வாரல்லாமல் பிறருக்குக் கற்றுக் கொடுத்த ஒன்றை நல்ல ஆற்றல் மிகுந்த ஆசிரியரிடம் சென்று தன்னறிவை வெளிக்காட்ட எண்ணுவானாயின் அது அவனது சிற்றறிவைக் காட்டும். இப்பாடல் கணக்காயன், வித்துவான் என்ற இருவகை ஆசிரியர்களை எடுத்தாண்டுள்ளது. கணக்காயர் என்பவர் கணக்கும் இலக்கணமும் கற்பிப்பவர். வித்துவான் என்பவர் நூல்களைக் கற்றுக் கொடுப்பவர். கணக்காயரைவிட வித்துவான் உயர்ந்தவர் என்பதை 'நல்லாரிடைப்புக்கு' என்ற சொல் உணர்த்துகின்றது. ''திண்ணைப் பள்ளிகளில்

கல்வி கற்பித்த ஆசிரியருக்குக் கணக்காயர் என்பது பெயர்''[44] என 19 ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் எனும் நூல் குறிப்பிடுகின்றது. ''ஆசிரியரியர்கள் அக்காலத்தில் 'உபாத்தியாயர்' கணக்காயர் என்னும் பெயரால் வழங்கப் பட்டனர்''[45] என வேங்கடசாமி நாட்டார் குறிப்பிடுகின்றார். ''கணக்காயரிடத்தில் கற்கும் கல்வி பாடசாலைக்கல்வி புலவர்களிடத்தில் கற்கும் கல்வி உயர்தரக்கல்வி''[46] என மயிலை சீனி வேங்கடசாமி குறிப்பிடுகின்றார். ''கணக்காயன் எழுத்தும் சிற்றிலக்கியமும் உரிச் சொல்லும் (நிகண்டும்) கணக்கும் கற்பிப்போன்''[47] எனத் தேவநேயன் குறிப்பிடுகின்றார். ''ஆசிரியன் பிற்காலத்தில் ஐந்தாக விரிக்கப்பட்ட மூவிலக்கணமும் அவற்றிற்கெடுத்துக்காட்டான பேரிலக்கியமும் கற்பிப்போன். குரவன் சமய நூலும் பட்டாங்கு (தத்துவ) நூலும் கற்பிப்போன். இளமாணவ மாணவியருக்குக் கணக்கை மிகுதியாகக் கற்பிப்பவன் கணக்காயன்''[48] என தேவநேயப்பாவணர் குறிப்பிடுகின்றார். இவ்வாறு கற்பிக்கும் பாடத்திற்கு ஏற்றார் போல ஆசிரியர்கள் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

**''செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்**
**வழும்பறுக்க கில்லாவாந் தேரை – வழும்பில்சீர்**
**நூல்கற்றக் கண்ணும் நுணக்கம்மொன நில்லாதார்**
**தேர்கிற்கும் பெற்றி அரிது''**

***(நாலடி.352)***

தவளையானது தன் உடம்பிலுள்ள வழுவழுப்புத் தன்மையைக் குளத்துநீரில் போக்கிக் கொள்ளமுடியும். ஆனால், அது ஒருபோதும் அவ்வாறு செய்வதில்லை. அதுபோல நல்லறிவைப் புகட்டுகின்ற ஆசிரியரையும் நூல்களையும் தன்னகத்தே பெற்றாலும் நுண்ணறிவில்லாதவர்களால் நூற்பொருளைக் கற்றுத் தெரிந்துகொள்ள முடியாது என்பதை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

நல்லாசிரியர்களைப் பெற்ற மாணவர்கள் அவர்களின் துணையோடு நல்லறிவைப் பெறவேண்டும். அதுதான் நல்லாசிரியர்களைப் பெற்றதன் பெரும்பயன். அதன் பயனை அனுபவிக்க இயலாதவர்கள் மாணாக்கரல்லர். "அறிவு வளர்ச்சியில் உண்மையான விருப்பமும், விடா முயற்சியும், தூய்மையுமே மாணவர்களுக்குரிய இலக்கணங்களில் முக்கியமானவை"[49] என விவேகானந்தர் குறிப்பிடுகின்றார். அத்தகைய இலக்கணங்களைப் பெறாத மாணவர்கள் மாணாக்கராகமாட்டார்கள்.

**"ஆபத்துக் குதவாப்பிள்ளை யரும்பசிக் குதவாவன்னஞ்**
**தாபத்தைத் தீராத்தண்ணீர் தரித்திர மறியாப்பெண்டிர்**
**கோபத்தை யடக்கா வேந்தன் குருமொழிகொள் ளாச்சீடன்**
**பாபத்தை தீராத்தீர்த்தம் பயனிலை யேழுந்தானே"**

**(விவேக.1)**

என்கிறது விவேகசிந்தாமணி. மாணவன் என்பவன் ஆசிரியருக்குக் கட்டுப்பட்டு நடத்தல் வேண்டும். அவ்வாறு நடக்கத் தவறுகின்றவன் மாணாக்கனாக மாட்டான். ஆசிரியரின் சொற்களைக் கேட்காத மாணவன் கல்வியால் பெறக்கூடிய பயனை அடையமுடியாது என்பதை இப்பாடல் எடுத்துக் காட்டுகின்றது. கற்கும் மாணவன் அதன் பயனை அடைய வேண்டுமெனில் ஆசிரியரின் சொற்படி நடத்தல் வேண்டும். அவ்வாறு நடக்காதவர்கள் மாணவர்களாக மாட்டார்கள்.

**"தன்சொல்லே மேற்படுப்பாள் தண்டி தடிபிணக்கன்**
**புன்சொல்லே போதரவு பார்த்திருப்பான் – இன்சொல்லை**
**ஏன்றிருந்தும் கேளாத ஏழை எனஇவர்கட்**
**கான்றவர்கள் கூறா ரறம்"**

**(அறநெறி.7)**

தான் கூறும் கருத்தையே சரியென்று கூறுகின்றவனும், மானம் என்னும் குணத்தைத் தன்னகத்தே கொண்டவனும், முரண்பாடான செயல்பாடுகளை உடையவனும், தவறான சொற்களை யாதேனும்

பேசுவார்களா? என்று எதிர்பார்த்துக் காத்திருப்பவனும், நன்மை பயக்கும் சொற்களைக் கேட்டும் காலமும் இடமும் அமையப்பெற்றும் அதனைப் பயன்படுத்தாதவனும் ஆகிய இத்தன்மைகளை உடையவர்களுக்குக் கற்பிக்க முடியாது. இவர்கள் கற்பதற்குத் தகுதியற்றவர்கள்.

ஆணவம் என்பது மாணவனுக்கு ஒருபோதும் இருத்தல் கூடாது. மானம் என்ற குணத்தையுடையவனால் ஆசிரியருக்குப் பணிவிடை செய்யமுடியாது. மேலும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கமுடியாது. அவ்வாறு ஆசிரியருக்குக் கீழ்ப்படியாத மாணவனை ஆசிரியர்கள் விரும்பமாட்டார்கள். நல்லனவற்றை விரும்பாதவனையும் கெட்டதை விரும்புபவனையும், கற்கும் வாய்ப்பு இருந்தும் அவற்றைப் பயன்படுத்தாதவனும் மாணாக்கனாகக் கருதமுடியாது. மாணாக்கனுக்குரிய பண்பில்லாதவர்கள் மாணாக்கனாகமாட்டார்கள்.

முறையாகக் கற்றவன் மாணாக்கன். முறையாகக் கல்லாதவன் மாணாக்கனாக மாட்டான். கல்லாதவன் கற்றறிந்தோர் முன் சென்று தானும் அறிவுடையவன் என்று கூறுவான் எனில் அவன் அறிவுடையவர்களால் இகழப்படுவான். மாணவன் என்பான், அம்மாணவப் பருவத்திலேயே தன்னுடைய குற்றங்களை நீக்கிக் கொள்ளுதல் வேண்டும், அவ்வாறு செய்யாதவன் மாணாக்கனாகமாட்டான். ஆசிரியரின் சொற்கேளாதவனும் ஆசிரியருக்குக் கீழ்படியாதவனும் மாணாக்கனாகமாட்டான். நல்லனவற்றை விடுத்துக் கெட்டதை விரும்புபவன் மாணாக்கனாகத் தகுதியற்றவனாவான்.

சங்க இலக்கியத்தினின்றும் நீதி இலக்கியங்களிலேயே ஆசிரியர் மாணவர் பற்றிய குறிப்புகள் அதிக அளவில் காணப்படுகின்றன. இந்நூல்கள் பெரும்பாலும் அறிவுறுத்தல் வேண்டும், பின்பற்றப்படல் வேண்டும், தீயனவற்றைக் கைவிடல் வேண்டும், நல்லனவற்றைச் செய்தல் வேண்டும் என்று அறக்கருத்துக்களைக் கட்டளை நிலையில் எடுத்துக் கூறுகின்றன.

ஆசிரியருக்குரிய மரியாதையையும் மாணாக்கர் பெறவேண்டிய பண்புகளையும் பெரும்பாலும் எடுத்துரைத்துள்ளன. இந்நூலில் ஆசிரியர், மாணவர் ஆகிய இருவரின் நிறைகுறைகள் எடுத்தாளப்பட்டுள்ளன. மாணாக்கர் பற்றிய பதிவுகளைவிட ஆசிரியர் பற்றிய பதிவுகள் அதிக அளவில் காணப்படுகின்றன. அவற்றில் சங்க இலக்கியத்தின் வழி ஆசிரியர்கள் தங்களுக்குரிய மதிப்பைப் பெற்று வறுமையில் வாடியுள்ளனர் என்பதைக் கலித்தொகையின் “கற்பித்தான் நெஞ்சமுங்கப் பகர்ந்துண்ணான்” என்ற அடியின் மூலம் அறியமுடிகின்றது.

கல்வி கற்கப் பொருள் இன்றியமையாதது என்ற கருத்து காலம்தோறும் தொன்றுதொட்டுக் காணப்பட்டுவருகின்றது. இதனை

**“உற்றுளி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே”**

என்ற புறநானூற்று அடியின் மூலமும், வெற்றி வேற்கையின் ‘பிச்சை புகினும் கற்கை நன்றே’ என்ற அடியின் மூலமும் அறியமுடிகின்றது. ஒழுக்கம் என்பது ஆசிரியர் மாணாக்கர் இருவர்க்கும் பொதுவாக வைக்கப்பட்டமையைச் சங்க இலக்கியம், சங்கமருவிய இலக்கியம், பிற்கால நீதிநூல்கள் என அனைத்து இலக்கியங்களும் எடுத்தாண்டுள்ளன.

கற்பிக்கும் ஆசிரியர்க்கு அன்பு இன்றியமையாத ஒன்றாக இருந்துள்ளது. மாணவன் பணிந்து நடத்தலின் மூலமே கல்வியைப் பெறமுடியும் என்பது எடுத்தாளப்பட்டுள்ளது. பெண்களுக்குக் கல்வி மறுக்கப்படவில்லை என்பதை நீதி நூல்களின் வாயிலாக அறியமுடிகின்றது. ஆசிரியர் என்பவர் அனைத்தும் கற்றவராக இருத்தல் வேண்டும். மாணாக்கன் என்பான் அவருக்குக் கீழ்ப்படிந்து கற்றல் வேண்டும் என்பது எல்லாக் காலங்களிலும் எல்லா இலக்கியங்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

✳ ஒழுக்கம் என்பது ஆசிரியர், மாணவர் இருவர்க்கும் பொதுவாக வைக்கப்பட்டுள்ளது. பிரம்மச்சரியம் காத்தல், காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை நீக்குவது இருவர்க்கும் உள்ள பொதுவான பண்புகளாகும்.

✳ ஆசிரியர் என்பவர் அவரைச் சார்ந்த மாணாக்களுக்கு நல்ல வழிகாட்டியாக இருத்தல் வேண்டும்.

✳ ஆசிரியர், மாணவர் இருவர்க்கும் பிழையின்றிப் பேசுவதும் எழுதுவதும் பொதுவானதாகும்.

✳ ஆசிரியர் இல்லாமல் கற்கும் கல்வி எவ்விதப் பயனையும் தராது.

✳ ஆசிரியர்கள் தாங்கள் செய்த பணிக்காக ஊதியம் பெறமுடியாமல் தவித்திருக்கின்றனர். ஊதியத்தின் இன்றியமையாமைப் பற்றிப் பிற்காலத்தில் தோன்றிய நீதிநூல்கள் எடுத்துரைத்த போதிலும் அது சங்க காலத்திலிருது தொடர்ந்து வந்துள்ளது.

✳ ஆசிரியர் கூறும் சொற்கள் மாணவர்களுக்குத் துன்பக்காலத்தில் உதவும் தன்மை பெற்றவையாகவும், தவறுகளைத் திருத்தி; ஒழுக்கமுடையவராக விளங்கும் ஆற்றல் உடையனவாகவும் இருத்தல் வேண்டும்.

✳ பல நூல்களையும் கற்றறிந்து நன்மை, தீமைகளை ஆராய வல்லவராகவும், அடக்கமாக நடத்தலும், வீடுபேறு அடையும் வழியை எடுத்துக் கூறுவதும், தான் துன்பப்படும் காலங்களில் தன் நிலையில் தாழாதவராகவும், ஆசை, பேராசையற்றவராகவும், நல்ல வழிகாட்டி யாகவும், இம்மை வாழ்வில் பற்றற்றவராகவும், தன்னலம் பாராதவராகவும் இருப்பதே ஆசிரியரின் ஒழுக்கமும் பண்புகளும் ஆகும்.

* ஆசிரியர்கள் தந்தைக்கு ஒப்பாகவும், சில வேலைகளில் உயர்ந்தவர்களாகவும் மன்னனையும்விட உயர்ந்தவர்களாகவும் மதித்துப் போற்றப்பட்டனர். ஆசிரியரின் மனைவியும் மதிக்கப் பெற்றார். அடிமை வாழ்வு வாழாத பெருமைக்குரியவர்களாக விளங்கியுள்ளனர்.

* கற்பிக்கும் முறைகளில் முதன்மையானது மாணாக்கரிடத்து அன்பு காட்டுதலாகும். அன்பால் மட்டுமே கற்பிக்க இயலும், விரைவாகக் கூறுதல், பொய்யான கருத்தைக் கூறுதல், கடுமொழியுரைத்தல் கூடாது, சிறிது சிறிதாக மாணாக்கர்களுக்குக் கற்றுக் கொடுத்தல் ஆகியன சிறப்பான கற்பித்தல் முறைகளாகும்.

* நூற்பொருளை அறிந்து மாணாக்கர்களுக்கு எடுத்துரைப்பவரும், மாணாக்கரை நல்வழிப்படுத்துபவரும், தன்னலமற்றவரும், தமக்குக் கேடுநினைப்பவருக்கும் தீங்கினை எண்ணாதவரும் நல்லாசிரியர்.

* ஆசிரியரது செயல்கள் மாணவர்களின் மன இருளை நீக்குவதாகவும், பாவ, புண்ணியங்களை உணர்த்தி அவர்களை நல்வழிப்படுத்துவ தாகவும், சமுதாயத்தில் அழியாத புகழைத் தருகின்றதாகவும், கல்வியின் அவசியத்தையும் எடுத்துரைப்பதாகவும் இருத்தல் வேண்டும்.

* ஆசிரியர் என்பவர் அனைத்தையும் முழுமையாகக் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டும். இல்லையேல் அவர் மற்ற ஆசிரியர் களிடத்தும் தன் மாணாக்கரிடத்திலும் அவமானப்பட நேரிடும்.

* முழுமையாகக் கற்றறியாதவரும், கறபித்தலின் நுட்பத்தை அறியாதவரும், தற்பெருமை பேசுபவரும், பிணியுடையோன்,

பின்னோக்கி, அறிவில்லாதவன், கள்குடிப்பவன், நன்மை, தீமைகளை உணர்ந்தறியாதவன், அன்பில்லாதவன், கொடுஞ்செயல் புரிகின்றவன் ஆகியோர் ஆசிரியராகமாட்டார்கள்.

* இயற்கை அறிவு, விரும்பத்தக்க தோற்றம், ஆராய்ச்சியுடைய கல்வி, நல்ல குடிப்பிறப்பில் பிறந்தவன் ஆகியோர் முதல்நிலை மாணாக்கனாகத் திகழமுடியும்.

* கற்பிக்கும் ஆசிரியருக்குக் கூலியைக் கொடுத்தல், தீய ஆசைகளை விடுத்தல், நல்லனவற்றைக் கற்றல், ஓதுதல், படித்தல், கேட்டல், உயிர்க்கொலை செய்யாதிருத்தல், புலால் உண்ணாதிருத்தல், நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்றுதல், ஆசிரியர் கற்பித்த பாடத்தை மறவாதிருத்தல், ஆசிரியரை மறவாதிருத்தல், ஆசிரியரின் துணையோடு கற்றல் ஆகியன மாணாக்கரின் பண்புகளும் ஒழுக்கமும் ஆகும்.

* கற்றலுக்கான முதற்படி ஆசிரியருக்குக் கீழ்ப்படிதலாகும். பணிவே ஒரு மாணவனுக்குக் கல்வியைத் தரும், கேட்டலின் மூலமே ஒருவன் நிறைவான கல்வியைப் பெறமுடியும், பாடத்தை வெறுப்பின்றிக் கற்றல் வேண்டும், கற்கும் மாணவர்கள் பொய்யுரைத்தல் கூடாது.

* ஆசிரியர் என்பவர் இறைவனுக்கு நிகரானவர். ஆசிரியரின் காலில் விழுந்து வணங்கிக் கற்றல் வேண்டும். ஆசிரிய வழிபாட்டில் தயக்கம் காட்டுதல் கூடாது.

* ஆசிரியரின் சொற்படிக் கேட்டு நடத்தல், வகுப்பறைகளில் மாணவர்கள் காதுகளைச் சொரிதல், கைகளை உயர்த்திப் பேசுதல், காலால் எழுதுதல், ஆசிரியர் பாடம் கூறும்போது மாணாக்கர்கள் பேசுதல் ஆகிய செயல்களைச் செய்தல் கூடாது. மாணவர்கள்

கோபமுற்ற போதும் ஆசிரியரின் பெயரைக் கூறுதல் கூடாது. பெண்களோடு பேசுதல் கூடாது ஆகிய அனைத்தும் மாணாக்கர்கள் வகுப்பறைகளில் கடைபிடிக்க வேண்டியவைகளாகும்.

* கற்றவனே மாணாக்கன். கல்லாதவன் மாணாக்கனாகமாட்டான். கல்லாதவன் கற்றறிந்தார் முன் சென்று தானும் அறிவுடையவன் என்று கூறுவான் எனில் அவன் அறிவுடையவர்களால் இகழப் படுவான். மாணவன் என்பான் அம்மாணவப்பருவத்திலேயே தன்னுடைய குற்றங்களை நீக்கிக் கொள்ளுதல் வேண்டும். ஆசிரியரின் சொற்கேளாதவனும் ஆசிரியருக்குக் கீழ்ப்படியாதவனும் மாணாக்கனாகமாட்டான். நல்லனவற்றை விடுத்து, கெட்டதை விரும்புபவன் மாணாக்கனாகத் தகுதியற்றவனாவான்.

## சான்றெண் விளக்கம்

1. மு. கோவிந்தராசன், தமிழ் நூல்களில் கல்வி, பக்.190–191

2. மு. வரதராசனார், (உ.ஆ.), திருக்குறள், ப.93

3. தி. பட்டுச்சாமி ஓதுவார், (ப.ஆ.), திருக்குறள் உரைக்கொத்து, ப.38

4. கி.வா. ஜகந்நாதன், (ப.ஆ.), தனிப்பாடல் திரட்டு, ப.101

5. அ. மாணிக்கம், (உ.ஆ.), கலித்தொகை, ப.340

6. ந. சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.432

7. ஞா. தேவநேயப்பாவாணர், திருக்குறள், தமிழ்மரபுரை, ப.247

8. ம. இராசமாணிக்கம் பிள்ளை, (உ.ஆ.), ஆசாரக்கோவை, பக்.176–177

9. ஸ்ரீமத் சுவாமி. சித்பவானந்தர், ஆசிரியன், ப.6

10. மு. வரதராசனார், (உ.ஆ.), திருக்குறள், ப.3

11. ஸ்ரீமத் சுவாமி. சித்பவானந்தர், ஆசிரியன், ப.20

12. இரா. இளங்குமரன், (உ.ஆ.), புறநானூறு, ப.312

13. ஸ்ரீமத் சுவாமி. சித்பவானந்தர், ஆசிரியன், ப.15

14. மு. வரதராசனார், (உ.ஆ.), திருக்குறள். ப.137

15. பதிப்பாசிரியர் குழு, மேகம், கட்டுரைத் தொகுப்பு, ப.304

16. ஸ்ரீமத் சுவாமி. சித்பவானந்தர், ஆசிரியன், ப.11

17. அய்க்கண், அழகப்பா, ப.126

18. சோம. இளவரசு, (உ.ஆ.), நன்னூல், சொல், ப.7

19. தி.சு. அவினாசிலிங்கம், கல்வி, ப.22

20. மு. வரதராசனார், (உ.ஆ.), திருக்குறள், மு.வ. ப.33

21. ஸ்ரீமத் சுவாமி. சித்பவானந்தர், ஆசிரியன், ப.6
22. ப. கோதண்டராமன், இலக்கியமும் திறனாய்வும், ப.81
23. ஞா. தேவநேயப்பாவாணர், (உ.ஆ.), திருக்குறள், ப.244
24. மேலது, ப.510
25. ஸ்ரீமத் சுவாமி. சித்பவானந்தர், ஆசிரியன், ப.7
26. மு. வரதராசனார், (உ.ஆ.), திருக்குறள், ப.141
27. வ.சுப. மாணிக்கனார், (உ.ஆ.), நீதிநூல்கள், ப.31
28. ஞா. தேவநேயப்பாவாணர், (உ.ஆ.), திருக்குறள், தமிழ்மரபுரை, ப.113
29. ஆசிரியர் பெயர் தெரியவில்லை, கல்வி உளவியல், ப.160
30. மேலது, ப.160
31. மேலது, ப.161
32. உ.வே. சாமிநாதையர், (உ.ஆ.), புறநானூறு, ப.126
33. சோம. இளவரசு, (உ.ஆ.), நன்னூல் எழுத்ததிகாரம், ப.24
34. மேலது, ப.24
35. ஞா. தேவநேயன், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், ப.139
36. வ.சுப. மாணிக்கனார், (உ.ஆ.), நீதிநூல்கள், ப.16
37. கே. பழனிவேலு, கல்வி வரலாறு, ப.30
38. மேலது, ப.15
39. மேலது, ப.17
40. சோம. இளவரசு, (உ.ஆ.), நன்னூல் எழுத்ததிகாரம், ப.23
41. கே. பழனிவேலு, கல்வி வரலாறு, ப.18

42. மேலது, ப.158

43. மு. வரதராசனார், (உ.ஆ.), திருக்குறள், ப.85

44. மயிலை.சீனி. வேங்கசாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப.50

45. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.482

46. மேலது, ப.235

47. ஞா. தேவநேயன், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், ப.139

48. மேலது, ப.139

## இயல் மூன்று

# சமுதாய மாற்றங்களும் ஆசிரியர் மாணவர் உறவும்

**முன்னுரை**

பொருளாதாரம், அறிவியல் வளர்ச்சி, கல்வியியல் சூழல், மாற்றுச் சிந்தனைகள், உறவுகள், நட்புகள், சுற்றங்கள், குடும்பங்கள் போன்றவை சமூகங்களின் இயங்குதல்களில்மாற்றங்களைக் காலந்தோறும் ஏற்படுத்தி வந்துள்ளன. ஆங்கிலக் கல்வியால் தமிழகத்தில் பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. பன்னெடுங்காலமாக மரபு நீட்சியாக, ஆசிரியர் மாணவர் உறவில் மரியாதையுடன் கூடிய அன்பு நிலைகளில் நிகழ்ந்துள்ள மாற்றங்கள் குறித்துக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

தொடக்கக் காலத்தில் கல்வி என்பது ஒரு தலைமுறையில் இருந்து மற்றொரு தலைமுறைக்கு அனுபவத்தைக் கடத்துவதாக இருந்துவந்தது. கல்வி, தொழில் செய்முறைகளைத் தமது பரம்பரையினருக்கு அளித்தல் என்ற தன்மையில் மரபு வழியாகப் பயிற்றுவிக்கப்பெற்றது.

பிராமணர்கள் மட்டுமே ஓதல், ஓதுவித்தல் ஆகிய இரண்டு செயல்களுக்கும் உரியவராகக் காட்டப் பெறுகின்றனர். தொல்காப்பியமும் "ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன"[1] என்கின்றது. உயர்ந்தோர் என்ற சொல்லுக்கு குடிப்பிறப்பால் உயர்ந்தோர், அறிவாலும், பண்பாலும், ஒழுக்கத்தாலும் உயர்ந்தோர் என்றும் பொருள் கூறுகின்றனர்.

பண்டைக் காலத்தில் அனைத்துப் பிரிவினருக்கும் உரியதாக இருந்த கல்வி ஆரியர் வருகைக்குப்பின் பிராமணர்களிடம் இருந்து பிற்காலத்தில் கட்டாயத்தின் விளைவாகவே மாற்றம் பெற்றுள்ளது என்பதை "சத்திரிய வைசியர் ஓதத் தக்கவராகத் தொடக்ககாலத்தில் இல்லை. சத்திரியர் மூன்று வருணத்தவரையும் பாதுகாப்பவராகவும் வைசியர் பொருள்களுக்கு

உரியவராகவும் இருந்தனர். பேரரசு உருவாகி அதிகாரம் குவிந்த காலத்தில் சத்திரியருக்கும் பண்டமாற்றிருந்து வணிகம் நிறுவனமாக மாறி செல்வவளம் கொழிக்கத் தொடங்கிய காலத்தில் வைசியருக்கும் கல்வியைக் கற்பிக்க வேண்டிய கட்டாயத்திற்குப் பிராமணர்கள் தள்ளப்பட்டனர்"[2] என்று பழனிவேலு குறிப்பிட்டுள்ளார்.

இந்தியக் கல்வி வரலாற்றில் வேதக்கல்வி மிகப் பழமையானது. வேதக்கல்விமுறை அமைப்புக்கு முன்னர்க் கற்பித்தல் என்ற தனியமைப்பு எதுவும் காணப்படவில்லை. தொழில் கற்பித்தலும் அனுபவமாகப் பரம்பரை வழி முயன்று கற்றலாகச் செய்முறையில் பயிலுவதாக இருந்து வந்தது. தொழில் கல்வி தனி ஆசிரியன் வழிக் கற்பிக்கப் பெறாமல் தொழில்புரியும் பகுதிகளில் மூத்தோரால் கற்பிக்கப்பெற்றது.

தமிழ்க் கல்வி வரலாற்றில் பிராமணக் கல்விமுறை வழக்கில் இருந்ததாக எந்த ஓர் இலக்கியமும் எடுத்துரைக்கவில்லை. குரு, சீடன் என்ற மரபு தமிழில் இல்லை. குருகுலம் என்ற அமைப்பு திண்ணைப் பள்ளிக்கூட அமைப்பு முறையாகும். பிராமணர்களின் வருகைக்குப்பின் அவர்களது ஆதிக்கம் மேலோங்கிய நிலையில் 'குருகுலம்' என்று திண்ணைப் பள்ளிக்கூடங்கள் அழைக்கப்பட்டன.

குரு, சீடன் என்ற மரபு கார்க்கேசிய மரபு. இது தமிழ் மரபிற்கு அப்பாற்பட்டது என்பது க.ப.அறவாணன் கருத்தாகும். ஆரம்ப காலகட்டங் களிலிருந்தே கணக்காயன், உவாத்தியாயர், வித்துவான், ஆசான், ஆசிரியர் என்று அழைக்கப்படுகின்றனர்.

**"பல்கேள்வித் துறைபோகிய**
**தொல்லாணை நல்லாசிரியர்"[3]**

***(பட்டினப்பாலை.169–170)***

என்று பட்டினப்பாலையும்,

***“நல்வேள்வித் துறை போகிய***

***தொல் ஆணை நல்லாசிரியர்”[4]***

***(மது.760–762)***

என மதுரைக்காஞ்சியும்,

***“கண்களி மயக்கத்துக் காதலோடிருந்த***

***தண்டமிழாசான் சாத்தன்”[5]***

***(சிலம்பு.25–65–66)***

எனவும்,

**“பொன்னணி புதுநிழற் பொருந்திய நங்கையை**

**அறக்களத் தந்தணர் ஆசான் பெருங்கனி**

**சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று”[6]**

***(சிலம்பு.28:223)***

என்று சிலப்பதிகாரமும்,

***“மாசுஇல் பனுவல் புலவர் புகழ்பல***

***நாவின் புனைந்த நன்கவிதை மாறாமை”[7]***

***(பரி–வையை.6:7–8)***

எனவும்

**“கேள்வியுள் கிளந்த ஆசான் உரையும்”[8]**

***(பரி.2:6)***

எனப் பரிபாடலும்,

**“வேந்துயர் எய்திச் சுதமதி எழுந்தாங்கு**

**அகன்மனை அரங்கத்து ஆசிரியர் தம்மொடு”[9]**

***(மணி.7:42)***

என்று மணிமேகலையும் ஆசான், நல்லாசிரியர், புலவர் என்று குறிப்பிடுகின்றன. இவ்விலக்கியங்களில் குரு–சீடன் என்ற சொற்கள் கையாளப்படவில்லை.

பழையமுறைக் கல்வியைக் கற்பித்தவர் “கணக்காயர், வித்துவான், மகாவித்துவான், கவிராயர், நாவலர் என்று பேர் பெற்ற புலவர்கள்”[10] என

மயிலை.சீனி.வேங்கடசாமி குறிப்பிடுகின்றார். "ஆசிரியர்கள் அக்காலத்தில் 'உவாத்தியாயர்', 'கணக்காயர்' என்னும் பெயரால் வழங்கப்பட்டனர்"[11] என வேங்கடசாமி நாட்டார் குறிப்பிட்டுள்ளார்.

மாணவர்களைப் பற்றிக் குறிப்பிடும் இலக்கியங்கள் மாணாக்கன் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றன.

**"அன்னாய் இவனோர் இளமாணாக்கன்"[12]**

***(கலி.149)***

எனக் கலித்தொகை குறிப்பிடுகின்றது. பிற்காலத்தில் தோன்றிய நூல்களில் சில 'குருவில்லாக் கல்வி வீண்' என்று குறிப்பிடுகின்றது. பிராமணர்களின் வருகைக்குப்பின் தோன்றிய இலக்கியங்களில் 'குரு' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவற்றிலும் மாணாக்கனைச் 'சீடன்' என அழைக்கும் மரபு இல்லை என்று இலக்கியங்களும், இலக்கிய ஆர்வலர்களும் குறிப்பிடுகின்றனர்.

எப்படியாயினும் பழைய கல்விமுறையில் ஆசிரியர், மாணவர் உறவு என்பது முறைப்படி வரையறுக்கப்பட்டிருந்தது. ஆசிரியரது வீட்டில் அவரது மகனாகவே மாணவர் தங்கித் தமது ஆசிரியர்க்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தனர். மாணவர்கள் ஆசிரியர்க்குப் பணிபுரிந்து கொண்டு கிடைக்கும் ஓய்வு நேரங்களில் கல்வி கற்றனர். கல்விக்காலம் நிறைவுபெறும் வரை மாணவர்கள் தொடர்ந்து ஆசிரியரின் இல்லத்திலேயே வாழ்ந்து வந்தனர். திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மாணவர்களைத் தமது பிள்ளைகளாகவே எண்ணி அன்பு செலுத்தி வந்தனர்.

திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மாணாக்கர்களுக்குத் தண்டனைகள் அளிக்கப்பட்டன. "பாடங்களைச் சரியாக ஒப்புவிக்காதவன் மற்றவர்களைச் சுமக்கும் தண்டனை நடைமுறையில் இருந்துள்ளது"[13] என மு.கோவிந்தராசன்

தமிழ் நூல்களில் கல்வி எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆசிரியர் கூறும் வேலைகளை மாணவர்கள் தவறாமல் செய்ய வேண்டும். ஆசிரியர் தூங்கிய பின் தூங்கி; ஆசிரியர் எழுவதற்கு முன்பே எழவேண்டும். முதலில் உணவை ஆசிரியருக்குக் கொடுத்து அதன்பின் உண்டனர். திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சுவையாக உண்பதும், அலங்காரமாக ஆடை உடுத்துவதும் கூடாது என்ற கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருந்தது. இக்கட்டுப்பாடுகள் மாணவனின் புலன்களை அடக்க உதவின. ஆசிரியர்கள் தமது வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை மாணவர்களிடமிருந்து பெற்றனர்.

திண்ணைப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் – மாணவர் உறவு குளிர் காய்பவன் நெருப்பினை எவ்வாறு அணுகி தனது குளிரைப் போக்கிக் கொள்வானோ? அவ்வாறே இருந்துள்ளது.

இதனைத் திருவள்ளுவர் ''அகலாது அணுகாது தீக்காய்வார் போல''[14] என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறாக இருந்த ஆசிரியர், மாணவர் உறவுமுறை காலம்தோறும் மாற்றம் பெற்றுக் கடமையைச் செய்வதும், ஊதியம் பெறுவதும் மட்டும் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. ஆசிரியர்களும் வெறும் பாடத்தில் உள்ள ஐயங்களைத் தீர்க்கின்றவர் என்ற அளவிற்கு மாற்றம் பெற்றுவிட்டனர்.

மாணாக்கர்களின் எதிர்காலத்தைப் பற்றிக் கவலையில்லாத ஆசிரியர்கள் பலரும், தங்களின் எதிர்காலம் பற்றிச் சிந்திக்காத மாணவர்கள் பலரும் இன்று காணப்படுகின்றனர். இம்மாற்றங்களுக்கான காரணங்களைக் கண்டறிவது தேவையாகின்றது.

அண்மைக்காலம் வரை ஆசிரியர், மாணவர் உறவு மிகவும் நன்றாக இருந்துள்ளது என்பதை அவ்வவ்காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்கள் நன்கு எடுத்தியம்புகின்றன. ஆசிரியர்கள் சமூகத்தில் நல்ல மதிப்பும் மரியாதையும் பெற்றுத் திகழ்ந்துள்ளனர். அவர்கள் தாங்கள் கற்ற கல்வியைத்

தங்கள் குலத்திற்குக் கற்றுக் கொடுத்து வந்துள்ளமையை இறையனார் அகப்பொருள் எடுத்துக் காட்டியுள்ளது.

அவர்களும் தலைமுறை தலைமுறையாக அப்பணியைச் செவ்வனே குறைகள் ஏதுமின்றி நல்லமுறையில் செய்து வந்துள்ளனர். ஓர் இலக்கியம் என்பது அது தோன்றிய காலத்தினை வெளிக்காட்டும் கண்ணாடி மற்றும் அச்சமூகத்தின் பிரதி என்பர். அதுபோன்று சங்க காலத்திலும் அதற்கு முன்னமும் கல்விமுறையானது எவ்விதக் குறைபாடும் இன்றி இருந்து வந்துள்ளது என்பதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைத்துள்ளன. ஆசிரியருக்கான தகுதிகள், மாணவர்களுக்கான பண்புகள், குணநலன்கள், இவ்வாறு தான் இருத்தல் வேண்டும் என்பது பற்றி எவ்விதக் குறிப்புகளும் இல்லையாயினும் முரண்கள் இருந்ததாகவும் காணப்படவில்லை. உரையாசிரியர்களின் விளக்கம் கொண்டு சங்ககால ஆசிரியர்களாகிய புலவர்களின் சிறப்பியல்புகளை அறியமுடிகிறது.

சங்க இலக்கியக் கால கட்டங்களில் ஆசிரியர்களிடம் குற்றங்கள், குறைகள் நடந்திருக்குமாயின் அவைகள் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ எடுத்தாளப்பட்டிருக்கும். சங்க காலத்தின் முற்பகுதியில் எவ்விதக் குறைபாடும் இன்றி; பிற்காலத்தில் அவற்றில் சிறுசிறு குறைகள் நிகழ்ந்து அவை மெல்ல மெல்ல வேரூன்றி களப்பிரர்கள் ஆட்சிக் காலத்தில் பல்கிப் பெருகியிருக்கக்கூடும்.

சங்கமருவிய காலங்களில் ஆசிரியர், மாணவர் பற்றிய பதிவுகள், அவர்களுக்கான இலக்கணங்கள், வரையறைகள், பண்புகள் பற்றி பல்வேறு நூல்களின் வாயிலாக பல்வேறு புலவர்களும் எடுத்துக் கூறியுள்ளனர். நன்னூலும் பிற்கால நீதிநூல்களும் இதே கருத்தை எடுத்தாண்டுள்ளன. இவற்றை ஆராயும்போது அத்தகைய தவறுகள் களப்பிரர்கள் காலத்திலிருந்து

தொடர்ந்து நடைபெற்று வந்தமை அறியப்படுகின்றது. இன்றைய காலகட்டங்களில் இத்தகைய வேறுபாடுகள் மிகுதியும் காணப்படுகின்றன.

**தொல்காப்பியம்**

தொல்காப்பியப் பொதுப்பாயிரம் முதன்முதலில் ஆசிரியர் என்பவர் யார்? ஆசிரியர் ஆகாதவர் யார்? மாணாக்கர் என்பவர் யார்? மாணாக்கராகாதவர் யார்? என்பது பற்றி எடுத்தாண்டுள்ளது. இவற்றைக் கொண்டு பார்க்கும் பொழுது தொல்காப்பியர் காலத்தில் ஆசிரியர், மாணவர் இவர்களுக்கிடையேயான உறவுகளில் எவ்வித மாற்றமும் இன்றி இருந்துள்ளமையை அறியமுடிகின்றது. தொல்காப்பியம் இவர்கள் பற்றி நேரடியாக எதனையும் தெரிவிக்கவில்லை. தொல்காப்பியருக்குப் பின்பு வந்த உரையாசிரியர்களின் காலத்தில் ஆசிரியர்களும் மாணவர்களும் தங்களது கடமைகளிலிருந்து சற்று விலகியிருக்கக்கூடும். ஆதலால் தான் தொல்காப்பியப் பாயிரத்திற்கு விளக்கமளித்த வேளையில் அதற்கான தேவைகளையும் எடுத்துரைத்து; அவற்றை மக்களிடையே சென்றடையச் செய்தனர். ஆசிரியரும் மாணாக்கரும் இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும் என்பதை எடுத்துரைத்து எதிர்கால சமுதாயத்தை நல்வழிப்படுத்த முன்வந்துள்ளனர்.

**ஈவோர் - ஆசிரியர்**

ஆசிரியர்க்கு மலை, நிலம், பூ, துலாக்கோல் போன்றவை உவமையாகக் கூறப்பட்டுள்ளன. இதன் நோக்கம் ஆசியரிர்கள் தமக்குரிய பெருமைகளை அறிந்து நடத்தல் வேண்டும். ஆசிரியர்களைச் சமுதாயமும் அறிந்து கொண்டு நடத்தல் வேண்டும் என்பதற்காகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

சூழ்நிலைகளின் காரணங்களால் மாற்றங்கள் நிகழலாம். ஆசிரியர்கள் தங்களுக்குரிய தகுதிகளையும் பெருமைகளையும் உணர்ந்து தங்கள் பணியைச்

செவ்வனே செய்ய வேண்டும். சமுதாயத்தில் ஆசிரியர் பெரும் மதிப்பை மக்கள் அறிந்து கொண்டு அவர்களைப் போற்றி மதித்து நடத்தல் வேண்டும் என்பதற்காகவே மலை, நிலம், பூ, துலாக்கோல் ஆகியன உவமையாகக் கூறப்பட்டுள்ளன.

இவற்றின் வழி அவரவர் கடமையும், மதிப்பும் உணர்ந்து அதன்வழி ஆசிரியரும் சமுதாயமும் நடந்து கொள்ள வேண்டும் என்பது அறிவுறுத்தப்பட்டுள்ளது. இவற்றை அறிந்து செயல்பட்டால் எதிர்கால சமுதாயம் சிறப்பாக அமையும் என்பது உரையாசிரியர்கள் கருத்து. கடமையை நிறைவேற்றுவதில் ஆசிரியர் கண்ணும் கருத்துமாக இருத்தல் வேண்டும். ஆசிரியர் தவறி நடப்பாராயின் அவர் சமூகத்தால் எளிதில் இகழப்படுவார். ஆசிரியரை இகழ்வதற்காகக் காத்திருக்கின்ற சமூகம் அவர்கள் கடமையை நிறைவேற்றும் போது கண்டு கொள்வதில்லை. ஊடகங்களும் அவ்வாறே நடந்து கொள்கின்றன.

ஆசிரியரை எளிதில் குறை கூறுகின்ற இந்தச் சமூகமும் ஊடகங்களும் பிற துறையைச் சார்ந்தவர்களை அவ்வாறு குறை கூறுவதில்லை. இதனை மு.வரதராசன் கல்வி எனும் நூலில் வன்மையாகக் கண்டிக்கின்றார். “உரிமை பெறுவதற்கு முன்னே குறை கூறுவதை ஒரு கலையாகப் பழகிவிட்டோம். குறைகூறி ஆத்திர உணர்ச்சியை எழுப்பினால் தான் மக்களின் கைத்தட்டுக் கிடைக்கும்; போற்றுதல் கிடைக்கும்; கூட்டமும் சேரும்; பத்திரிக்கைகளும் செல்வாக்குப் பெறும். இந்த நிலைமை இருக்க வேண்டிய நிலைமையுமாகும். உரிமை பெற்ற பிறகு, இது மாறியே தீரவேண்டும். உரிமை நாட்டில் பேசும் பேச்சும் எழுதும் எழுத்தும் புது வகையாக இருக்க வேண்டும். அதாவது, கைத்தட்டுக்கும் போற்றுதலுக்குமாகப் பேசுவதும் எழுதுவதும் நீங்க வேண்டும். காரணம் இல்லாமல் குறை கூறிவிட்டுத் தப்பித்துக் கொள்ளக்கூடாது.

குறைகளைக் குறிப்பிட வேண்டும். குறைகள் இருப்பதற்குக் காரணம் இன்னவை என்று ஆராய வேண்டும். அவைகளைப் போக்குவதற்கு வழிகள் இன்னவை என்று எடுத்துக்காட்ட வேண்டும். அவ்வாறு செய்வதே ஆக்கவேலை. இது எல்லாத் துறைக்கும் பொருந்தும். பள்ளிக்கூடத் துறைக்கும் இதுவே பொருந்தும்.

இந்த நாட்டில் மிகக் குறைந்த வருவாய் பெறுகின்றவர்கள் ஆசிரியர்கள். பொருளாதாரத் துறையில் மிகத் தாழ்ந்திருக்கின்ற காரணத்தால், அவர்களை யார் வேண்டுமானாலும் எவ்வாறாகிலும் குறை சொல்லிக் கொண்டேயிருக்கலாம். ஆயிரக் கணக்கில் சம்பளம் வாங்கிக் கொண்டு அணுவளவும் நாட்டுக்குப் பயன்படாத பெரிய அலுவலர்களை எல்லோரும் உள்ளத்திற்குள்ளே பழித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய அலுவலகங்களில் நாலணா எட்டணா லஞ்சம் வாங்குகின்ற சேவகர்களைக் கைப்பிடியாகப் பிடித்து அதிகாரிகளிடம் ஒப்படைத்து அவர்களுடைய வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார்கள். இது வட்டிகட்டின கோழைத் தன்மை, ஆசிரியர்களைப் பொறுத்தவரையில் சிலர் இப்படித்தான் நடந்து கொள்கிறார்கள். வம்புக்கு வராத பூச்சிகள் என நினைத்து ஆசிரியர்களைப் பற்றி வாயில் வந்தபடியெல்லாம் குறை கூறுகிறார்கள். இதுவும் அப்படிப்பட்ட கோழைத் தன்மையே”[15] என்று குறிப்பிடுகின்றார். ஆதலால் பொதுமக்களை விட ஆசிரியர்கள் தங்களின் கடமைகளை நிறைவேற்றுவதில் அக்கறையோடு செயல்பட வேண்டும்.

ஆசிரியர்கள் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதைத் தொடர்ந்து ஆசிரியராகாதவர்க்கான இலக்கணத்தையும் எடுத்துரைக்கின்றார். இதனை,

1. கழற்குடம் - "முன் இட்டவற்றைப் பின்னால் மாற்றித்தரும் இயல்புடையவை"[16]

2. மடற்பனை - "கற்பிக்க முன் வராதவர்கள்"[17]

3. முடத்தெங்கு - "மாணாக்கரல்லாத பிறருக்குக் கற்பிப்பவர்கள்"[18]

4. பருத்திக் குண்டிகை - "விருப்பமின்றிக் கற்றுத் தான் கற்றவற்றை வெறுப்புடன் விருப்பமின்றிக் கற்றுக் கொடுப்பவர்கள்"[19]

என நான்கு வகையாகப் பிரித்துள்ளார்.

இதன்வழி உரையாசிரியர் காலகட்டத்தில் எத்தகு காரணங்களால் ஆசிரியர்கள் தங்கள் மதிப்பை இழந்துள்ளனர் என்பதும், இத்தகைய ஆசிரியர்கள் அன்றைய காலகட்டங்களில் இருந்துள்ளனர் என்பதும் பெறப்படுகின்றன. நற்குணம் வாய்க்கப்பெற்றவர்கள் ஆசிரியர்களாதல் வேண்டும் என்று கூறியிருப்பினும் இப்பண்பில்லாதவர்களும் ஆசிரியர்களாக இருந்துள்ளனர்.

**கற்பிக்கும் முறை**

**"ஈதல் இயல்பே யியல்புறக் கிளப்பின்**
**பொழிப்பே யகலம் நுட்ப மெச்சமெனப்**
**பழிப்பில் பல்லுறை பயின்ற நாவினன்**
**புகழ்ந்த மதியிற் பொருந்தும் ஓரையில்**
**தெளிந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்**
**கொள்வோன் உணர்வகை அறிந்தவன் கொள்வரக்**
**கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்"**

**(தொல்.பொது.)**

எல்லா ஆசிரியர்களும் கற்பிக்கின்றனர். ஆனால் ஒரு சில ஆசிரியர்கள் மட்டுமே மாணவர்களின் போற்றுதலுக்குரியவர்களாகத் திகழ்கின்றனர். இதனைத் தொல்காப்பியம்

* ஆசிரியர் என்பவர் பல்துறை அறிவுபெற்றவராக இருத்தல் வேண்டும்.

* மாணாக்கர்களுக்கு நன்மை தீமைகளை எடுத்துரைத்து, நிறை குறைகளைச் சரிசெய்கின்றவராக இருத்தல் வேண்டும்.

* முதல், இடை, கடை என்ற மூன்றுவகை மாணாக்கர்களும் அறிந்து கொள்ளும் வண்ணம் ஆசிரியர் பாடம் கூறவேண்டும்.

என்று கூறுகின்றது. அவ்வாறு மரபுவழி கற்றுக் கொடுத்தல் தொடர வேண்டுமென நம் முன்னோர்கள் குறிப்பிடுகின்றனர். பாடம் நடத்தும் முறையை எடுத்துக் கூறுவதன் வழி ஆசிரியர்கள் இவற்றில் குறை வைத்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

ஆசிரியர்கள் தங்கள் அறிவாற்றலாலும், குணத்தாலும், பாடம் நடத்தும் முறையாலும் சிறந்து விளங்க வேண்டும் என்றும், இத்தகைய பண்புகளைப் பெற்றிருப்பீராயின் எதிர்காலத்தில் ஆசிரியச் சமூகம் சிறப்புடன் திகழும் என்பதை உரையாசிரியர்கள் எடுத்துரைத்துள்ளனர்.

எத்தகைய மாணவர்களாக இருந்தாலும் ஓர் ஆசிரியர் தாம் பாடம் நடத்தும் முறையால் அவர்களைக் கவர்ந்து நல்லறிவும் நல்லொழுக்கமும் புகட்ட முடியும்.

**கற்பதற்குத் தகுதியுடையோரும் தகுதியற்றோரும்**

கற்பதற்குரியோர் என்பதிலிருந்து அனைவருக்கும் கல்வி கற்றுத்தரப்படவில்லை என்பது அறியப்படுகின்றது. பிராமணக் கல்விமுறையில் கல்வி அனைவருக்கும் கற்றுத்தரப்படவில்லை.

பிராமணக் கல்விமுறையில் வேதங்கள் கற்பிக்கப்பட்டன. வேதம் ஓதுகின்றவர் பிராமணர். ‘‘பிராமணர் மட்டுமே ஓதுதல், ஓதுவித்தல் ஆகிய

இரண்டு செயலுக்கும் உரியவராகக் காட்டப்பெறுகின்றன"[20] என்று பழனிவேலு குறிப்பிட்டுள்ளார். திண்ணைப் பள்ளிக் கூடத்தில் கற்பதற்கும், கற்பிப்பதற்கும் தகுதி ஆழ்ந்த அறிவாற்றலும் சிறந்த ஒழுக்கமும் ஆகும். இவற்றினடிப்படையில் தகுதியும், பண்பும் உடையவர்களுக்குக் கல்வி கற்றுத்தரப்பட்டது.

இருப்பினும் பொருள்நனி கொடுப்போனுக்குக் கற்பிக்கலாம் என்று கூறியிருப்பதன் வழி கல்வி கற்கப் பணம் இன்றியமையாத ஒன்றாக இருந்துள்ளது அறியப்படுகிறது. ஏழைக்குக் கல்வி கற்றுத்தந்தமை பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. பொருள் கொடுப்பவர்களுக்குக் கற்றுத் தரலாம் என்றல்ல; பொருள் நனி (பொருளை மிகுதியாகக் கொடுப்பவனுக்கு) கற்பிக்கலாம் என்று கூறுவதினின்று பணத்தை, பொருளை முன்னிலைப்படுத்திக் கல்வி அமைந்துள்ளது என்பது அறியப்படுகின்றது.

இன்றைய சூழ்நிலையில் கூட பணத்தை முன்னிறுத்தியே கற்பித்தல் என்பது நடைபெறுகின்றது. கற்கின்ற பாடத்திற்கு ஏற்பக் கட்டணமும் அமைகின்றது.

**"குரங்கெறி விளங்கா யெருமை யாடை**
**தோணி யென்றாங் கிவையென மொழிப"**
**(தொல்.பொது.)**

என்று குறிப்பதன் வழி மாணாக்கர்களில் தகுதியற்றவர்கள் இருந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. கல்வி கற்க வேண்டும் என்ற எண்ணமுடையவர் களுக்கிடையில் அதன் மகத்துவம் அறியாது; தன்மேல் அக்கறை இல்லாத மாணாக்கர்களும் இருந்துள்ளனர் என்பதை மேற்கண்ட நூற்பாவின் வழி அறியமுடிகின்றது.

இவர்களுக்கு உவமை எருமை. எவ்வாறு எனில், எருமை நல்ல நீரினைக் கலக்கி பிறர் அருந்தாதபடி சேறாக்கிவிடும். நல்ல நீரினைக் கலக்காமல்

பருகலாம் என்பது எருமைக்குத் தெரியாது. அதனுள்ளே இறங்கி அதனைக் கலக்கி யார்க்கும் பயன்படாத வண்ணம் செய்துவிடும்.

கற்பதற்குத் தகுதியுரியவர்களாக ஆசிரியர் மகன், தனக்கு ஆசிரியராக இருந்தவரின் மகன், மன்னன் மகன் ஆகியோர் முதன்மை பெறுகின்றனர். இவர்களுக்கு அடுத்தபடியாகப் பொருளை மிகுதியாகக் கொடுப்பவரும் சிறந்த அறிவைப் பெற்றவர்களும் விளங்குகின்றனர். கல்வியின் மகத்துவம் அறியாதவர்கள் கற்பதற்குத் தகுதியற்றவர்கள் ஆவர்.

**பாடம் கேட்கும் முறை**

பாடம் சொல்லும் முறைபோல பாடங்கேட்கும் முறையையும் உரையாசிரியர்கள் எடுத்துரைத்துள்ளனர். இன்றைய காலகட்டங்களில் மாணவர்கள் எவ்வாறு கல்வி கற்க வேண்டும் என்பதற்கு மனோதத்துவம், யோகா போன்ற எத்தனையோ முறைகளைக் கொண்டு மாணாக்கர்களின் மனத்தை ஒருநிலைப்படுத்தி கற்பிக்கச் செய்கின்றனர். இருப்பினும் அவற்றில் முழுமை காண இயலவில்லை. இதற்கான முக்கியக் காரணம் நவீன காலக் கல்விமுறைகளாகும்.

இன்றைய காலகட்டங்களில் கல்வி என்பது முன்னமே திட்டமிட்டு வரையறுக்கப்படுகின்றது. அட்டவணைப் பாடத்தின் மூலம் ஆசிரியர், மாணவர் இருவரும் பின்னிப் பிணைக்கப்பட்டுள்ளனர். இதனால் மாணாக்கர்கள் பாடத்தின் மீது வெறுப்புக் காட்டுகின்றனர். இத்தனை மணி முதல் இத்தனை மணி வரை மாணவர்கள் வகுப்பறையில் இருத்தல் என்பது கட்டாயமாக்கப்படுகின்றது. அவர்களுக்கு விருப்பமோ, இல்லையோ அவர்கள் இருந்தே ஆகவேண்டும். அவர்களைக் கண்காணிக்கும் பொறுப்பு ஆசிரியர்களுக்குள்ளது. இதனால் இவ்விருவர்களுக்கிடையே சுமூகமான உறவு என்பது சரிவர ஏற்பட முடியாமல் போகின்றது. மாணவர்களின்

மனநிலையைப் புரிந்து கொள்ளும் அறிவாற்றலின் மூலம் மாணவர்களைக் கையாளத் தெரிந்தவர்கள் வெற்றி பெறுகின்றனர். கையாளத் தெரியாதவர்கள் தோல்வியுறுகின்றனர். இந்நிலை மாறினாலே இவ்விருவர்களுக்கு இடையே சுமூகமான உறவு நிலவும்.

நெட்டுறுச் செய்யும் அன்றைய கல்வி முறைக்கு மன அமைதி, விருப்பம் ஆகியன இன்றியமையாமையாகும். ஆதலாலே ஆசிரியர்கள் தங்களின் விருப்பத்திற்கேற்பக் கற்பித்து வந்துள்ளனர். கற்க வேண்டும் என்ற ஆர்வமுள்ள மாணவர்கள் ஆசிரியர் எப்போது கற்பிப்பார் என்ற ஆர்வத்தின் விளைவாக அவர் கற்றுக் கொடுக்கும் நேரத்தில் கற்றுக் கொடுப்பதை ஆர்வமுடன் கற்றுள்ளனர். அவற்றிலும் ஒருமுறை கேட்டல், இருமுறை கேட்டல், உடன் பயில்வாரோடு கற்றல் ஆகியவற்றின் மூலம் எளிமையாகக் கற்கும் முறைகளையும் கையாண்டுள்ளனர்.

மாணாக்கர்கள் எவ்வாறு நூலைப் பயில வேண்டும் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்றும் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவற்றினின்று அக்காலத்தில் மாணவர்களின் மனநிலை அறிந்து பாடம் கற்பிக்கப்பட்டமையை அறியமுடிகின்றது.

**நல்லாசிரியர் இலக்கணம் - நன்னூல்**

தொல்காப்பியம், நன்னூல் இரண்டும் ஆசிரியர், மாணாக்கர் பற்றிய பதிவுகளை எடுத்துரைத்துள்ளன. இளம்பூரணரின் காலமும் நன்னூலின் காலமும் ஏறத்தாழ சமகாலமாகும். இளம்பூரணர் தொல்காப்பியப் பாயிரத்திற்கு விளக்கமாகக் கூறிய கருத்துக்கள் நன்னூலிலும் எடுத்தாளப் பட்டுள்ளன. இளம்பூரணர் எடுத்துரைத்த கருத்துக்களைப் பவணந்தியர் சிறுசிறு மாறுதல்களைப் புகுத்தி ஆசிரியர், மாணவர்களுக்கான நல்லியல்புகள், பாடம் கேட்கும் முறை, அவர்களது பெருமை, கடமைகளாக

எடுத்துரைக்கின்றார். ஒரே மாதிரியான கருத்தினை வெவ்வேறு புலவர்கள் எடுத்தாண்டுள்ளது அதன் முக்கியத்துவம் என்ன? என்பதை எடுத்துரைக்கின்றது. ஆசிரியர், மாணவர் உறவுகள் மாற்றம் பெற்று இந்நிலை நீடிக்குமாயின் அது எதிர்காலத்தினைக் கேள்விக் குறியாக்கிவிடும் அதனை உடனடியாகக் களைந்திட வேண்டும் என்பதால் இளம்பூரணரும் நன்னூலாரும் இம்முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். நன்னூலார்,

> **“குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை**
> **கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
> **நிலம் மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**
> **உலகியல் அறிவோடு உயர்குணம் இணையவும்**
> **அமைபவன் நூலுரை யாசிரி யன்னே”**
>
> ***(நன்.எழுத்து.26)***

என்கிறார். குலனருள், தெய்வம் என்பது முதன்மையாக எடுத்துரைக்கப் பட்டதன் விளைவாக ஆசிரியராவதற்கான முதல் தகுதி உயர்குடியில் பிறந்திருத்தலாகும். அதனைத் தொடர்ந்தே கலைபயில் தெளிவு, கட்டுரை வன்மை, கொள்கையில் மேன்மை, உலக அறிவு, உயர் குணம் ஆகியன எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இவற்றின்று நற்குடியில் பிறந்தவர்கள் ஆசிரியர்களாகத் தகுதி பெற்றவர்கள் என்பது புலப்படுகின்றது.

ஆசிரியர் என்பவர் அறிவில் சிறந்தவராகவும், பொறுமை நிறைந்தவராகவும் இருப்பதோடு மாணாக்கர்களின் அறிவுத் திறனுக்கு ஏற்ப இருத்தல் வேண்டும் என்கின்றது. இதனை,

> **“.....................................**
> **பருவ முயற்சி அளவிற் பயத்தலும்**
> **மருவிய நன்னில மாண்பா கும்மே”**
>
> ***(நன்.எழுத்து.27)***

என்ற நூற்பா எடுத்துரைக்கின்றது.

தன்னுடைய மாணாக்கர்கள் குற்றம் செய்தபோதும் பொருத்துக் கொள்ள வேண்டும் என்று எடுத்துரைப்பதன் வழி அன்றைய மாணவர்கள் ஆசிரியரை இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. மாணாக்கர்களின் குற்றங்களைப் பொறுக்காத ஆசிரியர்கள் தங்களின் பொறுமைக் குணத்தை இழந்து வந்துள்ளனர் என்பதும் புலப்படுகின்றது.

**"அளக்க லாகா அளவும் பொருளும்**
**துளக்க லாகா நிலையும் தோற்றமும்**
**வறப்பினும் வளந்தரும் வன்மையும் மலைக்கே"**

***(நன்.எழுத்து.28)***

ஆசிரியர் மலைக்கு ஒப்பாகப் போற்றப்படுவது அவர் கல்வி அறிவால் மலையளவு உயர்ந்துநிற்க வேண்டும் என்பதற்காகும். அவ்வாறு மலை போன்று உயர்ந்து விளங்கினால் தான் மாணாக்கர்கள் தேடிவருவர். ஆசிரியரின் திறமையறிந்தே மாணாக்கர்கள் கற்க முன்வருவர். 'வறப்பிணும் வளம்தரும் வன்மை' என்று கூறியிருப்பது, கல்வி கற்கப் பொருளினைக் கொடுக்க இயலாத காலங்களிலும் ஆசிரியர் அவர்களை ஒதுக்காது அவர்களுக்கும் பாடம் கூறவேண்டும் என்பதை எடுத்துரைப்பதற்காகும்.

சில ஆசிரியர்கள் மாணாக்கர்களின் செயல்களால் தங்களது பொறுமையை இழந்துள்ளனர். பொருளினைத்தர இயலாமையால் மாணாக்கர்கள் கல்வியை இழந்துள்ளனர். பொருளால் கல்வி தடைபடக் கூடாது என்பது எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

**"ஐயம் தீரப் பொருளை உணர்த்தலும்**
**மெய்ந்நடு நிலையும் மிகுநிறை கோற்கே"**

***(நன்.எழுத்து.29)***

ஆசிரியர் ஐயம் தீரப் பொருளை விளக்க வேண்டும். இருபுலவர்கள் மாறுபட்ட கருத்துக்களை எடுத்துக்கூறும் பொழுது அவற்றின் உண்மை நிலையைக்

கண்டறிதல் வேண்டும். கருத்துக்களைத் தெளிவாக எடுத்துரைக்கின்றவர் ஆசிரியர் என்று கூறுகின்றது. இவற்றின் வழி தெளிவுபட உரைக்காத ஆசிரியர்களும் இருந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

> **"மங்கலம் ஆகி இன்றி யமையாது**
> **யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்**
> **பொழுதின் முகமலர்வு உடையது பூவே"**
>
> ***(நன்.எழுத்து.30)***

மங்கலகரமான நிகழ்ச்சிகளில் முக்கியப்பங்கு வகிப்பது மலர்; அறுபோன்றே ஆசிரியரும் ஆவார். மலர் மலர்ந்து பார்ப்பவர்களின் கவனத்தைத் தன்பால் ஈர்ப்பது போல ஆசிரியரும் தன் தன்மையால், நற்குணத்தால் முகமலர்ச்சியுடன் இருந்து அனைவரது கவனத்தையும் தன்பால் ஈர்த்தல் வேண்டும். மலர் போன்று அனைத்து நற்செயல்களிலும் முக்கியப்பங்கு வகிக்கும் அளவிற்கு ஆசிரியர் இருத்தல் வேண்டும் என்று நன்னூல் குறிப்பிடுகின்றது.

அனைத்து நல்ல நிகழ்ச்சிகளிலும் ஆசிரியர் பங்குபெற வேண்டுமாயின் அவர் மேற்கூறிய நற்பண்புகள் அனைத்தையும் பெற்றிருத்தல் வேண்டும். ஆசிரியர் சமுதாயத்தில் நன்மதிப்புப் பெற்றுத் திகழ்ந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. ஆசிரியர்கள் பொதுமக்களால் மட்டுமின்றி உயர்பதவி வகித்தவர்களாலும் மதிக்கப்பெற்றனர். "குறுநில மன்னர்களும், பாளையக்காரர்களும், பெருநிலக்கிழார்களும், ஜமீன்தார்களும், பிரபுக்களும் அக்காலத்தில் தமிழ்ப் புலவர்களைப் போற்றினார்கள். அவர்கள் தங்கள் மாளிகையில் தகுந்த புலவர்களை அழைத்துப் போற்றினார்கள்"[21] என்று மயிலை. சீனி. வேங்கடசாமி குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு சமூகத்தில் உயர்ந்த இடத்தில் போற்றி மதிக்கத்தக்க அளவிற்கு விளங்கிய ஆசிரியர்கள் பிற்காலத்தில் அனைவராலும் எளிதில்

குறைகூறத்தக்க அளவிற்கு விளங்குகின்றனர். இந்நிலை இளம்பூரணர் மற்றும் நன்னூலார் காலகட்டங்களில் தொடங்கியது எனலாம். இவர்கள் ஆசிரியராகாதவர்கள் என்று எடுத்துக் கூறுவதினின்று இதனை அறிய முடிகின்றது.

ஆசிரியருக்கான முதற்தகுதி நற்குடியில் பிறந்திருத்தல் ஆகும். அன்றைய மாணவர்கள் சிலர் ஆசிரியரை இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்தமையால் பிற்காலத்தில் ஆசிரியர்கள் தங்களின் பொறுமைக் குணத்தை இழந்துள்ளனர். கல்வியைப் பணம் கொடுத்துப்பெறும் நிலை மாறவேண்டும் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**ஆசிரியராகாதவர் இலக்கணம் - நன்னூல்**

ஆசிரியர் என்பவர் சிறந்த அறிவாற்றலும் மேன்மையான ஒழுக்கமும் கொண்டவராக இருத்தல் வேண்டும். இந்நிலையிலிருந்து மாறுகின்றவர்கள் ஆசிரியராகார்.

> ***"மொழிகுணம் இன்மையும் இழிகுண இயல்பும்***
> ***அழுக்காறு அவாவஞ்சம் அச்சம் ஆடலும்***
> ***கழற்குடம் மடற்பனை பருத்திக் குண்டிகை***
> ***முடந்தெங்கு ஒப்பென முரண்கொள் சிந்தையும்***
> ***உடையோர் இலர் ஆசிரியர் ஆகுதலே"***
>
> ***(நன்.எழுத்து.31)***

என்கிறது நன்னூல். உரையாசிரியர்கள் ஆசிரியருக்கான இலக்கணம் கூறும்போது கொள்கையில் மேன்மையும், நிலம், மலை, துலாக்கோல், மலர் போன்றவைகளை உவமையாகவும் கூறியுள்ளனர். இவ்வுவமைகளைக் கூறும்போதே இத்தகைய குணநலன்களைப் பெறாதவர்களும் ஆசிரியர்களாக இருந்துள்ளனர் என்பது உணரப்படுகின்றது. மொழிகுணம் இல்லாதவரும், இழிகுணம் படைத்தவர்களும் இருந்துள்ளனர்.

பொறாமைக்குணமும், ஆசையும், அச்சமும் கொண்ட ஆசிரியர்களும் இருந்துள்ளனர். இவற்றினின்று பொறாமைக் குணத்தாலும், பொருளை மிகுதியாகக் கொடுப்போர்க்குக் கற்றுக் கொடுக்கலாம் என்ற பேராசையாலும், இழிந்த குணம் படைத்தவர்கள் ஆசிரியர்களாக இருந்துள்ளமையாலும், பாடம் சொல்லும் குணம் இல்லாத ஆசிரியர்கள் இருந்துள்ளமையாலும் ஆசிரியர்கள் மாணாக்களிடமிருந்து தங்களின் நன்மதிப்பை இழந்துள்ளனர். இத்தகைய ஆசிரியர்களை அக்காலச் சமுதாயம்

**“கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு**
**குண்டிகைப் பருத்தி யோடிவை யெனமொழிப”**[22]

என்று இகழ்ந்துள்ளதாக நச்சினார்க்கினியர் தொல்காப்பிய சிறப்புப் பாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

இன்றைய சூழலில் ஆசிரியர்களைவிட பல மாணாக்கர்கள் திறமயானவர்களாக இருக்கின்றனர். இதற்கான காரணம் அறிவியல் வளர்ச்சியும் அதனால் கிடைத்த நவீனக் கருவிகளுமாகும். மாணவன் பள்ளியில் மட்டுமே கற்றது அன்றைய நிலை. இன்று மாணவன் கணினி, இணையம், வலைதளத்தின் மூலமும் கற்கும் சூழல்கள் ஏற்பட்டுவிட்டன. ஆதலால் அவன் ஆசிரியரைவிட திறமையானவனாகவே இருக்கின்றான். இதனை ‘த சண்டே இந்தியன்’ என்ற இதழ், ஆசிரியர்களுக்கு ஆசிரியர்கள் உண்டா? என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கட்டுரையில் “என்.ஐ.டி.யில் உள்ள பெரும்பாலான ஆசிரியர்களின் அறிவுத்திறன் மாணவர்களின் அறிவுத் திறனைவிட குறைவு”[23] என்று குறிப்பிட்டுள்ளது.

அழுக்காறு, அவா, அச்சம் ஆகிய குணத்தைப் பெற்ற ஆசிரியர்களும் இருந்துள்ளனர். இவற்றுள் அச்சம் என்பதற்குப் பொருள் கூறும் உரையாசிரியர் மாணாக்கர்களுக்குப் பாடத்தின் மேல் அச்சத்தை ஏற்படுத்துவர் என்று குறிப்பிட்டுள்ளார். ஆசிரியர் என்பவர் பாடப்பொருளை எளிமையாக்கி

அதன்மேல் உள்ள அச்சத்தைப் போக்குபவராக இருத்தல் வேண்டும். அவ்வாறு செய்யாவிடின் அவர் எதையும் தெளிவர முழுமையாகக் கற்காதவர் என்பது புலப்படுகின்றது. இவற்றினின்று மாணாக்கனைவிடத் திறமை குறைந்த ஆசிரியர்களும் இருந்துள்ளனர் என்பது அறியப்படுகிறது.

முன்னுக்குப் பின் முரணாகக் கற்றுக் கொடுப்பவரும், மாணாக்கருக்குப் பாடம் சொல்ல விருப்பமில்லாதவரும், திறமையற்றவரும், பணத்திற்காக ஆசைப்பட்டுத் தன் மாணாக்கர் அல்லாத பிறருக்குத் தன்னுடைய அறிவாற்றலை விற்பவர்களும் இருந்துள்ளனர். இவ்வாறான செயல்களினால் ஆசிரியர்கள் தங்களின் மதிப்பை இழந்துள்ளனர்.

கழற்குடம், மடற்பனை, பருத்திக்குண்டிகை, முடத்தெங்கு என்னும் உவமைகள் ஆசிரியர்கள் தங்களின் நிலையை அறிந்து மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதை எடுத்துரைக்கக் கூறப்பட்டுள்ளன. தங்களின் கடமைகளைச் சரிவரச் செய்யாத ஆசிரியர்களைத் தங்களின் செயல்பாடுகளுக்கேற்ப இச்சமூகம் மடற்பனை, முடத்தெங்கு, பருத்திக்குண்டிகை, கழற்குடம் என்றெல்லாம் வருணித்துள்ளது. ஆதலால் ஆசிரியர்கள் தங்களின் குறைகளை நீக்கி எதிர்காலச் சமுதாயத்தை நல்வழிப்படுத்துங்கள் என்பதை உணர்த்தியுள்ளது.

**“பெய்த முறையன்றிப் பிறழ உடன்தரும்**
**செய்தி கழற்பெய் குடத்தின் சீரே”**

***(நன்.எழுத்து.32)***

இவற்றின் வழி மாணாக்கர்களைக் குழப்பாமல் தெளிவாகக் கூறவேண்டிய முறைப்படி பாடம் நடத்துதல் வேண்டும் என்பது பெறப்படுகிறது.

**“தானே தரகொளின் அன்றித் தன்பால்**
**மேவிக் கொளக் கொடா இடத்தது மடற்பனை”**

***(நன்.எழுத்து.33)***

ஆசிரியர் என்பவர் மாணாக்கரின் ஆர்வத்திற்கு ஏற்றவாறு பாடம் கூறவேண்டும். மாணாக்கர்கள் ஐயத்துடன் எதையும் கேட்பதற்கு முன்னதாகவே அனைத்தையும் கற்றுத்தர வேண்டும். அவ்வாறின்றி மாணாக்கன் தானாக முன்வந்து கேட்டாலும் கற்றுத்தர மறுத்தல் கூடாது என்று நன்னூலார் அறிவுறுத்துகின்றார். "கற்பித்தல் பயனுடையதாக அமைய வேண்டும். அதன் பயன் கற்போர் கற்று முடிந்த பிறகு என்ன பெறுகிறார்கள் என்பதை ஒட்டியே அமையும்"[24] என்று வாழ்வியல் களஞ்சியம் கூறுகின்றது. அவ்வாறு கற்றலே பயன்தரும் என்று கூறுகின்றது.

**"அரிதிற் பெயக்கொண்டு அப்பொருள் தான்பிறர்க்கு**
**எளிது ஈவில்லது பருத்திக் குண்டிகை"**

***(நன்.எழுத்து.34)***

கற்கும் போதும் விருப்பமின்றி சிறிதுசிறிதாகக் கற்று அவற்றை மாணாக்கர்க்கு உரைக்கும் போதும் சிறிது சிறிதாக உரைக்காமல் விரும்பிக் கற்றவற்றை விருப்பத்தோடு மாணாக்கர்களுக்கு உரைத்திடுக என்று நன்னூல் கூறுகின்றது.

**"பல்வகை உதவி வழிபடு பண்பின்**
**அல்லோர்க்கு அளிக்கும் அதுமுடத் தெங்கு"**

***(நன்.எழுத்து.35)***

மாணாக்கர்கள் ஆசிரியர்களை மதித்துப் பல்வேறு உதவிகளும் பணிவிடைகளும் செய்கின்றனர். ஆதலால் தங்களின் அறிவால் விளைந்த கல்வியைப் பிறருக்குக் கொடுக்காமல் தம் மாணாக்கர்களுக்கே கற்றுக் கொடுப்பீராக என்று நன்னூல் கூறுகின்றது.

இல்லையாயின் கழற்குடமாகவும், மடற்பனையாகவும், பருத்திக் குண்டிகையாகவும், முடத்தெங்காகவும் கருதப்படுவார்கள் என்பது இதன்வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

பொறாமைக் குணத்தாலும், பொருள் ஆசையாலும் ஆசிரியர்கள் தங்கள் மதிப்பை இழந்துள்ளனர். மாணாக்கர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தி, கல்வியின்பால் அச்சத்தை ஏற்படுத்துகின்ற ஆசிரியர்களும் விருப்பமில்லாமல் கற்பிக்கும் ஆசிரியர்களும் ஆசிரியரல்லாதோராவர்.

**பாடம் கூறும்முறை (நன்னூல்)**

தொல்காப்பியர் காலத்தில் பாடம் கூறும் முறைகளாகப் பொழிப்பு, அகலம், நுட்பம், எச்சம் எனப் பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன் என்று பாடம் கூறுகின்றது. ஆழ்ந்த அறிவுடனும், மிக நுட்பமாகவும், தெளிவாகவும் பாடம் கூற வேண்டும். நன்னூலார்

**“காலமும் இடனும் வாழிதின் நோக்கிச்**
**சிறந்துளி இருந்து ............................”**

**(நன்.எழுத்து.36)**

என்று கூறியுள்ளதன் வழி மாணவர்கள் கற்பதற்கு ஏற்ற இடத்தை முதலில் தெரிவுசெய்து கொண்டு அதற்கான சிறந்த இடத்தில் இருந்து பாடம் கூறவேண்டும் என்பது புலப்படுகின்றது. கற்கும் இடம் மாணவர்களுக்கு ஆர்வத்தைத் தூண்டுவதாக இருத்தல் வேண்டும். அமைதியான சூழலே கற்பதற்கு ஏற்ற இடமாக அமையும். “முற்காலத்தில் முனிவர்களால் கல்வி கற்பிக்கப்பெற்ற ஒருவன் மணமான நிலையிலும் பிரிந்து சென்று பிற இடங்களிலும் வல்லார் மாட்டுச் சென்று அறிவை மேம்படுத்திக் கொண்டான்”[25] என இறையனார் களவியல் குறிப்பிடுகின்றது. “ஆசிரியர்களை நாடிச் சென்ற நிலையில் அவர்கள் இல்லமே பள்ளிகளாகத் திகழ்ந்திருக்கும். இல்லம் இல்லையேல் மன்றம் எனும் நிலையில் தான் அக்காலத்தில் பள்ளிகள் இயங்கிவந்தன”[26] எனத் தமிழ் நூல்களில் கல்வி என்ற நூல்அறிவுறுத்துகின்றது.

**“உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து**
**விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து**

**கொள்வோன் கொள்வகை அறிந்து அவன் உளங்கொளக்**

**கோட்டமில் மனத்தில் நூல் கொடுத்தல் என்ப''**

***(நன்.எழுத்து.36)***

*என்று மேலும் கூறுகின்றது. பவணந்தியார் கூறியுள்ள விரையான், வெகுளான், முகமலர்ந்து ஆகியன தொல்காப்பியர் காலத்தில் எடுத்துரைக்கப்படவில்லை. பின்பு வந்த காலகட்டங்களில் ஆசிரியர்கள் கோபம் கொல்லாமல் அன்போடு பாடம் கூறவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இவற்றினின்று தொல்காப்பியர் காலத்தில் மாணாக்கர்களுக்கு வழங்கப்பட்ட தண்டனைகள் களையப்பட வேண்டும் என்பது பவணந்தியாரின் கருத்தாக வெளிப்படுகின்றது.*

*இருப்பினும் தொல்காப்பியர், பவணந்தியார் ஆகிய இருவரது காலத்திலும் மாணாக்கரின் மனநிலையறிந்து பாடம் கூறப்பட்டது என்பது*

**''கொள்வோன் உணர்வகை அறிந்தவன் கொள்வரக்**

**கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்''**

***(நன்.எழுத்து.36)***

*என்ற அடிகளாலும்,*

**''கொள்வோன் கொள்வகை அறிந்து அவன்உளங்கொளக்**

**கோட்டமில் மனத்தின் நூல்கொடுத்தல் என்ப''**

*என்ற அடிகளாலும் அறியப்படுகின்றது. எக்காலத்திலும் மாணாக்கரின் மனநிலை அறிந்து பாடம் கூறவேண்டும் அதுவே சாலச்சிறந்ததாகும்.*

*பாடத்தில் ஆழ்ந்த அறிவும், மிகுந்த நுட்பமும், தெளிவும், ஏற்ற இடமும், விரையாது, வெகுளாது. முகமலர்ச்சி ஆகிய தன்மைகளைப் பெற்று மாணாக்கரின் மனநிலை அறிந்து பாடம் கூறவேண்டும்.*

**மாணாக்கராகத் தகுதியுடையவர்கள்**

*மாணாக்கராவதற்குரிய தகுதிகளில் தொல்காப்பியர் காலம் முதல் பவணந்தியார் காலம் வரை ஒரே மாதிரியான வரையறை பின்பற்றி வந்துள்ளமையை*

**“தன்மகன் ஆசான் மகனே மன்மகன்**
**பொருள்நனி கொடுப்போன் வழிபடுவோனே**
**உரைகோளாளற்கு உரைப்பது நூலே”**

***(நன்.எழுத்து.37)***

*என்ற நூற்பா வழி அறியமுடிகின்றது. இவ்விரு காலகட்டங்களிலும் பொருளை மிகுதியாகக் கொடுத்தால் கற்றுவிடலாம் என்பது பெறப்படுகிறது. தொல்காப்பியர், பவணந்தியார் ஆகிய இருவரும் பொருளை மிகுதியாகக் கொடுப்போனுக்குக் கற்பிக்கலாம் என்கின்றனர். நனி கொடுப்போர் யார்? என்பது வரையறுக்கப்படவில்லை. அவர்களின் ஒழுக்கம் பற்றியும் குறிப்பிடவில்லை. இவற்றின்வழி மாணாக்கராகத் தகுதியற்றவர்களும் கற்றிருக்கக்கூடும் என்பது பெறப்படுகின்றது. பொருளின் மேல் விளைந்த ஆசையே இதற்குக் காரணமாகும்.*

*இப்பொருளாசையின் காரணமாக ஆசிரியராகத் தகுதியற்றவலும் ஆசிரியராய் இருந்துள்ளனர். அதன் விளைவாக ஆசிரியர்கள் தங்களின் நன்மதிப்பை இழந்து சமுதாயத்தில் மாற்றமடைந்துள்ளனர். பொருளைக் கொடுக்கின்றோம் ஏன் பணிந்து கற்கவேண்டும் என்ற நிலைக்கு மாணவர்களும், தள்ளப்பட்டுள்ளனர். மிகுதியான பொருளைப் பெறுகின்றோம் மாணாக்கர்களைத் தண்டனைக் குள்ளாக்கி ஏன் இழக்க வேண்டும் என்பதால் ஆசிரியர்களும் தங்களது மதிப்பை இழந்துள்ளனர்.*

### மாணாக்கர் வகையும் நிலையும்

**“அன்னம் ஆவே மண்ணொடு கிளியே**
**இல்லிக்குடம் ஆடுஎருமை நெய்யரி**
**அன்னர் தலைஇடை கடை மாணாக்கர்”**

***(நன்.எழுத்து.38)***

*என்கிறது நன்னூல். மாணாக்கர்கள் தலை, இடை, கடை என மூவகைப்படுவர். இவற்றின்வழி அக்காலகட்ட மாணவர்களின் வகை பற்றி அறியமுடிகிறது.*

குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்தறியும் தலைமாணாக்கரும், ஆசிரியரின் உழைப்பிற்கு ஏற்ற பயன்தரும் இடை மாணாக்கரும், நிலையான அறிவைப் பெறாத கடைமாணாக்கரும் என்று மூவகை மாணாக்கர் உள்ளனர். இவர்களுக்கு அன்னம், பசு, மண், கிளி, இல்லிக்குடம், ஆடு, எருமை, நெய்யரி என்று உவமைகளும் கூறப்பட்டுள்ளன.

மாணாக்கர்களுக்குக் கூறப்படும் உவமைகளின் வழி அன்றைய மாணாக்கர்கள் ஆசிரியர்களுக்குச் செய்த தீங்குகள் பற்றியும் அறியமுடிகின்றது. எருமை, நெய்யரி, கடை மாணாக்கர்களுக்கு உவமை. நல்ல தெளிந்த நீரைக் கலக்கிப்பருகும் தன்மை பெற்றது எருமை. அதுபோன்று ஆசிரியர் கூறும் நற்கருத்துக்களை விடுத்து தீயனவற்றை மட்டும் கருத்தில் கொண்டு செயல்படும் மாணாக்கர்கள் ஆசிரியர்களுக்குப் பெரும் தொல்லையாவர். இவர்களைப் போன்றே நெய்யரி போன்ற மாணாக்கர்களுமாம் இவர்களால் ஆசிரியர்களுக்குத் தீமையே தவிர, நன்மையில்லை.

இத்தகைய மாணக்கர்களை நல்வழிக்குக் கொண்டுவர முயன்று ஆசிரியர்கள் தங்களின் முகமலர்ச்சியை இழந்துள்ளனர். மாணாக்கர்களின் குறைகளையும் கற்பதற்குரிய மாணாக்கர் பற்றிக் கூறும்போதும் சில மாறுதல்களைக் கொண்டுவர எண்ணி மாணாக்கராகாதவர் என்று சிலரைக் குறிப்பிட்டுள்ளனர். அவை,

**“களிமடி மானி காமி கள்வன்**
**பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்**
**துயில்வோன் மந்தன் தொன்னூற்கு அஞ்சித்**
**தடுமாறு உளத்தன் தறுகணன் பாவி**
**படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே”**

**(நன்.எழுத்து.39)**

இவர்கள் கல்வி கற்கத் தகுதியற்றவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். தகுதியுடைய மாணாக்கர்களை உருவாக்குவது ஆசிரியர்களின் கடமை. மேற்கூறிய களி, மடி, மானி போன்றவர்களால் ஆசிரியர்கள் மட்டுமின்றி இவர்களைச் சேர்ந்தொழுகும் மாணாக்கர்களும் துன்பப்படுவர். கல்வி கற்பதற்குத் தகுதியற்றவர்களில் ஏழையும் சேர்க்கப்பட்டதன் வழி கல்வி கற்கப் பணம் பொருள் இன்றியமையாததாகக் கருதப்பட்டதை அறியமுடிகின்றது. ஆசிரியர்கள் பணத்தின் மீது பற்றுக் கொண்டதற்கு இது சான்றாகும். ஏழைகளுக்குக் கல்வி கற்றுத் தந்தமைக்கு நேரடிச் சான்றுகள் இல்லாததால் மறுக்கப்பட்டதற்குச் சான்றாக இது அமைகின்றது.

**பாடங்கேட்கும் முறை**

ஆசிரியர் தலை, இடை, கடை மாணாக்கர்களுக்குத் தக்கவாறு பாடங்கற்பித்த போதும் மாணவர்களுக்கு ஐயம் ஏற்படுகின்றது. இத்தகைய மாணாக்கர்கள் பாடம் கேட்கக் கீழ்க்கண்ட முறையைக் கையாள வேண்டும்.

**“கோடல் மரபே கூறுங்காலை**
**பொழுதொடு சென்று வழிபடல் முனியான்**
**குணத்தொடு பழகி அவன்குறிப்பிற் சார்ந்து**
**இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்**
**பருகுவன் அன்ன ஆர்வத்தன னாகிச்**
**சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கிச்**
**செவிவாயாக நெஞ்சு களனாகக்**
**கேட்டவை கேட்டவை விடாதுஉளத்து அமைத்துப்**
**போவெனப் போதல் என்மனார் புலவர்”**

**(நன்.எழுத்து.40)**

எனப் பாடங்கூறும் முறை கூறப்பட்டுள்ளது. இதனுள் ‘பொழுதொடு சென்று வழிபடல் முனியான்’ என்று உரைத்ததன் வழி தொல்காப்பியர் காலம் முதல்

பவணந்தியார் காலம் வரை ஆசிரியரை வழிபட்டு மாணாக்கர்கள் கல்வி கற்றனர் என்பது அறியப்படுகின்றது.

**"முன்னும் பின்னும் இரவினும் பகலினும்**
**அகலானாகி அன்பொடு புணர்ந்தாங்கு"**

என்று தொல்காப்பியப் பாயிரம் பாடம் கேட்கும்முறை பற்றிக் கூறுகின்றது. இவ்வடிகளின் மூலம் மாணவர்கள் ஆசிரியரின் இல்லத்திலேயே தங்கி நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் பயின்று வந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. இதனைத் திண்ணைப் பள்ளிக்கூடம் என்றும், குருகுலக் கல்விமுறை என்றும் சுட்டுவர். இந்நிலை படிப்படியாக மாற்றம் பெற்று ஆசிரியர், மாணவர் இருவருக்கும் பொதுவான ஓரிடத்தில் பள்ளிகள் நடைபெற்று வருகின்றன.

ஆசிரியரின் இல்லம் பள்ளியாக இருந்தநிலை பவணந்தியார் காலத்தில் மாற்றம் பெற்றது. தொல்காப்பியம் கூறியுள்ள 'முன்னும் பின்னும் இரவினும் பகலினும் அலானாகி' என்ற அடி நன்னூலில் காணப்படவில்லை. ஆதலால் ஆசிரியின் இல்லத்தில் தங்கிப் பயிலும்முறை வழக்கத்தில் இல்லை என்பதை அறியமுடிகின்றது. இவை தவிர்த்த ஏனை நடைமுறைகள் ஒரே மாதிரியாகப் பின்பற்றப்பட்டுள்ளன. எவ்வாறு பாடம் கேட்டல் வேண்டும், ஆசிரியரிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதில் மாற்றங்கள் காணப்படவில்லை.

பவணந்தியாரின் காலத்தில் ஆசிரியரை வழிபட்டுக் கற்றல் வேண்டும் என்பதில் மாற்றமில்லை என்றபோதும் ஆசிரியரின் இல்லம் பள்ளியாக அல்லாமல் இருவர்க்கும் பொதுவான இடம் பள்ளியாகச் செயல்பட்டது. பாடம் கேட்கும் முறைகளில் எவ்வித மாற்றமும் இல்லை.

**நூலைப் பயிலும் முறை**

மாணவன் ஒரு செய்தித்தாளை வாசிக்கின்றான். வாசித்த மாத்திரத்தில் அவன் அதில் உள்ள செய்திகளை அப்படியே பிறருக்குக் கூறிவிடுகின்றான். ஆனால் அதே மாணவன் தனது பாடத்தைப் பலமுறை பயின்றபோதும் அதனை அவனால் முழுமையாகப் பிறருக்குக் கூறமுடியவில்லை. இது அவன் கொண்ட ஈடுபாட்டின் விளைவாக அமைவதாகும்.

எதைக் கற்றாலும் ஒரு ஈடுபாட்டோடும் விருப்பத்தோடும் கற்றல் வேண்டும். அவ்வாறு கற்றால் தான் 'கற்றல்' எளிமையாக நடைபெறும். இது கற்பதற்கான பொது விதியாகும். நம் முன்னோர் கடினமான பாடங்களையும் கூட எளிமையாகக் கற்பதற்கும் வழிமுறைகளைக் கையாண்டுள்ளனர்.

***"நூல்பயில் இயல்பே நுவலின்வழக் கறிதல்***
***பாடம் போற்றல் கேட்டல் நினைத்தல்***
***ஆசாற் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்***
***அம்மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்***
***வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை***
***கடனாகக் கொளினே மடம்நனி இகக்கும்"***

***(நன்.எழுத்து.41)***

இவற்றில் தொல்காப்பியத்திற்கும் நன்னூலுக்கும் மாற்றுக் கருத்து இல்லை. மாணாக்கர்கள் தாங்கள் ஐயமுற்ற பகுதிகளை ஆசிரியரிடமும் மாணாக்கரிடமும் கேட்டுத் தெரிந்து கொண்டு பயின்றுள்ளனர். கற்கும் மாணவர்கள் நன் மாணாக்கரோடு பழகுதல் வேண்டும். அப்போது தான் அவர்கள் தெளிவாகக் கற்க இயலும் என்பதை

***'ஆசாற் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்***
***அம்மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்'***

என்ற அடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

**“ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்**
**பெருக நூலில் பிழைபாடு இலனே”**

***(நன்.எழுத்து.42)***

**“முக்காற் கேட்பின் முறையறிந்து உரைக்கும்”**

***(நன்.எழுத்து.43)***

**“ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்**
**கால்கூறு அல்லது பற்றிலன் ஆகும்”**

***(நன்.எழுத்து.44)***

என்ற நூற்பாக்களில் மாணாக்கர்கள் தங்களது பாடத்தினை எவ்வாறு பயின்றுள்ளனர் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அன்றைய ஆசிரியர்கள் தங்களது மாணாக்கர்களை எவ்வாறு தயார்ப்படுத்தியுள்ளனர் என்பதையும் அறிய முடிகின்றது.

**“அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்**
**செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்**
**மையறு புலமை மாண்புடைத்து ஆகும்”**

***(நன்.எழுத்து.45)***

என்ற நூற்பாவின் வழி ஒரு மாணவன் ஆசிரியர் கூறும் முழு அறிவையும் பெருவதற்கான வழிகள் என்ன என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஆசிரியருக்கு நிகரான மாணாக்கர்கள் இருந்துள்ளனர்.

**“அறிவிற் பெரிய ஆசிரியர்க்கும்**
**அறிவு புகட்டும் நல்லறவுடையவன் நீ”**

எனத் தேசிகவிநாயகம் பிள்ளை ஆசிரியரை விடச் சிறந்த மாணாக்கர்களும் இருந்துள்ளனர் என்று குறிப்பிடுகின்றார்.

நூலில் ஏற்படும் ஐயங்களை மாணவர்கள் தங்கள் ஆசிரியரிடமும் உடன் பயிலும் மாணாக்கர்களிடமும் தீர்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு தெரிந்து கொண்டால் தான் தெளிவாகக் கற்க இயலும்.

**ஆசிரியரை வழிபடும் முறை**

வழிபாடு இன்றி கல்வி இல்லை என்பது தமிழர் கல்வியின் நிலையாகும். ஆசிரியரை வழிபட்டால் மட்டுமே கற்கமுடியும் என்பது அன்றைய நிலை. ஆசிரியர் மாணவர் உறவில் மாற்றங்கள் நிகழ்ந்தமைக்கு இதுவும் ஒரு முக்கியக் காரணமாகும். “மாணவன் தான் கற்கும் கல்விக்கு ஈடாகக் குருவுக்கு உதவுதல் கடமையாகும்”[26] என கல்வி வரலாறு எனும் நூல் குறிப்பிடுகின்றது.

வழிபாடு முனியான் என்று கூறப்பட்டதன் வழி வழிபாட்டில் குறை இருந்தமை அறியமுடிகின்றது. ஆசிரியரை வழிபடுவதில் மாணவர்கள் வெறுப்புக் காட்டியமையையும் அறியமுடிகின்றது.

***“அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி***
***நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமொடு***
***எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம்***
***அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடே”***

***(நன்.எழுத்து.46)***

ஆசிரியரிடம் மாணவர்கள் நெருங்கிப் பழகாமலும், ஒதுங்கி நிற்றலும் கூடாது என்று கூறுகின்றார். ஆசிரியரின் மனம் வெறுப்புக் கொள்ளாமல் அன்புடன் பழகுதல் வேண்டும் என்று கூறுவதினின்று ஆசிரியரை வழிபடுதலில் விருப்பம் இல்லாத மாணாக்கர்கள் இருந்தமை அறியப்படுகின்றது. ஆசிரியர்கள் திறமையற்றவர்களாகவும், மிகுந்த பொருளாசையும் கொண்டமையும் இந்நிலைக்குக் காரணங்களாகும்.

பொருளைக் கொடுக்கின்றோம்; கல்வி கற்பிக்கின்றார்கள் இதற்கிடையில் ஏன்? அவர்களை வழிபட வேண்டும் என்ற எண்ணம் மாணக்கர்களிடையே நிலவுகின்றது. இதனால் ஆசிரியர்கள் தங்கள் மதிப்பை

இழந்திருப்பர். எப்படியாயினும் ஆசிரியரை நாம் மதித்து நடத்தல் வேண்டும். அப்பொழுதுதான் ஆசிரியர்களும் கல்வியை விருப்பத்துடன் கற்றுக் கொடுக்க முன்வருவர். ஆசிரியரின் முழு அறிவையும் மாணவர்கள் பெறமுடியும். இல்லையேல் மாணாக்கர்கள் கொடுக்கின்ற பணத்தின் அளவிற்கு ஏற்ப கல்வி கற்பித்தல் போதும் என்றாகிவிடும். இதனை மனத்தில் கொண்டு பவணந்தியார் ஆசிரியரை வழிபடுதல் என்பது மாணாக்கர் கடமை என்பதை எடுத்துரைத்துள்ளார்.

ஆசிரியர் வழிபாடு ஆரம்பக் காலகட்டங்களில் வெறுப்பின்றி நிகழ்ந்தப்பட்டது. ஆசிரியர்களின் குறைகளாலும், பணத்தாசையின் காரணமாகவும் வழிபாடு என்பது மறுக்கப்பட்டது. மாணாக்கரின் ஒழுக்கமும் வழிபாடும் ஆசிரியரின் விருப்பத்தைத் தூண்டி கற்பித்தலில் முழுமையாக ஈடுபடச்செய்யும்.

ஆசிரியரின் தகுதியின்மையும் பேராசையும் மாணாக்கர்களின் மனநிலையைப் பாதிக்கின்றன. தகுதியற்ற ஆசிரியர்களை வழிபட மாணாக்கனின் மனநிலை ஏற்றுக் கொள்ளாது. ஆசிரியரின் ஒழுக்கம், அறிவாற்றல் இவற்றின் விளைவாகவே ஆசிரியரின்பால் மாணாக்கனுக்கு ஈடுபாட்டை ஏற்படுத்தும். வழிபாடு கட்டாயத்தின் பால் நிகழாமல் விருப்பத்தின் பால் நிகழ வேண்டும்.

**காலந்தோறும் கல்வியின் நிலைப்பாடு**

சங்க காலத்தில் ஆசிரியர் மாணவர், பற்றிய பதிவுகள் குறைவாக இருப்பினும் அவை அன்றைய நிலை பற்றியும் ஆசிரியர், மாணவர் உறவு பற்றியும், சமுதாய நிகழ்வுகளையும் தெளிவாக எடுத்துரைத்துள்ளன.

> ***"நரைதிமில் களிறாகத், திரையொலி பறையாகக்***
> ***கரைசேர்புள்ளினத்து அம்விறை படயாக***
> ***அரைசுகால் கிளர்ந்தன்ன உரவுநீர்ச் சேர்ப்ப! கேள்;***
> ***கற்பித்தான் நெஞ்சமுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்***

***தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்***
***ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான், மற்றுஅவன்***
***எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதேகாண்;***
***கேளிர்கள் நெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்***
***தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்***
***சூள்வாய்ந்த மனத்தவன் விளையொப்பின் மற்றுஅவன்***
***வாள்வாய் நன்று ஆயினும், அஃது எறியாது விடாதே காண்;***
***ஆங்கு***
***அனைத்து இனிப்பெரும! அதன்நிலை நினைத்துக்காண்***
***நினைஇய வேந்தன் எயிற்புறத்து இறுத்த***
***வினைவரு பருவரல் போலத்***
***துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே''***

***(கலி.149)***

*என்ற இப்பாடலின் பொருளை வெளிப்படையாகப் பார்க்கும் பொழுது வரைவு நீட்டித்த தலைவனுக்குத் தோழியானவள் தலைவனை நோக்கி தலைவனே! சொன்ன சொல் தவறாமல் நடந்துகொள்ள வேண்டும் என்பதை எடுத்துக் கூறுவது போன்று உள்ளது.*

*அவற்றுள் செய்நன்றி மறத்தல் என்பதன் வழி சங்ககால ஆசிரியர்களின் நிலை பற்றி அறியமுடிகின்றது. கற்பித்த ஆசரியன் தன் மாணவனிடம் பொருள் ஒன்றும் பெறாது வருந்துமாறு அம்மாணவன் நன்றியின்றி நடந்து கொண்டால் கல்வி கற்றலில் கடமை தவறியவனாகத் தன் செயலாலேயே நலிவது போல் என்க. அவன் மறுபிறவி எடுப்பினும் அத்தீவினை விடாது என்கிறது.*

***''கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துணணான் விச்சைக்கண்***
***தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்***
***ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான், மற்று அவன்***
***எச்சத்துள் ஆயினும், அஃது எறியாது விடாதேகாண்''***

***(கலித்தொகை.149)***

என்று கூறுகின்றது. அஃதாவது ஆசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்பிப்பதற்கு முன்பு பணம் பெறவில்லை என்பது புலப்படுகின்றது. மாணாக்கர்களால் முடியும் பொழுது பெற்றுக் கொள்ளலாம் என எண்ணினர். மாணாக்கர்களின் கல்வி, பணத்தால் தடைபட்டுவிடக்கூடாது என்று கருதியிருக்க வேண்டும். பின்னர் மாணாக்கரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம் என்ற எண்ணம் இருந்திருக்கக்கூடும்.

இன்று இல்லையென்றாலும் பின்பு ஒருநாள் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் இருந்த ஆசிரியர்களை மாணாக்கர்கள் ஏமாற்றியுள்ளனர். அத்தகைய மாணாக்கர்கள் கல்வி கற்றலில் கடமை தவறியவனாகத் தன் செயலாலேயே கெட்டுவிடுவர் என்று நல்லந்துவனார் குறிப்பிட்டுள்ளார். இந்நிலை மாறவேண்டும் என்பதைத் தம் பாடல்வழிச் சமுதாயத்திற்கு எடுத்துரைத்துள்ளார்.

ஆசிரியரை ஏமாற்றும் மாணவர்கள் இப்பிறவியில் மட்டுமல்லாது மறுபிறவி எடுத்தாலும் அத்தீவினை அவர்களை விடாது என்றும் எடுத்துரைத்துள்ளார். பொருளைப் பெறமுடியாத ஆசிரியரின் மனநிலையும் பொருளின் அவசியமும் எடுத்தாளப்பட்டுள்ளன. ஆசிரியர்களிடமிருந்து கல்வியைப் பெற்ற மாணவர்கள் ஆசிரியர் செய்த நன்றியை மறத்தல் கூடாது என்று நல்லந்துவனார் கூறுகின்றார்.

**“எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு”**[28]

***(குறள்.107)***

**“நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்லது**
**அன்றே மறப்பது நன்று”**[29]

***(குறள்.108)***

**“எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்நன்றி கொன்ற மகற்கு”**[30]

***(குறள்.110)***

என்ற குறள்கள் இதற்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

புறநானூற்றில்

**“உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே**
**பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்**
**சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்**
**ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**
**மூத்தோன் வருக வென்னா தவருள்**
**அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்**
**வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்**
**கீழ்ப்பா லொருவன் கற்பின்**
**மேற்பா லொருவனு மவன்கட் படுமே”**

**(புறம்.183)**

என்ற பாடலின் வழி அன்றைய கல்விநிலையை அறியமுடிகின்றது.

கல்வியின் சிறப்பு எத்தன்மையது என்பதை

**“பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்**
**சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியம்”**

என்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

தாயன்பு என்பது அளவிடற்கரியது. அது தான்பெற்ற பிள்ளைகளிடத்தே வேற்றுமை காட்டாது. தன் பிள்ளைகளில் ஒருவன் கொடியவனாக இருந்தாலும் அவனிடத்திலும் அத்தாயின் அன்பு மாறாது. ஒரு தாயின் வயிற்றில் பிறந்த பல பிள்ளைகள் இருந்த போதிலும் அவர்களுள் கல்வி கற்றவன் அப்பிள்ளைகளில் இளையவன் ஆயினும் அவனை இளையவன் என்று கருதாது மூத்தவனைவிட இளையவனையே அனைத்துப் பொறுப்புகளும் சென்றுசேரும் அரசும் அவனையே விரும்பும். இது ஒரு குடும்பத்தில் கல்வி கற்றவனின் நிலை. இதேபோன்றே சமுதாயம் எவ்வாறு அவர்களைப் போற்றி மதிக்கின்றது என்பதை

**"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்**
**கீழ்ப்பா லொருவன் கற்பின்**
**மேற்பா லொருவனு மவன்கட் படுமே"**

என்ற அடிகளின் வழி அறியமுடிகின்றது.

அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைச் சாதிப்பாகுபாடுகளில் கீழ்க்குலத்தில் பிறந்த ஒருவன் கற்றும் மேற்குலத்தில் பிறந்தவன் கல்லாது இருப்பானாயின் அவன் கீழ்க்குலத்தில் பிறந்தவனை வழிபட்டு நிற்றல் வேண்டும் என்று கல்வியின் சிறப்பைப் பற்றியும் கற்றவர்களின் சிறப்பைப் பற்றியும் தெளிவாக எடுத்துரைக்கின்றது. இக்கருத்தை முன்னிருத்திப் பிற்காலப் புலவர்களும் பாடியுள்ளனர்.

***"தோணி யியக்குவான் தொல்லை வருணத்துக்***
***காணிற் கடைப்பட்டான் என்றிகழார் காணாய்***
***அவன்துணையா ஆறுபோ யற்றேநூல் கற்ற***
***மகன் துணையா நல்ல கொளல்"[31]***

***(நாலடி.136)***

என்று நாலடியாரும்

***"அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்"[32]***

***(வெற்றி.39)***

என்று வெற்றிவேற்கையும்

***"ஒருகுடியிற் கல்லாது மூத்தானைக் கைவிடுபு***
***கற்றானை இளமை பாராட்டும் உலகு"[33]***

***(நான்மணி.65)***

என்று நான்மணிக்கடிகையும் எடுத்துரைத்துள்ளன.

அத்தகைய கல்வியைக் கற்பதற்கு மாணவன் என்ன செய்யவேண்டும் என்பதையும்,

**“உற்றுளி யுதவியு முறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றனன்றே”**

என்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன. ஆசிரியர் உற்றவிடத்து உதவியும் உறுபொருள் கொடுத்தும் வழிபாடு செய்வதில் வெறுப்பில்லாமல் கற்றல் வேண்டும் என்று கூறுகின்றது.

இவற்றுள் ‘உறுபொருள் கொடுத்தும்’ என்பது உற்றுநோக்கத்தக்கது.

***“சால, உறு, தவ, நனி, கூர், கழி, கடி”[34]***

***(நன்.சொல்.456)***

என்பன மிகுதி என்ற பொருளைக் குறிக்கும் உரிச்சொற்களாகும். இவற்றுள் ‘உறு’ என்ற உரிச்சொல்லைச் சேர்த்து ‘உறுபொருள்’ என்று கூறப்பட்டுள்ளது. கற்பதற்குரிய பொருளைக் கொடுத்தால் போதுமானது, ஆயின் ஈண்டு மிகுதியான பொருளைக் கொடுத்துக் கற்றல் வேண்டும் என நன்னூல் குறிப்பிடுகின்றது.

புறநானூற்றுப் பாடலின் ஆசிரியர் ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் கல்வி என்னும் அழியாச் செல்வத்தைக் கற்றுத்தரும் ஆசிரியருக்குப் பொருளை அளந்து கொடுத்தல் கூடாது, மிகுதியாகக் கொடுத்தல் வேண்டும் என்று கூறுகின்றார்.

மேற்கண்ட இருபாடல்களும் பணத்தை, பொருளை முன்னிருத்தியே பாடப்பட்டுள்ளன. இவற்றினின்று ஆசிரியர்கள் தாங்கள் கற்றுக் கொடுத்தமைக்கான கூலியைப் பெறமுடியாமல் தவித்தமையும் இதனைக் களையும் பொருட்டு அதற்கான வழியைச் சமுதாயத்திடமும் எடுத்துக் காட்டியுள்ளமையும் அறியமுடிகின்றது.

இவற்றின்வழி சங்ககாலத்தில் கல்வி கற்பதற்குப் பணம், பொருள் இன்றயமையாதவைகளாக இருந்துள்ளன. மாணாக்கர்கள் ஆசிரியரிடம் பணிந்து அவரை வழிபட்டுக் கற்றமையும், அதனால் ஏற்படும் சிறப்புகளும்

எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. வழிபாட்டின் இன்றியமையாமை பற்றி எடுத்துக் கூறுகின்ற பொழுது வழிபடத் தயக்கம் காட்டியமையும் அறியமுடிகின்றது.

சங்க காலத்தைத் தொடர்ந்து சங்க மருவிய கால நூல்களான பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் ஆசிரியர் மாணாக்கர் பற்றிய பதிவுகளையும் அன்றைய காலகட்டங்களின் கல்விநிலையையும் நம்மால் அறியமுடிகின்றது. திருக்குறளிலுள்ள

**"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர்"**

**(குறள்.395)**

என்ற குறள் கல்வி கற்க மாணாக்கராகச் செல்பவர் யாராக இருப்பினும் அவர்களுக்குப் பணிவு என்பது மிகவும் இன்றியமையாதது என்பதை அறிவுறுத்துகின்றது.

இப்பாடலின் பொருளானது செல்வர்முன் வறியவர் பொருள் கேட்டு இரந்து நிற்கும் போது எவ்வாறு பணிந்து நிற்பரோ அவ்வாறு ஆசிரியர் முன் கல்வி கற்கும் மாணவன் ஆசையால் தாழ்ந்து நின்று அவரை வழிபட்டுக் கற்க வேண்டும். அவ்வாறு கற்காததற்கு முன்வராதவர் கடையராகவே காணப்படுவார்.

"உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்று என்பது பொருளுங் கல்வியும் இருவகைச் செல்வம் என்பதை உணர்த்தும். அதனால் ஆசிரியருக்குப் பணிவிடையும் பொருளுதவியும் செய்வது மாணவனின் கடமையென்பதும் பெறப்படும்"[35] என்று பரிமேலழகர் தம் உரையில் கூறுகின்றார்.

இவற்றினின்று சங்ககாலம் முதல் கி.பி. 6 ஆம் நூற்றாண்டு வரை பணம் கல்வி கற்பதற்கு இன்றியமையாத ஒன்றாக இருந்துள்ளது என்பது புலப்படுகின்றது. திருக்குறளின் காலம் பற்றிப் பலரும்பலவித கருத்துக்களைக்

*கூறுகின்றனர். ''கி.பி. 1 ஆம் நூற்றாண்டு முதல் 3 ஆம் நூற்றாண்டு வரை என இராசமாணிக்கனாரும், கிறித்துவுக்கு 30 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் என்று மறைமலையடிகளும், தொல்காப்பியர் காலத்திற்குப்பின் சங்ககாலத்திற்கு முன் என்று தமிழண்ணலும் குறிப்பிடுகின்றனர்''*[36] *என பாக்யமேரி குறிப்பிட்டுள்ளார். எவ்வாறாயினும் சங்க மருவிய காலம் என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவற்றினின்று கல்வி கற்கப் பொருள் இன்றியமையாத ஒன்றாகச் சங்கம் மருவிய காலத்தில் கருதப்பட்டதை அறியமுடிகின்றது.*

*திருக்குறளைத் தொடர்ந்து நாலடியார் ஆசிரியரின் தன்மைகளைப் பற்றிக் கூறுகின்றது. வாய்க்கு வந்த பாடஞ்சொல்லிச் சாரம் அறிந்தவர்களைப் போல பிறரைச் சேர்க்கிற அயோக்கியமான புலவனை அடக்கமுடைய நற்புலவர்கள் சேரமாட்டார்கள். தீய புலவன் சபையில் இளைத்துப்போக நற்புலவனின் வம்சத்தைத் தூற்றிப் பேசுவான் இல்லையேல் மார்தட்டிக் கொண்டு சண்டைக்கு எழுந்திருப்பான் என்று கூறுகின்றது.*

*இதன்வழி ஆசிரியர்களில் திறமையானவர்களும் திறமையற்றவர் களும் இருந்துள்ளனர் என்பது புலப்படுகின்றது. இவற்றுள் திறமையற்றவர்கள் யார்? என்பதை*

> **''சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்**
> **கற்றாற்றல் வன்மையுந் தாந்தேறார்; கற்ற**
> **செலவுரைக்கும் ஆற்றியார், தோற்ப தறியார்**
> **பலவுரைக்கும் மாந்தர் பலர்''**
>
> ***(நாலடி.313)***

*என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. இப்பாடல் வழி தங்கள் திறமையை வெளிக்காட்ட முடியாதபொழுது சண்டைக்கு எழும் ஆசிரியர்களும், பிறர் கற்றிருக்கும் அறிவாற்றலைக் கற்காதவர்களும், தாம் கற்றவற்றைப் பிறர் எளிதில்*

புரிந்து கொள்ளும்படி அதனை எடுத்துக் கூறமுடியாதவர்களும், வீணான கருத்துக்களைக் கூறுகின்றவர்களும் என்ற நான்கு வகையான திறமையற்ற ஆசிரியர்கள் இருந்துள்ளனர் என்பதைக் காட்டுகின்றது.

இத்தகைய ஆசிரியர்கள் மாணாக்கர்களின் நன்மதிப்பை இழந்துள்ளனர். இதன் விளைவாக வழிபட்டுக் கற்றல் என்ற நிலை மாற்றம் பெறுகிறது. ஒழுக்கமும் பண்பும் நிறைந்தவர்களுக்குப் புகழ் சென்று சேரவேண்டும். ஒழுக்கமற்றவர்களை வழிபட வேண்டிய கட்டாயமில்லை என்ற நிலைக்கு மாற்றம் பெற்றுள்ளனர். பணம் கொடுக்கின்றோம் கற்கிறோம். இவற்றில் வழிபாடு ஏன் செய்ய வேண்டும் என்ற நிலை பணத்தை முன்னிலைப்படுத்தும் பொழுது நிகழ்கின்றது. ஒழுக்கமற்றவர்களை ஏன் வழிபட வேண்டும் என்ற நிலையில் வழிபாடு என்பது மாற்றம் பெற்றுள்ளது.

அதனைத் தொடர்ந்து 18 ஆம் நூற்றாண்டில் தோன்றிய உலகநீதி

**“வார்த்தை சொல்வார் வாய்பார்த்துத் திரியவேண்டாம்**
**மதியாதார் தலைவாசல் மதிக்க வேண்டாம்**
**மூத்தோர்சொல் வார்த்தைகளை மறக்க வேண்டாம்**
**முன்கோபக் காரரோடு இணங்க வேணடாம்**
***வாத்தியார் கூலியைவைத் திருக்க வேண்டாம்***
**வழிபறத்துத் திரிவாரோடு இணங்க வேண்டாம்**
**சேர்த்தபுக மூாளனோடு வள்ளி பங்கன்**
**திருக்கைவே லாயுதனைச் செப்பாய் நெஞ்சே”**
**(உலகநீதி.6)**

என்று வாத்தியார் கூலியை வைத்திருக்கக்கூடாது என எடுத்துரைக்கின்றது. மேலும்,

**“அஞ்சுபேர் கூலியைக்கைக் கொள்ள வேண்டாம்**
**அதுஏதிங் கென்னில்நீ சொல்லக் கேளாய்**

***தஞ்சமுடனே வண்ணான் நாவிதன் கூலி***

***சகலகலை யோதுவித்த வாத்தியார் கூலி***

***வஞ்சமற நஞ்சறுத்த மருத்துவச்சி கூலி***

***மகநோவு தனைத்தீர்த்த மருத்துவன் கூலி***

***இன்சொல்லுடன் இவர்கூலி கெடாத பேரை***

***ஏதேது செய்வானோ ஏமன் தானே''***

***(உலகந்தி.11)***

*என்று மீண்டும் மீண்டும் ஆசிரியருக்கான ஊதியத்தைப் பற்றி எடுத்துரைத்துள்ளது. இவற்றினின்று ஆசிரியருக்கான ஊதியத்தைக் கொடுக்காமல் மாணாக்கர்கள் ஏமாற்றியுள்ளமை காலம் காலமாகத் தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளமையை அறியமுடிகின்றது. ஊதியத்தைப் பெறாமல் ஏமாற்றமடைந்த ஆசிரியர்கள் ஊதியத்தினைப்பெற கடுமையான கட்டுப்பாடுகள் விதித்திருக்கக்கூடும். இத்தகைய கட்டுப்பாடுகள் பெரும்பான்மையான ஆசிரியர்களால் கடைபிடிக்கப்பட்டு நாளடைவில் பணம் முக்கியத்துவம் பெற்றுப் பின்பு பணம் இல்லை என்றால் கல்வி இல்லை என்ற நிலை மாறிவிட்டது.*

*சங்க காலத்திலும் சங்க மருவிய காலத்திலும், பிற்கால நீதி இலக்கியக் காலங்களிலும் கற்பதற்குப் பணம் தர இயலாததால் மாணவனுக்குக் கல்வி மறுக்கப்பட்டுள்ளது என்று கூறுவதற்கு நேரடிச் சான்றுகள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. ஆதலால் கற்பதற்குப் பணம் இல்லாத காரணத்தால் கல்வி மறுக்கப்படவில்லை என்பது தெளிவாகிறது. நன்னூலில் மாணாக்கராகாதவர் பற்றிக் குறிப்பிடும் பொழுது*

***''களிமடி மானி காமி கள்வன்***

***பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்***

***துயில்வோன் மந்தன் தொன்னூற்கு அஞ்சித்***

***தடுமாறு உளத்தன் தறுகண் பாவி***

***படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே''[37]***

*என்று ஏழைக்குக் கல்வி மறுக்கப்பட்டது என்று கூறியிருப்பினும் சங்ககாலம் முதல் 18 ஆம் நூற்றாண்டு வரையிலும் ஆசிரியர்கள் ஊதியத்தை வற்புறுத்திப் பெறாமல் இருந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.*

*ஊதியத்தைப் பெறவேண்டும் என்ற நிலையில் பேராசை கொண்ட சில ஆசிரியர்களால் மாணாக்கர் மனம் மாற்றமடைந்து அவர்களின் உறவுகளில் விரிசல் ஏற்பட்டுள்ளது. இத்தகைய ஒழுக்கமற்ற ஆசிரியர்களால் மாணாக்கர் மற்றும் மக்களின் மனநிலை மாற்றம் பெற்று ஆசிரியர்களின் உன்னதமான, புனிதமான பணி பலரும் இகழ்ந்து பேசுகின்ற அளவிற்கு மாறிவிட்டது.*

*கல்வி இலவசமாக அளிக்கப்பட வேண்டும் என்பது பல அறிஞர்களின் கூற்றாக உள்ளது. இதனை அன்றைய காலகட்டத்தில் கணிமேதாவியார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.*

**“ஊணொடு கூறை யெழுத்தாணி புத்தகம்**
**பேணொடு மெண்ணு மெழுத்திவை–மாணொடு**
**கேட்டெழுதி யோதிவாழ் வார்க்கீய்ந்தா ரிம்மையான்**
**வேட்டேழுத வாழ்வார் விரிந்து”**

***(ஏலாதி.63)***

*இப்பாடல் பாடம் கற்கும் மாணாக்கர்களுக்கு உணவு, உடை, எழுத்தாணி, புத்தகம் ஆகியவற்றை இலவசமாகக் கொடுத்து உதவுங்கள். அவ்வாறு உதவினால் மறுபிறவியில் நீங்கள் மன்னராய் வாழ்வீர்கள் என்று கூறுகின்றார். இதன்வழி கல்வி பணத்தால் தடைபடக்கூடாது என்பது எடுத்தாளப் பட்டுள்ளது. கல்விக்கு ஆகும் செலவுகளை அரசே ஏற்கவேண்டும் என்ற இன்றைய கருத்துக்கு அன்றே விதைபோட்டுள்ளார் கணிமேதாவியார்.*

*விவேகசிந்தாமணி தீய குணம் உடையவர்கள் எத்தகைய நற்செயல்களையும் மேற்கொள்ளமாட்டார்கள். தம்மிடம் உள்ள பொருளை நல்வழியில் நல்லவர்களுக்குச் செலவிடமாட்டார்கள். ஆசிரியன், இறைவன்,*

அந்தணன், தன்னையடுத்து வாழ்பவர்கள் இவர்களுக்குப் பொருளைக் கொடுப்பதில்லை. மாறாக தன்னைச் செருப்பால் அடிக்கும் குணம் கொண்ட தீயவர்களைப் பணிந்து அவர்களுக்குப் பொருளைக் கொடுப்பர் என்று பொருள் கூறுகின்றது. இதனை,

**"பொருட்பாலை விரும்புவார் காமப்பா**
**லிடைமூழ்கிப் புறள்வர் கீர்த்தி**
**யருட்பாலர் மறப்பாலைக் கனவிலுமே**
**விரும்பார்க ளறிவொன் றில்லார்**
**குருபாலர்க் கடவுளர்பால் வேதியர்பால்**
**புரவலர்பால் கொடுக்கக் கோரார்**
**செருப்பாலே யடிப்பவர்க்கு விருப்பாலே**
**கோடி செம்பொன் சேவித் தீவார்"**

**(விவேக.7)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. இப்பாடலில் பொருள் இருந்தும் ஆசிரியர்க்குப் பணம் கொடுக்காமல் அவரை ஏமாற்றியமை புலப்படுகின்றது. சங்ககாலம் தொடங்கி 18 ஆம் நூற்றாண்டு வரை இந்நிலை நீடித்து வந்துள்ளது என்பதற்குச் சான்றாக அமைகின்றது.

**"ஆவின மழைபொழிய வில்லம் வீழ**
**அகத்தடியாள் மெய்நோவ வடிமை சாவ**
**மாவீரம் போகுதென்று விதைகொண் டோட**
**வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ளக்**
**கோவேந்த ருழுதுண்ட கடமை கேட்கக்**
**குருக்கள் வந்து தட்சணைக்குக் குறுக்கே நிற்கப்**
**பாவாணர் கவிபாடிப் பரிசு கேட்கப்**
**பாவிமகன் படுந்துயரம் பார்க்கொ ணாதே"**

**(விவேக.77)**

என்ற பாடல் அன்றைய கல்வி நிலையை உணர்த்துகின்றது. ஒருவனுக்குத் துன்பம் வந்துவட்டால் அவன் செய்யவிருக்கும் நல்வினைகள் யாவும்

*தடைபட்டுவிடும். அவனுக்கு மிகுந்த துன்பத்தைத் தரும். குருக்கள் வந்து தட்சணைக்காக குறுக்கே நிற்றல் என்று கூறுவது. ஆசிரியர் தன் கூலியைப்பெற மாணவர்களின் இல்லம் தேடிச் சென்றுள்ளனர் என்பது புலப்படுகின்றது. மேலும் மாணவர்கள் கற்ற கல்விக்கான கூலியைக் கொடுக்க இயலாமல் தவித்தமையையும் அறியமுடிகின்றது.*

*தீயகுணம் உடையவர்கள் நல்லவர்களுக்குச் செலவிடமாட்டார்கள். ஆசிரியர், இறைவன், அந்தணன் என்று நல்லவர்களை வரிசைப்படுத்தும் பொழுது ஆசிரியரையே முதன்மைப்படுத்தியுள்ளார் நூலாசிரியர். இவற்றின் வழி இறைவனுக்கும் மேலானவன் ஆசிரியன் என்பது புலப்படுகின்றது. வேங்கடசாமி நாட்டார் ''மாதா, பிதா, குரு என்ற மூவரும் தெய்வமாவர்''[38] என்று குறிப்பிடுகின்றார். ஆனால் இந்நூலாசிரியர் இறைவனுக்கும் மேலானவர் ஆசிரியர் என்று குறிப்பிடுகின்றார். இறைவனைவிட ஆசிரியர் உயர்ந்தவர் என்ற மதிப்பு 18 ஆம் நூற்றாண்டுவரை நீடித்துள்ளது.*

*ஆசிரியரை வழிபடுவதன் மூலமே ஒருவன் கல்வியைப் பெறமுடியும். வழிபாட்டிற்கு அஞ்சுபவன், அதனை உதாசிணப்படுத்துபவன் அக்கல்வியைப் பெறமுடியாது என்ற நிலை தொடர்ந்து நீடித்துள்ளது. இந்நிலை அதன்பின்பு மெல்லமெல்ல மாற்றம் பெற்றுள்ளது. ஒருவன் கற்கும் கல்வி தாயன்பையும் மாற்றவல்லது என்பர்.*

*ஆசிரியருக்கான ஊதியத்தைத் தவறாமல் வழங்குதல் வேண்டும். ஆசிரியர்கள் ஊதியத்தைப் பெறமுடியாமல் காலம்தோறும் தவித்துள்ளனர். பணம் பெறாமலும் ஆசிரியர்கள் கற்பித்து வந்துள்ளனர். மாணாக்கர்கள் கல்வி கற்கப் பணம் இன்றியமையாததாக இருந்துள்ளது.*

*ஆசிரியர்களில் திறமையற்றவர்களும் இருந்துள்ளனர் என்பதற்கு நாலடியார் சான்றாக அமைகின்றது. ஆசிரியர், மாணாக்கர் உறவுநிலை*

மாற்றம் பெற பொருளாசை கொண்ட ஆசிரியர்களும், திறமையற்ற ஆசிரியர்களும் காரணமாவர். ஊதியம் பெறவேண்டும் என்ற நிலையில் பேராசை கொண்ட ஆசிரியர்களால் மாணாக்கர் மனம் மாற்றமடைந்து அவர்களின் உறவுகளில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஒழுக்கமற்ற ஆசிரியர்களால் ஆசிரியர்களின் புனிதமான பணி பலரும் இகழ்ந்து பேசுகின்ற நிலைக்கு ஆளாகிவிட்டது.

கல்விக்கு ஆகும் செலவுகளை அரசே ஏற்க வேண்டும் என்ற இன்றைய கோரிக்கைக்குச் சங்கமருவிய காலத்திலே விதை போடப்பட்டுள்ளது. கல்வி இலவசமாக வழங்கப்பட வேண்டும் என்ற கருத்து நிலவியுள்ளது.

**குருவில்லாக் கல்வி**

ஆசிரியரின் துணையில்லாமல் கற்கலாம் என்பது ஏற்புடையதல்ல. ஆசிரியர் இல்லாமல் கற்கலாம் என்ற நிலை ஆசிரியர் மாணவர் உறவின் விரிசலுக்குக் காரணமாகும். இக்கல்விமுறையில் ஆசிரியர் மாணாக்கர் இடையேயான புரிதல் என்பது இருக்காது.

ஆசிரியருக்குப் பணிவிடை செய்தல், பணிந்து நடத்தல், வழிபாடு செய்தல் ஆகியனவற்றிலிருந்து விடுபட எண்ணிய மாணவர்கள் இக்கல்விமுறையைத் தேர்ந்தெடுத்துள்ளனர். கல்வி தரமில்லாமல் போனதற்கு இது ஒரு சான்றாகும். முந்தைய காலகட்டங்களில் ஆசிரியரின் துணையின்றியும் கல்வி கற்றுள்ளனர் என்பதை,

> ***''மூப்பில்லாக் குமரி வாழ்க்கை முனையிலா வரசன்வீரங்***
> ***காப்பிலா விளைந்த பூமி கரையிலா திருந்த வேரி***
> ***கோப்பிலான் கொண்ட கோலம் குருவிலான் கொண்ட ஞானம்***
> ***ஆப்பில்லாச் சகடுபோல பழியுமென் றுரைக்க லாமே''***
>
> ***(விவேக.36)***

என்ற பாடல் மூலம் அறியலாம். இப்பாடல் சரியான ஆசிரியர் இல்லாமல் பெறும் அறிவு அச்சாணி இல்லாத வண்டி போன்றது. அது எப்போது வேண்டுமானாலும் அழிவைத்தரும் என்று கூறுகின்றது.

பணப்போராட்டமும் இக்கல்வி முறைக்குக் காரணமாகும். பணம் கொடுத்துக் கற்க இயலாத மாணாக்கர்கள் தங்கள் ஐயங்களை வேறு ஒருவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு கல்வியைப் பெற்றிருப்பர். இத்தகைய கல்வி அவர்களுக்கு அழிவைத் தரும் என்று கூறுகின்றார். இந்நிலை நீடிக்குமானால் யாரும் கற்பிக்கலாம் என்ற நிலை ஏற்பட்டுக் கல்வித் தரம் சீர்குலைந்துவிடும். இதனை இன்றைய அரசும் பல்கலைக்கழகங்களும் ஏற்கின்றன. இதன் விளைவு தொலைநிலைக் கல்வி இயக்ககங்கள் ஆகும். இதன் விளைவாகக் கல்வித்தரம் சீர்குலைந்து வருகிறது. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் சென்று பயிலும் மாணவர்களைவிட கல்வி நிறுவனங்களுக்குச் செல்லாமல் கற்கின்ற மாணவர்கள் அதிகம். இந்நிலை மாறவேண்டும் என்பது இப்பாடலின் கருத்தாகும்.

இருப்பினும் இந்நிலை அடுத்த நூற்றாண்டு வரையிலும் தொடர்ந்துள்ளது என்பதை 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நீதிநூல் நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. இதனை,

***“நாட்டமின்றி யொளியெப் பயனை ந்குமனையில்***
***பூட்டுபொன் றிறவுகோ லினையலாது புகுமோ***
***வேட்டகத் தரிய நூல்க ளாளவேனு மினதாக்***
***காட்டருட் குரவனின்றி யெவர் காண்பர் பயனே”***

***(நீதிநூல்.அதி.5.பா.3)***

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. இப்பாடல் கண்ணில்லாவிட்டால் ஒளியின் பயனைப் பெறமுடியாது. திறவுகோல் இல்லாவிட்டால் வீட்டில் புகமுடியாது. இதைப் போன்றே வீட்டில் பல்வகை நூல்கள் இருப்பினும்

ஞானாசிரியன் காட்டினாலன்றி ஒருவராலும் தானாக முயன்று நூலின் பயனைக் காணமுடியாது என்கின்றது. ஒருவன் எல்லாச் செயலையும் செய்பவனாக இருத்தல் என்பது இயலாத ஒன்றாகும். ஒவ்வொருவரும் வெவ்வேறு துறைகளில் வல்லவராக இருப்பர். அதுபோன்றே நூலின் பயனை எடுத்துக்கூற வல்லவர்கள் ஆசிரியர்கள்

**"இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல்"**[39]

என்ற குறளுக்கு ஏற்ப, கல்வி கற்பிக்க வேண்டுமாயின் அதற்கு ஆசிரியர் தான் சரியான துணை. அதனை விடுத்து தானே முயன்று கற்கமுடியும் என்று ஒருவன் முனைந்தால் அது அவனுக்கு அழிவைத்தரும்.

கல்வியானது ஆசிரியரின் துணையின்றி சில காலம் நடைபெற்றுள்ளது. இதன் விளைவாகக் கல்வியின் தரம் சீர்குலைந்து தரமற்ற மாணாக்கர்கள் உருவாகியுள்ளனர். இதனால் காலப்போக்கில் ஆசிரியர், மாணவர்களுக்கு இடையேயான உறவுகளில் பெரும்பான்மையான மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஆசிரியரை நம்பியிருந்த மாணாக்கர்கள் அவர்களை எதிர்நோக்கியிராமல் கல்வியைப் பெறமுடியும் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டனர். இவற்றின் விளைவாக வழிபடல், பணிவிடை செய்தல், பணிந்து நடத்தல் ஆகியவற்றில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

### ஆசிரியர்க்கான ஒழுக்கங்கள், பண்புகள்

நல்ல குணநலன்களைப் பெற்றவனால் தான் நல்ல செயல்களைச் செய்யமுடியும். ஆசிரியர் என்பவர் எதிர்கால சமுதாயத்தை உருவாக்குபவர். ஆதலால் ஆசிரியர்க்கு ஒழுக்கம் என்பது இன்றியமையாததாக இருத்தல் வேண்டும். "ஒரு மாணவனின் மனநலம் ஆசிரியரின் மனப்பான்மையினாலும்,

நடத்தையினாலும் நிர்ணயிக்கப்படுகிறது''[40] என கல்வி உளவியல் எனும் நூல் குறிப்பிடுகின்றது. ஆதனால் ஆசிரியர்கள் மிகுந்த ஒழுக்கத்துடன் நடந்துகொள்ள வேண்டும்.

பல்வேறு காலங்களில் தோன்றிய இலக்கியங்கள் ஆசிரியருக்கான ஒழுக்கங்கள் என்னென்ன என்று எடுத்துரைத்துள்ளன. அவற்றுள் திருக்குறள் ஆசிரியர்களுக்கான ஒழுக்கம் என்று வெளிப்படையாகக் கூறாமல் பொதுப்படையாகக் கூறியுள்ளது. சூதினை ஒருவன் மேற்கொள்வானாயின் அவனை நற்பெயர், கல்வி, ஊன், உடை, செல்வம் என்ற ஐந்தும் சேராது என்று கூறுகின்றது. இதனை,

**''உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்**
**அடையாவாம் ஆயம் கொளின்''**

***(குறள்.939)***

என்ற குறளின் மூலம் வள்ளுவர் விளக்குகின்றர். இதன் பொருளை எடுத்துரைக்கும் பரிமேலழகர் சூதாட்டத்திலே காலம் கழிப்பவனுக்குக் கல்வி கற்க நேரமின்மையாலும், ஏற்கனவே கற்றதும் நூறுநாள் ஓதி ஆறு நாள் விடத்தீரும் என்ற பழமொழிக்கு ஏற்ப மறந்து போகும் என்கிறார்.

கற்ற கல்வியை மறக்கச் செய்யும் சூதாட்டத்தை ஆசிரியர்கள் முற்றிலுமாகக் கைவிட வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

ஆசிரியர்கள் சூதாடியாக இருத்தல் கூடாது என்பது வள்ளுவரின் கருத்து. வள்ளுவரின் காலத்தில் ஆசிரியர் சூதாடியுள்ளனர். சூதாட்டத்தைக் கைக்கொண்ட ஆசிரியர்கள் தன்நிலையில் தாழ்ந்து மக்களின் நன்மதிப்பை இழந்துள்ளனர். ஆசிரியர்களின் உன்னத நிலையை அறிந்த வள்ளுவர் அதனைக் களைய முற்பட்டுள்ளார்.

கி.பி.5 ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிறுபஞ்சமூலம் பிரம்மசரியம் காப்பவரே ஆசிரியர் என்று கூறுகின்றது. பிரம்மசரியம் என்பதற்கு "கற்று விரதங்காத்து விவாகமின்றியிருக்கும் நிலை"[41] என்று கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி பொருள் கூறுகின்றது. கற்பிக்கும் ஆசிரியர் திருமணம் புரியாதவராக இருத்தல் வேண்டும் என்கின்றது. இதனை

**"ஆணாக்கம் வேண்டாதான் ஆசான் அவற்கியைந்த**
**மாணாக்கன் அன்பான் வழிபடுவான்–மாணாக்கன்**
**கற்பனைத்து மூன்றுங் கடிந்தான் கடியாதான்**
**நிற்பனைத்தும் நெஞ்சிற்கோர் நோய்"**

**(சிறு.29)**

என்ற பாடல்வழி உணர்த்துகின்றது. ஒழுக்கம் ஆசிரியர், மாணவர் இருவர்க்கும் பொதுவானது. அவ்வாறு இருந்தால் தான் இருவரின் பணியும் சிறக்கும் என்று காரியாசான் எடுத்துரைக்கின்றார். ஆசிரியராகப் பணியாற்ற விரும்புபவர் மணமாகாதவராக இருத்தல் வேண்டும் என்பது காரியாசான் கருத்தாகும்.

ஆசிரியர்க்கு இயைந்த மாணவன் என்பவன் காமம், வெகுளி, மயக்கம் முதலியவற்றை விட்டொழிக்க வேண்டும். இதனைக் கைவிடாத மாணாக்கன் ஆசிரியர்க்கு நோய் போன்றவனாவான்.

காமம், வெகுளி, மயக்கம் என்பன ஒருவனின் ஒழுக்கக் கேட்டிற்கு முதன்மைக் காரணங்களாகும். இதனைக் களையும் முகமாக இப்பாடல் இயற்றப்பட்டுள்ளது. நீதி இலக்கியங்கள் மக்களை நல்வழிப்படுத்த இயற்றப்பட்டவை என்று வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். ச.ஈஸ்வரன் "மக்களை உயர்ந்த இலக்கு நோக்கிச் செலுத்த களப்பிரர் காலத்துப் புலவோர் அறத்தை இலக்கியத்தின் பாடுபொருளாகக் கொண்டனர்"[42] என்று குறிப்பிடுகின்றார். இதனடிப்படையில் நம்முடைய நீதி இலக்கியங்களைத் தமிழர்களின் சட்டப் புத்தகம் என்று கூறலாம். இவ்விலக்கியங்களில்

கூறியுள்ளவற்றைத் தமிழன் கடைபிடிப்பானேயானால் தவறுகள் நடப்பதற்கு வழியிருக்காது.

ஆசிரியர் என்பவர் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதை ஏலாதியின்

***"அறுவர் தந்நூலு மறிந்துணர்வு பற்றி***
***மறுவரவு மாறான நீக்கி–மறுவரவின்***
***மாசா ரியனா மறுதலைச்சொல் மாற்றுதலே***
***ஆசாரி யனது அமைவு"***

***(ஏலாதி.75)***

என்ற பாடல் உணர்த்துகின்றது. சமய நூல்கள் பலவும் உணர்ந்து; தவறு நீக்கியொழுகும் ஒழுக்கமுடையனாய்த் தனக்கு மாறானவர் கூறும் மறுப்புரைகளை மாற்றி நிறுத்தவல்ல ஆற்றலுடையவனே ஆசிரியன் என்று பொருள் கூறுகின்றது. இதன்வழி கி.பி.5 ஆம் நூற்றாண்டில் சமயக்கல்வி இன்றியமையாததாக இருந்துள்ளது என்பது புலப்படுகின்றது. சங்க இலக்கியங்களில் சமயக்கல்வி கற்றுத்தந்ததாகக் குறிப்புகள் இல்லை. சங்க மருவிய காலங்களில் சமயக்கல்வி தோற்றம் பெறுகின்றது. சமயக்கல்வி தோற்றம் பெற்ற போது சமயச் சார்பின்மை கடைபிடிக்கப்பட்டமையை அறியமுடிகின்றது.

ஆசிரியர் எச்சமயத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அவர் சமயச் சார்பின்றி அனைத்துச் சமய நூல்களையும் கற்றுணர்ந்து தவறானவற்றைக் கைவிட்டு நிற்பவராகவும் இருத்தல் வேண்டும். தனக்கு மாறானவர் கருத்துக்களை மாற்றி நிறுத்தவல்ல ஆற்றலுடையவர் ஆசிரியர் என்க என்றமையால் ஆசிரியர் என்பவர் அனைத்தும் கற்று ஒரு பொருளின் உண்மை நிலையை எடுத்துக்கூற வேண்டும் என்று ஏலாதி குறிப்பிடுகின்றது.

ஆசிரியரைச் சார்ந்தவன் மாணவன். அவனது நல்லனவற்றிற்கும் தீயனவற்றிற்கும் ஆசிரியரே பொறுப்பாவார். எந்த ஓர் ஆசிரியரும் மாணவனை தீயவழிக்கு இட்டுச் செல்லக்கூடாது. இருப்பினும் சிலர் தன்னுடைய சுயநலத்திற்காக மாணவனைத் தீயவழிக்கு இட்டுச் சென்றுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. ஆசிரியரின் கட்டுப்பாட்டில் இருக்கும் மாணவன் இதற்கு உடன்பட வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்படுகின்றான். இம்மாதிரியான செயல்கள் இன்றைய சூழல்களில் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றன. ஆசிரியரிடத்திலிருந்து விடுபட்ட காலகட்டங்களில் கூட மாணவன் தன்னை இதுபோன்ற ஆசிரியரின் தவறான நடவடிக்கைகளுக்கு உடன்பட மறுப்புத் தெரிவிக்க இயலவில்லை. அன்றைய காலகட்டங்களில் இது சாத்தியமல்ல. மாணவர்களைத் தீயவழிக்கு இட்டுச் சென்ற ஆசிரியர்களும் சங்கமருவிய காலத்தில் இருந்துள்ளனர் என்பதற்கு,

**“கொடுப்பான் பசைசார்ந்து கொள்வான் குணத்தில்**
**கொடுக்கப் படுதல் அமையின் – அடுத்தடுத்துச்**
**சென்றாங் கடைந்து களைவினை யென்பரே**
**வென்றார் விளங்க விரிந்து”**

**(அறநெறி.184)**

என்ற பாடல் சான்றாக அமைகின்றது. ஆசிரியர் ஐம்புலன்களை அடக்கி மாணவனைத் தீவினைகள் அணுகாதவாறு நல்வழிக்கு இட்டுச் செல்லுதல் வேண்டும் என்று கூறியுள்ளதன் வழி மாணவனை நல்வழிப்படுத்தும் கடமை ஆசிரியருக்கு உண்டு என்பது புலப்படுகின்றது.

ஆசிரியர் மாணவனைத் தன் சுயநலத்திற்காகப் பயன்படுத்தும் பொழுது ஆசிரியர்கள் தங்களின் நன்மதிப்பை இழக்கின்றனர். ஏனெனில் மாணவன் நன்மை, தீமை, நல்லவர், தீயவர் என்பனவற்றை அறியாதவனல்ல. மாணவனும் தனக்காக உண்மையாக உழைப்பவரையும், உண்மையாக

உழைப்பவர் போல் நடிப்பவரையும் அடையாளம் காண்கிறான். இதுபோன்ற செயல்களாலும் ஆசிரியர்கள் தங்களின் நன்மதிப்பை இழந்துள்ளனர். ஆசிரியரின் ஒழுக்கத்தைப் பொருத்தே மாணாக்கனின் ஒழுக்கம் அமைகின்றது. மாணாக்கனின் ஒழுக்கம் சிறப்பாக அமையுமாயின் எதிர்காலச் சமுதாயம் சிறப்பாக அமையும். நல்லாசிரியரே சிறப்பான சமுதாயத்தை உருவாக்க இயலும். அறப்பளீசுர சதகம் நல்லாசிரியர் யார்? என்பதை,

**“மெய்யாக வேபரவி உபதேச மதுபெற**
**விரும்புவோர் சற்சீடராம்**
**வினைவேர் அறும்படி அவர்களுள் திடுவதே**
**மிக்கதே சிகரதுகடன்”[43]      (அறப்பளீசுரசதகம்.பா.6)**

என்ற பாடல் மூலம் விளக்குகின்றது. ஒழுக்கம், அறிவியல் அறிவு, நிறைவான கல்வி அறிவு, நற்குணம், உண்மையான செல்வம், நிறைவான வீரம், தலைமைப் பண்பு, அருட்குணம், யோகப்பயிற்சி, சமயக்கோட்பாடுகளின் அறிவும் பயிற்சியும், மந்திர தந்திர அறிவு, பிற மதங்களை அறிந்து அவற்றின் உண்மையை அறிந்திருத்தல், ஆசையினின்று விலகுதல், எதிலும் பற்றின்றி விலகி நிற்றல் என்னும் குணங்களைப் பெற்றவரே நல்லாசிரியர் என்று கூறுகின்றது.

காலத்திற்கு ஏற்ப, ஆட்சிமுறைக்கு ஏற்ப ஆசிரியர்களுக்கான ஒழுக்கம் என்பது மாற்றம் பெற்று வந்துள்ளது. 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நீதிநூல் ஆசிரியருக்கான ஒழுக்கத்தினை

**“அகவிரு ளகல ஞான விளக்னை யருளி னேற்றிச்**
**சகலமு நல்குங் கேள்வித் தனத்தினை நல்கி யாகிப்**
**பகவன்றன் சொரூபங் காட்டிப் பவமற மிரண்டுங்காட்டிச்**
**சுகநிலை காட்டுந் தியாகத் தோன்றலை மறவாய் நெஞ்சே”**
**(நீதிநூல்.அதி.5.பா.1)**

என்கிறது. கேள்விச் செல்வத்தைத் தருகின்றவர் ஆசிரியர் என்கின்றது. இவற்றின்படி ஆசிரியர் என்பவர் பாடம் தொடர்பான நிறைய கருத்துக்களை

மாணவர்களுக்குத் தருதல் வேண்டும். ஒரு கருத்தை விளக்குவதற்குப் பல உதாரணங்களைக் கூறி விளக்குதல் வேண்டும். 'தியாக உள்ளம் கொண்டவர் ஆசிரியர்' என்பதன்வழி மாணாக்கர்கள் துன்பமுற்ற போது அவர்களுக்கு உதவி செய்து அவர்களது துன்பத்தைப் போக்குபவராக இருத்தல் வேண்டும் என்றும் கூறுகின்றது.

மேலும் 'இறையருளை ஊட்டி' என்பதன்வழி 'இறை நம்பிக்கை' ஆசிரியருக்கான ஒழுக்கமாகும் என்பது புலப்படுகிறது. இறை நம்பிக்கையில் ஒருவன் சிற்றின்பத்தை மறந்து பேரின்பத்தை அடைய முற்படுவான் என்பது இந்நூலாசிரியரின் கருத்தாகும். இறை நம்பிக்கையும் தியாக உள்ளமும் குறையும் பொழுது ஆசிரியர் தன் மதிப்பை இழக்க நேரிடும்.

ஆசிரியர்களின் நன்மதிப்பு குறைவதற்கு வறுமை ஒரு காரணமாக இருந்திருக்கிறது. ஆசிரியர்களில் வறுமையால் பேராசைக் குணம் கொண்டவர்களாகச் சிலர் மாறியுள்ளனர். சங்கமருவிய காலங்களில் திறமையற்றவர்கள் சிலர் ஆசிரியர்களானமையால் தங்கள் மதிப்பை இழந்துள்ளனர். பேராசையும் வளர்ந்து கொண்டே வந்துள்ளது. இந்நிலை காலம் செல்லச் செல்ல நீடித்துக் கொண்டே வருகிறது. இதனைக் களைய எந்நிலையிலும் தளராத பண்புடையவரே ஆசிரியர் என்பதை நீதிநூல்,

> **''தலைகீழுறச் செய்யினுந் தீபம்விண் டன்னை நோக்குங்**
> **கலைதேயினுந் தண்கதிர் வீசுமக் கங்குற் றிங்கள்**
> **விலைமாமணி யைப்பொடி செய்யினு மின்னறாது**
> **நிலைநீங்குவ ரோதுயர் மேவினு நீர்மை யோரே''**
>
> ***(நீதிநூல்.அதி.5.பா.7)***

என்ற பாடல் மூலம் விளக்குகின்றது.

விளக்கு, நிலவு, மாணிக்கக்கல் இவை அனைத்தும் தன்நிலை தாழ்ந்த போதும் தன் இயல்பு நிலையிலிருந்து மாறுவதில்லை. அதுபோன்று

ஆசிரியர் என்போர் வறுமை, பேராசை போன்ற குணங்கள் தலை தூக்கும் போதும் ஆசிரியர் எனும் இயல்பு நிலையிலிருந்து மாறாதிருத்தல் வேண்டும். ஒரு மனிதனின் மாற்றங்களுக்குக் காரணம் வாழ்வில் ஏற்படும் இன்னல்களும் சிக்கல்களும் ஆகும். இதனைக் கண்டு துவண்டுவிடாமல் துணிவோடு எதிர்கொண்டு நிற்றல் வேண்டும். அப்போது தான் சமுதாயம் அவர்களுக்கான மதிப்பினை அளிக்கும். இவ்வாறு இருப்பவரே ஆசிரியர் என்று கூறுகின்றது.

**“கைத்திட்ட மருந்திலக் காரங்கலந்து கூட்டி**
**மத்தித்தருள் பண்டிதர் போனமற நோய்த விர்ப்பா**
**னெத்திக்கினுங் கேட்பவர் காதுள மின்ப மேவித்**
**தித்தித்திட வாரியர் நன்மறை செப்பு வாரே”**

***(நீதிநூல்.அதி.5.பா.8)***

ஆசிரியர் தன் இன்மொழிகளால் பாடம் நடத்த வேண்டும். அதனை விடுத்துக் கடுமொழி கூறுதல் கூடாது என்று கூறுகின்றது. இதனைத் திருக்குறள் “கனியிருப்பக் காய் கவர்ந்தற்று”[44] என்று கூறுகின்றது. கற்கின்ற மாணவர்கள் பலருக்குக் கற்பது என்பது நஞ்சாக இருக்கின்றது. ஆசிரியரை மரியாதையுடனும் விருப்பமுடனும் அணுகுகின்றவர்களைவிட பயத்துடன் அணுகுகின்றவர்கள் அதிகம். அவ்வாறு இருக்கையில் அவர்கள் கற்கும் கல்வியும் விருப்பமின்றி நடைபெறுகிறது. விருப்பமின்றிக் கற்கின்ற மாணவர்களுக்கு அன்போடு கற்பித்தல் வேண்டும். அவ்வாறன்றி அவர்களிடம் கோபம் கொள்வோமாயின் அவன் கற்க முன்வரமாட்டான்.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆசிரியர்களின் கடுஞ்சொல்லாலும், தண்டனைகளாலும் சிலர் கல்வியைப் பாதியில் நிறுத்தியுள்ளனர். இதனால் பெரும்பாலோர் கற்க முன்வருவதில்லை. கல்வி கற்றவரின் எண்ணிக்கை அதிகரிக்க வேண்டுமாயின் ஆசிரியர் அன்போடு பழகி

இன்மொழி கூறிக் கற்பித்தல் வேண்டும். ஆசிரியரின் கோபம் மாணவனின் கல்வியைப் பாதிக்கும் என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

ஆசிரியர் கோபங்கொண்டு சகிப்புத் தன்மை இல்லாத காரணத்தினால் மாணாக்கர்களை அடிக்கின்றார்கள். அதனால் மாணாக்கர்கள் கலங்குகின்றார்கள். அத்தகைய கலக்கத்தை அடைந்ததாக இராமலிங்கம் அடிகளார் குறிப்பிடுகின்றார். இதனை,

> ***“தொகுப்புறு சிறுவர் பயிலுங்கால் பயிற்றும்***
> ***தொழிலிலே வந்த கோபத்தில்***
> ***சகிப்பிலான மயினால் அடித்தனன் அடித்த***
> ***தருணம் நான்கலங்கிய கலக்கம்***
> ***வடுப்புற நினது திருவுளம் அறியும் மற்றுஞ்***
> ***சில் உயிர்களில் கோபம்***
> ***மிகப் புகுந்தடித்துப் பட்ட பாடெல்லாம் மெய்ய***
> ***நீ அறிந்ததோ அன்றோ”***[45]
>
> ***(திருவருட்பா.3145)***

என்ற திருவருட்பாப்பாடல் மூலம் அறியமுடிகின்றது. சினம், பல கடுந்துன்பங்களைக் கொடுக்கும். அதனால் சினத்தை மனத்தகத்துக் கொள்ளக்கூடாதென்கிறார் திருவள்ளுவர். அதனை,

> ***“தன்னைத் தான்காக்கிற் சினங்காக்க காவாக்கால்***
> ***தன்னையே கொல்லும் சினம்”***[46]
>
> ***(குறள்.305)***

என்பதன் வழி விளக்குகின்றார். எனவே ஆசிரியர்கள் சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லியை அன்பெனும் நீரால் அனைத்து மாணாக்கர்களை அன்புடனும் பண்புடனும் அழைத்துச் செல்லுதல் வேண்டும்.

நற்பண்புகளைப் பெற்றவர்கள் ஆசிரியராதல் வேண்டும் என்பதைக் காலம்தோறும் தோன்றிய இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. திருக்குறள்

சூதாட்டத்தைக் கைவிடல் வேண்டும் என்கின்றது. சிறுபஞ்சமூலம் பிரம்மச்சரியம் காத்து நிற்பவர் ஆசிரியர் என்கின்றது. மேலும் காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை ஒழிப்பவர் ஆசிரியராவார் என்றும் கூறியுள்ளது.

சங்கமருவிய காலங்களில் சமயக்கல்வி தோற்றம் பெறுகின்றது. ஆசிரியர் எந்த சமயத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அவர் சமயச் சார்பற்றவராக இருத்தல் வேண்டும். அதுவே சிறந்த ஒழுக்கம் என்று ஏலாதி எடுத்துரைக்கின்றது. மாணவனுக்கு நல்வழி காட்டுதல் ஆசிரியரின் கடமை, அதனை விடுத்துத் தீயவழிக்கு இட்டுச் செல்லுதல் அவ்வாசிரியருக்கு இழிவைத் தரும். அவர் மற்றவர்களால் இகழப்படுவார்.

19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆசிரியரின் ஒழுக்கம் மாணாக்கனுக்கு இறையருளை ஊட்டிச் சிற்றின்பத்தை விடுத்துப் பேரின்பத்தைக் காட்டுதல் வேண்டும் என நீதிநூல் எடுத்துரைக்கின்றது. மேலும் ஆசிரியர் வறுமையிலும் செம்மையாக வாழ்தல் வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றது. மாணாக்கரிடத்திலே அன்போடு பழகுதல் வேண்டும். மாணாக்கர்கள் விருப்பத்தோடு கற்க வேண்டுமாயின் ஆசிரியர் அன்பு செலுத்த வேண்டும் என்கிறது.

நல்லொழுக்கம் வாய்க்கப் பெற்றவரும், ஆழ்ந்த அறிவாற்றலைப் பெற்றவரும் ஆசிரியராகத் தகுதி பெற்றவர் என்பது எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. இதுவே ஆசிரியருக்கான ஒழுக்கமும் பண்பும் ஆகும்.

**ஆசிரியரல்லாதவர்**

ஆசிரியராகாதவர் ஆசிரியர் தொழிலின் பால் பற்றற்றவராக இருத்தல் வேண்டும். அதனால் தான் அத்தொழிலின் மகத்துவம் தெரியாமல் அப்பணியை மேற்கொண்டு வருகின்றனர். ஓர் ஆசிரியர் தவறான பாதையைக் காட்டுவாரெனில் அப்பாதை பல மாணவர்களின் எதிர்காலத்தை

மாற்றிவிடுகிறது. இது இன்றைய காலகட்டங்களில் பெருமளவில் நடைபெற்று வருகிறது. ஆசிரியர்களைக் குறைகூறும் சமுதாயம் அவர்களின் உண்மையான உழைப்பினைப் போற்றுதல் வேண்டும். இவற்றில் அரசுக்குப் பெரும்பங்குண்டு.

ஆசிரியர் பயிற்சிப்பள்ளி, கல்வியில் கல்லூரி இவ்விரண்டிலும் கற்கும் ஆசிரியப் பயிற்சி மாணவர்களில் திறமையானவர்களை மட்டுமே தேர்ந்தெடுத்தல் வேண்டும். அங்கே கையாளப்பட வேண்டிய உத்திகள், உளவியல் கூறுகள் முறையாகக் கையாளப்படுகின்றனவா? என்பதை அரசு கண்காணிக்க வேண்டும். அதுமட்டுமின்றி ஆசிரியப் பணிக்குப் பணியமர்த்தப்படும் வேளையில் திறமையானவர்களை, தகுதியானவர்களை நியமிக்க வேண்டும். இவற்றை முறையாகக் கையாண்டு வந்தால் இத்தகைய ஆசிரியர்கள் அகற்றப்படுவார்கள். இவற்றில் தவறு நடக்கும் பொழுது எத்தனை திட்டங்கள் தீட்டினாலும் எத்தனை தேர்வுகள் நடத்தினாலும் அவையனைத்தும் பயனற்றவையாகும். இதனால் அறிவற்றவர்களும் ஒழுக்க மற்றவர்வளும் ஆசிரியராவர். இத்தகைய ஆசிரியர்கள் முற்காலம் தொட்டே இருந்துவந்துள்ளனர் என்பதை இலக்கியங்கள் எடுத்துரைத்துள்ளன. இவற்றுள் நாலடியார்,

**“நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போற்செறிக்கும்**
**தீப்புலவர் சேரார் செறிவுடையார்: தீப்புலவன்**
**கோட்டியுள் குன்றக் குடிப்பழிக்கும் அல்லாக்கால்**
**தோட்புடைக் கொள்ளா எழும்”**

***(நாலடி.312)***

என்ற பாடல்வழி ஆசிரியரல்லாதோர் பற்றிக் குறிப்பிடுகின்றது.

‘போற்செறிக்குந் தீப்புலவற் சேராற் செறிவுடையார்’ என்று கூறியுள்ளதன்வழி தீயவர்களால் நல்லாசிரியர்களும் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஓரிடத்திலே நல்லாசிரியர்களும்

ஆசிரியரல்லாதோரும் பணிபுரிவார்களேயாயின் அது நல்லாசிரியர்களுக்குப் பெரும் துயரமேயாகும். அதனால் அவர்களில் பணி பாதிக்கும்.

வாய்க்குவந்த பாடத்தைச் சொல்லும் ஆசிரியர்கள் மாணாக்கர் மத்தியிலும் நல்லாசிரியர் மத்தியிலும் அவமானப்படுவர். அவ்வவமானத்தின் விளைவால் அவர்கள் பிற ஆசிரியரைத் துன்புறுத்துவர். இவர்களால் மாணாக்கர்களுக்கும் பயனில்லை எதிர்கால சமுதாயத்திற்கும் பயனில்லை. இத்தகைய ஆசிரியர்களால் ஒட்டுமொத்த ஆசிரியர்களும் பாதிக்கப்படுகின்றனர். இவர்கள் ஆசிரியராகார். இவர்களைப் போல ஆசிரியர் போல் நடிப்பவரும் உலர் என்பதை,

***"புத்தகமே சாலத்தொகுத்தும் பொருடெரியார்***
***உய்த்தக மெல்லா நிறைப்பினும் மற்றவற்றைப்***
***போற்றும் புலவரும் வேறே, பொருடேரிந்து***
***தேற்றும் புலவரும் வேறு"***

***(நாலடி.313)***

என்ற பாடல் உணர்த்துகின்றது. இத்தகைய ஆசிரியர்கள் மற்றவர்களைவிட தான் தான் அறிவுடையோன் என்பதைக் காட்ட; தமது வீட்டில் நிறைய நூல்களை வாங்கி அடுக்கி வைத்திருப்பர். பார்ப்பவர்கள் அவ்வாசிரியரை சிறந்த அறிவுடையவராக எண்ணுவர். அவற்றால் எப்பயனும் கிடையாது. இவர்கள் பெருமைக்காகச் செயல்படுகின்றவர்கள். இவ்வாறு ஆசிரியர் போல் நடிப்பவர்களாலும் எவ்விதப் பயனும் கிடையாது. இவ்வாறு புத்தகங்களை அடுக்கி வைத்து நடிப்பவர்கள் போல் சிற்றறிவை வெளிக்காட்டுபவர்களும் உள்ளனர் என்பதை

***"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்***
***பெற்றதாம் பேதையோர் சூத்திரம் – மற்றதனை***
***நல்லாரிடைப் புக்கு நாணாது சொல்லித்தன்***
***புல்லறிவு காட்டி விடும்"***

***(நாலடி.314)***

என்ற பாடல் உணர்த்துகின்றது. மாணாக்கரின் புகழ்ச்சிக்காகத் தன்னை அறிவுடையவன் என்று காட்டிக்கொள்ள எங்கோ? யாரோ? கூறிய சூத்திரத்தைக் கற்றோர் அவைமுன் வெளிக்காட்டுவோர். இவர்கள் 'குறைகுடம் கூத்தாடும்' என்ற பழமொழிக்கு எடுத்துக்காட்டாவர். இவர்களுக்குத் திருவள்ளுவர்,

***"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை***
***அணியுமாம் தன்னை வியந்து"***[47]

என்று கூறுகின்றார். இவர்கள் பெருமைக்குரியவர்கள் அல்ல, சிறுமைக் குரியவர்கள் என்றும் குறிப்பிடுகின்றார். அன்பில்லாதவர்கள் ஆசிரியர்களாக மாட்டார்கள் என்பதை,

***"திருடன் பொருட்கா வலனாதலுஞ் செல்வழிக்குக்***
***குருடன் குருடன்றனை யேதுணைக் கொள்ளல்போலு***
***மிருடங் குளமாந்தரை வான்கதி யேற்றவென்னா***
***வருடங்கிய நெஞ்சமி லான்குரு வாயவாறே"***

***(நீதிநூல்.அதி.6.ப.1)***

என்ற பாடல் விளக்குகின்றது. இதன்மூலம் ஆசிரியருக்கான அடிப்படைத் தகுதியான அன்பு இன்றியமையாததாகும் என்பது புலப்படுகின்றது. இவை ஆசிரியரல்லோர் எத்தகையோர் என்பதை வெளிக்காட்டுகின்றன. அறநெறிச்சாரம் ஆசிரியரல்லாதோர்க்கான குணநலன்களை

***"பிள்ளைபேய் பித்தன் பிணியாளன் பின்னோக்கி***
***வெள்ளை களிவிடமன் வேட்கையான் – தெள்ளிப்***
***புரைக்கப் பொருளுணர்வா னென்றிவரே நூலை***
***உரைத்தற் குரிமையிலா தார்"***

***(அறநெறி.5)***

என்ற பாடல் மூலம் உணர்த்துகின்றது.

12 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நன்னூலும் இக்கருத்தை வலியுறுத்துகின்றது. சிறுவன், பேய் பிடித்தவன், மனநலம் பாதித்தவன், நோய்வாய்ப்பட்டவன், நினைத்ததை அடையும் திறன் இல்லாதவன், கள்குடிப்பவன், பிறருக்குத் துன்பம் செய்வதையே இயல்பாகக் கொண்டவன், பேராசை கொண்டவன், குற்றமுடைய செயல்களை ஆராய்ந்து செய்து கொண்டிருப்பவன் என்று ஆசிரியல்லாதோர்க்கான நீண்ட பட்டியலைத் தருகின்றது.

ஆசிரியரல்லாதோர் பற்றி மிகுதியாகக் கூறுபவை சங்கமருவிய கால நூல்களாகும். ஆதலால் இக்காலங்களில் ஆசிரியர்களிடம் தவறுகள் பெரும்பான்மை நிகழ்ந்துள்ளமையை அறியமுடிகிறது. முறையாகப் பாடம் கூறாதவரும், நூலின் பொருளை அறியாமல் நூலை மட்டும் தொகுத்து வைப்பவரும், தற்பெருமை காட்டிக் கொள்பவரும், அன்பில்லாதவரும் ஆசிரியரல்லாதோராவர். நற்குணம் வாய்க்கப் பெறாதவரும், மனநலம் பாதித்தவரும், பேராசை கொண்டவரும் ஆசிரியராகார். இவ்வாறாக ஏழாம் ஆம் நூற்றாண்டுத் தொடங்கி 18 ஆம் நூற்றாண்டு வரையிலும் தகுதியில்லாத பலர் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

**பாடம் கூறும்பொழுது ஆசிரியர் கடைபிடிக்க வேண்டியவை**

ஆசிரியரல்லாதோர் பற்றி எடுத்துரைத்த இலக்கியங்கள் காலத்திற்கு ஏற்றவாறு பாடம் கூறும் முறையையும் அவ்வப்போது சுட்டிக்காட்டியுள்ளன. பாடம் கூறுவதற்கான முதற்படி அன்பாகும். அன்போடு பாடம் உரைத்தால் தான் பயன்தரும் என்பதை

**“கால்தூய்மை யில்லாக் கலிமாவுங் காழ்கடிந்து**
**மேல்தூய்மை யில்லாத வெங்களிறுஞ் – சீறிக்**

**கறுவி வெகுண்டுரைப்பான் பள்ளி இம்மூன்றும்**
**குறுகார் அறிவுடை யார்''**

**(திரி.46)**

என்ற பாடல் அறிவுறுத்துகின்றது. ஆசிரியர் பாடம் நடத்தும்முறை வெவ்வேறாக இருப்பினும் அன்போடு உரைத்தல் வேண்டும். அன்போடு உரைத்தால் தான் மாணாக்கர் மனத்தில் பதியும் அதுவே அவர்களுக்கு மிகுந்த பயனைத் தரும்.

மாணாக்கர்களுக்குத் தண்டனை வழங்குதல் கூடாது என்பதற்கு இது எடுத்துக்காட்டாக அமைகின்றது. அன்பால் மட்டுமே கல்வியை வளர்க்க முடியும் என்பதை அறிந்ததன் வாயிலாக அன்றைய சூழலில் அன்பில்லாக் கல்வி வீண் என்பதை நல்லாதனார் எடுத்துரைத்துள்ளார்.

கல்வி கற்பதற்கு நல்லநாள் பார்த்துள்ளனர் என்பதை,

**''அட்டமியும் ஏனை உவாவும் பதினான்கும்**
**அப்பூமி காப்பார்க் குறுகண்ணு மிக்க**
**நிலத்துளக்கு விண்மதிர்ப்பு வாலாமை பார்ப்பார்**
**இலங்குநூல் ஓதாத நாள்''**

**(ஆசாரக்.47)**

என்ற பாடல் எடுத்துக்காட்டுகின்றது. இன்றைய காலகட்டங்களில் தங்கள் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கும் பொழுது நல்லநாள் பார்த்துச் சேர்க்கின்றனர். சரசுவதி பூசையன்று தரையில் நெல்லைப் பரப்பி அதன்மேல் குழந்தையை எழுதச் சொல்லி எழுத்தினைக் கற்றுக் கொடுப்பர். அந்நாளில் எழுதும் குழந்தைக்கு எழுத்து நன்றாக வரும் என்பது நம்பிக்கை. மற்ற மாணவர்களைவிட நன்றாகப் படிப்பர் என்ற நம்பிக்கையும் உண்டு. கல்விக் கடவுளாக சரசுவதியை வணங்குகின்றனர். தட்சிணாமூர்த்தியையும் கல்விக் கடவுளாக வணங்குகின்றனர் என்பதை,

**"கல்லாலின் புடையமர்ந்து நான்மறை யாறங்க முதற்கற்ற கேள்வி**
**வல்லார்கள் நால்வர்க்கும் வாச்சிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய்**
**எல்லா மாயல்லது மாயிருந்ததனை யிருந்தபடி நினைந்து**
**–பவத்தொடக்கை வெல்லாம்"[48]**
***(திரு.வி.புராணம்.பா.13)***

எனப் பரஞ்சோதி முனிவர் புகழ்வதன்வழி அறியமுடிகிறது. குரு என்னும் புனிதநிலையில் தட்சிணாமூர்த்தி வணங்கப் பெற்றுள்ளார் என திருவிளையாடற்புராணம் கூறுகின்றது. இவ்வாறு நல்லநாள் பார்த்துக் கல்விச் சாலைக்குச் சென்றுள்ளனர். விசயதசமி அன்று பள்ளியில் சேர்ப்பது இன்று பெருவழக்காக உள்ளது. இன்னின்ன நாட்கள் கல்வி கற்பிக்கக்கூடாது என்பதும் எடுத்தாளப்பட்டுள்ளது. அமாவாசை, அட்டமி, பிரதோசத்தின் பொழுதும், பூகம்பம் ஏற்பட்ட நாளன்றும், இடியுடன் மேகம் முழங்கும் காலமும் பாடம் கற்பிக்கப்படாத நாள்களாக எடுத்துரைத்துள்ளன. ஆசிரியரின் மனம் தூய்மையில்லாத காலங்களிலும் கற்பித்தல் ஆகாது என்று ஆசாரக்கோவை கூறுகின்றது. கற்பிக்க ஏற்ற நேரமும் நல்ல மனநிலையும் இருத்தல் வேண்டும்.

நல்லநாளும், நல்ல மனநிலையும் பெற்ற பின் ஓர் ஆசிரியர் பாடம் கூறும்பொழுது விரைவாகப் பேசுதல் கூடாது. விரைவாகப் பேசுகின்ற பொழுது மாணவன் ஆசிரியரின் வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியாது. இதனால் பாடத்தின் தொடர்ச்சி விடுபட்டுப்போகும். அதற்கடுத்தபடியாகக் கூறிய கருத்தினை மீண்டும் மீண்டும் கூறுதல் கூடாது. இவ்வாறு கூறுவதால் மாணவர்களுக்கு ஆர்வம் குறைந்துவிடம். மேலும் பொய்யான செய்திகளைக் கூறுதல் கூடாது. நீண்ட சொற்றொடர்களைக்கூறி விளக்குதல் கூடாது. சிறுசிறு சொற்றொடர்களால் மாணாக்கனுக்கு எளிமையாக்கிக் கூறுதல் வேண்டும். அவ்வாறு செய்வதால் எளிதில் புரிந்து கொள்ள முடியும்.

மாணாக்கரின் விருப்பம் அறிந்து கூறவேண்டும். வழுக்கட்டாயமாகக் கற்பித்தல் கூடாது என்றும் ஆசாரக்கோவை குறிப்பிட்டுள்ளது. இதனை,

**"விரைந்துரையார் மேன்மேல் உரையார்பொய் யாய**
**பரந்துரையார் பாரித் துரையார் ஒருங் கெனைத்தும்**
**சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற்**
**சொல்லுக செவ்வி யறிந்து"**

**(ஆசாரக்.76)**

என்ற பாடல் உணர்த்துகின்றது. மேலே கூறப்பட்ட கருத்துக்கள் எத்துறை சார்ந்த ஆசிரியர்களுக்கும் எக்காலத்திற்கும் பொருந்தக் கூடியவைகளாகும். பாடத்தை எவ்வாறு கற்பித்தல் வேண்டும், எவ்வாறு கற்பிக்கக்கூடாது என்பதும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

நீதிநூலும் பாடத்தைச் சிறிது சிறிதாகக் கற்பித்தல் வேண்டும் என்று கூறுவதை,

**"சிறுவாய்க் கலத்துட் டுளியாகச் செலுத்து நீர்போ**
**லறியாச் சிறுவர்கரு முணர்ந்தறி யாத வர்க்கும்**
**வறியார்க்கும் விளங்கிட வேதெளி வாவகுத்து**
**நெறியைத்தெரி விப்பர்நன் னூனெறி நின்றமேலோர்"**

**(நீதிநூல்.அதி.5.பா.9)**

என்ற பாடல் விளக்குகின்றது. அனைவர்க்கும் விளங்கும்படி பாடம் கூறுதல் வேண்டும்.

அன்போடு பாடம் கூறுதல் அடிப்படைத் தகுதியாகும். அவற்றோடு நல்ல நாள் பார்த்துத் தக்க மனநிலையோடு பாடம் கூறவேண்டும். பாடத்தைச் சிறிது சிறிதாகக் கற்பித்தல், அனைத்து மாணவர்களும் புரிந்து கொள்ளும்படி கற்பித்தல் வேண்டும் என்பது அக்காலக் கற்பித்தல் முறையாகும்.

பாடத்தை விரைவாகக் கற்பித்தலும், பொய்யான தகவல்களைக் கூறுவதும், நீண்ட சொற்களைக்கூறி விளக்குவதும் கற்பித்தலுக்குத் தகாத முறைகளாகும்.

பாடம் கூறும் முறைகளைச் சரிவரக் கையாளாமையாலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இதனைக் களைய பாடம் கூறும் முறை எடுத்தாளப்பட்டுள்ளது. இதனால் நன் மாணாக்கர்கள் ஆசிரியரின் பால் வெறுப்புக் கொண்டுள்ளனர்.

**ஆசிரியர்களின் கடமை**

ஆசிரியர்களுக்கென்று தனிக்கடமைகளும் பொறுப்புணர்ச்சியும் இருத்தல் இன்றியமையாதாகும். ஓர் ஆசிரியரின் நடவடிக்கை பல மாணவர்களின் பின்பற்றுதலுக்குக் காரணமாகின்றது. அவரது செயல்பாடுகள், முடிவுகள் மாணாக்கரின் மனநிலையைப் பாதிக்கின்றன. ஆதலால் மற்றவர்களைவிட இவர்களுக்குப் பொறுப்புகள் அதிகம்.

ஆசிரியரைக் கடவுளுக்கு நிகராகவும் கடவுளுக்கு மேலாகவும் வைத்துப் போற்றுவது தமிழர் கல்வி மரபாகும். அதுபோன்று தந்தையாகவும் மதிக்கப்பெறுவர். ஒரு குழந்தையின் எதிர்காலத்திற்குத் தந்தை எந்தளவிற்கு முயற்சி மேற்கொள்கின்றாரோ அதே அளவு முயற்சியை மாணாக்கர்களுக்கு ஆசிரியரும் மேற்கொள்ள வேண்டும்.

பயிற்றுதல் என்ற முறை தந்தையிடமிருந்தே ஆரம்பிக்கின்றது. அதனாலேயே பிற்காலத்தில் ஏட்டுக் கல்வி தனியொரு தொழிலாக வளர்ச்சி பெற்ற நிலையில் ஆசிரியர் தந்தை நிலைக்கு உயர்த்தப்படுகின்றார். தொல்காப்பியர் குறிப்பிடும் ஐவகை நிலப்பாகுபாட்டில் மக்களின் தொழில்களைச் சுட்டும் பொழுது கல்வி தனியே சுட்டப்பெறவில்லை. கல்வி அன்றைய வாழ்க்கைக்கு இன்றியமையாததொரு கூறாக விளங்கவில்லை

எனக் கருதமுடிகிறது. பிற்காலத்தில் கல்வி இன்றியமையாததாகின்றது. அனைத்துக் கலைகளையும் கற்றவர் ஆசிரியராகின்றார். அவர் தந்தையாகவும் மதிக்கப்படுகின்றார்.

தந்தை ஆசிரியராக இருந்து கற்பித்தமையை இலக்கியங்கள் காட்டுகின்றன.

**"......................... மேதக்க**

**தந்தை யெனப்படுவான் தன்னுவாத்தி"**

***(நான்மணி.45)***

என்று நான்மணிக்கடிகை இயம்புகின்றது. தந்தையே ஆசிரியராக இருந்த நிலை காலப்போக்கில் மாற்றம் பெற்றது. வேறொரு ஆசிரியரிடம் கல்வி கற்கும் நிலை ஏற்பட்டது. "தொடக்க காலத்தில் தந்தையே ஆசிரியராகச் செயல்பட்டமையாலும் தமது குலத்தைச் சார்ந்த, வயதில் மூத்தவராக அவர் இருந்தமையினாலும் ஆசிரியர் தந்தையாக மதிக்கப்பெற்றார்"[49] என பழனிவேலு குறிப்பிட்டுள்ளார். இன்றைய சூழலில் தந்தையாகச் செயல்படுவதும் ஆசிரியரின் கடமையாகும். தன் மகனிடம் எவ்விதப் பயனையும் எதிர்பாராது தன் கடமையைச் செய்யும் தந்தைபோல ஆசிரியரும் மாணவர்களிடம் எவ்வித எதிர்பார்ப்பும் இன்றிக் கற்பித்தல் கடமையாகும்.

சிறுபஞ்சமூலம் மாணாக்கனை உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்பவன் ஆசிரியன் என்று கூறுகின்றது. இதனை,

**"உய்ப்போனே ஆசான் உயர்கதிக்கு"**

***(சிறு.34)***

என்ற அடியின் மூலம் அறிய முடிகன்றது. ஆசிரியரை நாடினால் நாம் உயர்கதிக்குச் செல்லலாம் என்று நம்பி வரும் மாணவனை உயர்நிலைக்கு இட்டுச் செல்லல் ஆசிரியரின் கடமையாகும்.

இவ்வாறு உயர்ந்த நிலைக்கு மாணவனை இட்டுச் செல்லும் ஆசிரியர் நல்ல குணநலன்களைப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதை அறநெறிச்சாரம்

**''.................... கொள்வான் குணத்தில்**
**கொடுக்கப் படுதல் அமையின் – அடுத்தடுத்துச்**
**சென்றாங்கடைந்து களைவினை யென்பரே''**
***(அறநெறி.184)***

என்ற பாடல்வழி விளக்கியுள்ளது. நல்லொழுக்கம் உடையவர்களே மாணவர்களை நல்வழிப்படுத்த முடியும். ஆதலால் நல்லொழுக்கமொடு இருத்தலும் ஆசிரியரின் கடமையாகும்.

ஆசிரியர் என்பவர் அழியாப் புகழைப் பெற்றிருக்க வேண்டும். ஆசிரியர் துன்பப்படும் காலங்களிலும் தன்னுடைய பெருந்தன்மையினின்று குன்றாது இருத்தல் வேண்டும். பேராசை கொண்டவர் ஆசிரியர் ஆகார். அவர்களை உலகத்தார் ஏற்றுக்கொள்ளமாட்டார் என்பதை,

**''பாவச் சலதிக்கு ளுறாவகை பாருளோர்க்குக்**
**காவற் றுணையாங் குரவன்குணங் கல்வியின்றி**
**ஆவற்றளைபூண் டவனேயெனி லாருங்கொள்ளர்**
**ஏவத்தெரியான் றிமின்மீதேவ ரேறுவாரே''**
***(நீதிநூல்.அதி.6.பா.3)***

இப்பாடல் சுட்டுகின்றது. பேராசை கொண்ட ஆசிரியர்களை மக்கள் புறக்கணித்துள்ளனர் என்பது புலப்படுகிறது. பேராசை கொள்ளாதிருத்தலும் ஆசிரியரின் கடமையாகும். குற்றமற்றவரே ஆசிரியர் என்பதை,

**''பெருவெம் பிணியாளன் மற்றோர்பிணி பேரும்வண்ணந்**
**திருமந் திரஞ்சொல்வ னென்றோதிடிற் றிண்மையாமோ**

**தருமந் தனைநாட்ட வந்தோன்குறை தானுளானேல்**
**இருமண் டலமீதவன் சொல்லெவ ரேற்பர் மாதோ''**
**(நீதிநூல்.அதி.6.பா2)**

என்ற பாடலின் வழி அறியமுடிகிறது. அவ்வாறு திகழ்கின்றவர்கள் மாணாக்கர்களுக்கு நல்லறிவு புகட்டமுடியும் என்று எடுத்துக்காட்டியுள்ளது. பணத்தின்மீது பற்றற்றவனாக இருத்தல் வேண்டும் என்பதை

**''பொன்னைக் கவரச்செய்யும் வஞ்சனை போலுமாதோ''**

என்ற அடி உணர்த்துகின்றது. மேலும்,

**''.................... அடங்காமதி யீனரார்க்கும்**
**வழிகாட்டிட நாட்டு மரத்தையும் வையமேச**
**விழியற் றவன்கையினில் வைத்த விளக்குநேர்வார்''**
**(நீதிநூல்.அதி.6.பா.4)**

என்ற பாடலின் மூலம் அடக்கமும் ஆசிரியரின் கடமை என்று கூறப்பட்டுள்ளது. அடக்கமில்லா ஆசிரியரை ஒரு மாணவன் துணையாகக் கொள்ளல் குருடன் கையில் விளக்கினைக் கொடுப்பதற்குச் சமமாகும் என்று கூறப்பட்டுள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக உலக வாழ்வில் பற்றற்றவராக இருத்தல் வேண்டும் என்பதை

**''இகத்தின் வாழ்வினில் இச்சைய றாண்டினை**
**சதுத்தி னிற்குரு சாமியென் றேதுதல்''**

என்ற பாடல் உணர்த்துகின்றது.

நல்லறிவு வாய்க்கப் பெற்றிருந்த போதிலும் தந்தையாக நடத்தலும், பொருளாசை கொள்ளாதிருத்தலும், மாணாக்கனை உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லலும், உலக வாழ்வில் பற்றற்று இருத்தலும் ஆசானின் கடமையென்று கூறப்பட்டுள்ளது. இதனைக் கடைபிடிக்காத ஆசிரியர்களைக்

களைதல் வேண்டும் என்பது நூலாசிரியர்களின் கருத்து ஆகும். காலம் காலமாக இத்தகையோரும் பணியாற்றியுள்ளனர் என்பதும் புலப்படுகின்றது.

**ஆசிரியரும் சமூகமதிப்பும்**

எதிர்கால இந்தியாவின் தூண்கள் மாணாக்கர்கள். அத்தகைய மாணாக்கர்களை உருவாக்குகின்ற கடமை ஆசிரியர்களுக்குண்டு. ஆசிரியப் பணியை அறப்பணியாக எண்ணி அதன்படி நடப்பவர்கள் சமுதாயத்தில் மதிக்கப்படுகின்றார்கள். எங்கோ ஓர் ஆசிரியர் தவறு செய்தால் ஒட்டுமொத்த சமுதாயமும் ஆசிரிய சமுதாயத்தைப் பழிக்கின்றது. தங்களுக்கான மதிப்புகளை அளிக்காத நிலையிலும் ஆசிரியர்கள் தங்களின் கடமைகளை நிறைவேற்றுகின்றனர். சில ஆசிரியர்கள் அவர்களுக்கான பொறுப்பினை மறந்துவிடுகின்றனர். ஆசிரியர்கள் எத்தகைய அவமானங்களுக்குள்ளாகியுள்ளனர். அவர்கள் எதை எதை இழந்துள்ளனர் என்பதை இலக்கியங்கள் எடுத்தாண்டுள்ளன. இவைகள் அகற்றப்பட வேண்டியது சமூகத்தின் பொறுப்பாகும்.

ஆசிரியரின் மனம் வருந்தும்படி நடந்துள்ளமையை

**“கற்பித்தான் நெஞ்சமுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்**
**தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்**
**ஒற்கத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதே காண்”**
**(கலி.149)**

என்ற பாடல் அறிவுறுத்துகின்றது. ஒவ்வொரு மனிதனுக்கும் பணம் என்பது இன்றியமையாத ஒன்றாகிவிட்டது. அதற்காக ஒவ்வொரு மனிதனும் ஏதோ ஒரு தொழிலைச் செய்து ஊதியம் ஈட்டுகின்றான். ஒவ்வொருவரும் தன் அறிவாற்றலுக்குத் தகுந்தவாறு அல்லது உழைப்பிற்குத் தகுந்தவாறு வேலை செய்கின்றனர். அவ்வாறே ஆசிரியரும் தனது அறிவாற்றலை மாணாக்கருக்குப்

புகட்டி அதன் மூலம் ஊதியம் பெறுகின்றார். ஆசிரியருக்கான ஊதியம் மாணாக்கர்களிடமிருந்தே பெறப்படுகின்றது. இவ்வாறு மாணாக்கனை நம்பியுள்ள ஆசிரியர்கள் தங்களுக்கான ஊதியத்தைப் பெறமுடியாமல் சிலவேளை தவித்துள்ளனர்.

பிற்காலத்தில் தனியொரு நபரிடம் இருந்த கல்வி அரசின் கட்டுப்பாட்டிற்கு வருகிறது. அவ்வாறு வந்தபின்பு அவர்களுக்கு ஊதியத்தால் சிக்கல் ஏதும் இல்லை என்ற நிலையை அடைகின்றனர்.

ஊதியத்தால் எழும் சிக்கல் இன்றளவும் நீடிக்கின்றது. உடல் உழைப்பின் மூலம் ஊதியம் பெறுகின்றவர்கள்கூட தங்களுக்கென சங்கம் ஒன்றை நிறுவி தங்களுக்கான ஊதியம் இவ்வளவு என்று முடிவு செய்துவிடுகின்றனர்.

அரசு மற்றும் அரசு சார்ந்த கல்வி நிறுவனங்களில் பணியாற்றுகின்ற ஆசிரியர்களின் ஊதியம் தனியார் கல்வி நிறுவனங்களில் பணிபுரியும் ஆசிரியர்களின் ஊதியத்தைவிட கூடுதல். கற்பிக்கும் பாடம் ஒன்று, கற்பித்தலின் நேரமும் ஒன்று, ஆனால் ஊதியத்தில் மட்டும் மாறுபாடுள்ளது.

ஆசிரியர்களில் தரமானவர்கள் தேவை என்று அரசு பல்வேறு தகுதித் தேர்வுகளை நிகழ்த்துகின்றது. அவர்கள் மனநிறைவோடு பணியாற்ற தம் முயற்சியும் மேற்கொள்கிறது. இந்நிலை இவ்வாறு இருக்கத் தனியார் கல்வி நிறுவனங்கள் தங்கள் பங்கிற்கு ஆசிரியர்களின் உழைப்பைச் சுரண்டுகின்றன. ஆரம்பக் கல்வி கற்கும் மாணவர்களுக்குக் கல்விக் கட்டணம் 10,000. கற்பிக்கும் ஆசிரியருக்கு ஊதியம் 1500. இந்நிலை மாறினால் கல்வியின் தரம் உயரும். ஆசிரியர்களும் மனநிறைவுடன் பணியாற்றுவார்கள்.

ஆசிரியர்களைக் குறைகூற முன்வரும் இந்தச் சமூகம் அவர்கள் ஆற்றும் இப்பணியைப் போற்றுதலும் வேண்டும். ஆசிரியர்களைப் போற்றி

நடத்துவதும் சமூகத்தின் கடமையாகும். ஊதியத்தைப் பொருட்படுத்தாது பணியாற்றும் ஆசிரியர்கள் மற்றவர்களைவிட மேலானவர்கள்.

ஆசிரியர்கள் கடவுளுக்கு நிகரானவர்கள். அவர்களைக் கடவுளைப் போலத் தொழுது வணங்க வேண்டும் என்று பெருவாயின் முள்ளியார்

**"அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன்**
**நிகரில் குரவர் இவரிவரைத்**
**தேவரைப்போலத் தொழுதெழுக வென்பதே**
**யாவருங் கண்ட நெறி"**

**(ஆசாரக்.16)**

என்ற பாடல்வழி விளக்குகின்றார். அரசன், ஆசிரியர், தாய் தந்தை, தனக்கு மூத்தவர்கள் ஆகியோர் நிகரில்லாத் தலைவர்கள். இவர்களைக் கடவுளைப் போலத் தொழுது வணங்க வேண்டும். 'இதுவே அனைவரும் கண்டநெறி' என்று கூறியதன் வழி முற்காலத்தில் ஆசிரியர்கள் நன்கு மதிக்கப்பட்டுப் பின்னர் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பது புலப்படுகிறது.

ஆசிரியரைக் கடவுளைப் போலத் தொழுது வணங்க வேண்டும் என நல்லாதனாரும்

**"கணக்காயர் இல்லாத ஊரும் பிணக்கறுக்கு**
**மூத்தோரை இல்லா அவைக்களனும் – பாத்துண்ணும்**
**தன்மையி லாளர் அயலிருப்பும் இம்மூன்றும்**
**நன்மை பயத்த லில"**

**(திரி.10)**

என்ற பாடல் வழி எடுத்துரைத்துள்ளார். 'கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது பழமொழி. நல்லாதனார், ஆசிரியர் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்கிறார். இதன் நோக்கம் ஆசிரியரும் இறைவனும் சமம் என்பதாகும். அதிவீரராம பாண்டியரும் இக்கருத்திற்கு உடன்பட்டு

**“எழுத்தறிவித்தவன் இறைவன்”**

***(வெற்றி.1)***

*என்கின்றார். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பது அவ்வையின் வாக்காகும்.*

*ஆசிரியர் கடவுளுக்கு நிகரானவர். கடவுள் இல்லை என்று கூறுவாரும் உலர். ஆதலால் அரசனும் வணங்கும் மதிப்புடையவர் என்று இலக்கியங்கள் எடுத்துரைத்துள்ளன. அத்தகைய ஆசிரியரிடம் செய்யத்தகாத செயல்கள் என சிலவற்றைப் பெருவாயின் முள்ளியார் குறிப்பிட்டுள்ளார்.*

**“நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்மல்”**

***(ஆசாரக்.73)***

*இவையும் உடைகளைக் களைதல், காதுகளைச் சொறிதல், கைகளை உயர்த்திப் பேசுதல் ஆகியன ஆசிரியர் முன் செய்யத்தகாதவைகளாகும். இதை*

**“உண்டது கேளார் குரவரை மிக்காரைக்**
**கண்டுழிக் கண்டால் மனந்திரியார் புல்லரையும்**
**உண்டது கேளார் விடல்”**

***(ஆசாரக்.86)***

*என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.*

*ஆசிரியரைப் பார்த்து உண்டது யாது? என்று வினவுதல் கூடாது என்கின்றார். மேலும் மனம் மாசுபடாதவர்கள் சான்றோர்களையும், கீழ்மக்களையும் உண்டது யாது? என வினவமாட்டார்கள் என்று பெருவாயின் முள்ளியார் குறிப்பிடுகின்றார். ஒருவரை நோக்கி உண்டாயிற்றா? என்று வினவுவது என்பது நற்பண்பாகும். அதனைவிடுத்து என்ன உண்டீர் என்று வினவுதல் அவர்களை இழிவுபடுத்துவதற்குச் சமம் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.*

அங்கச் சேட்டைகள், ஆடைகளில் உள்ள தூசுகளைக் களைதல், கடுஞ்சொற்களைக் கூறுதல், கைநீட்டிப் பேசுதல், காலால் எழுதுதல், அறிவிலாரை ஆசிரியர் முன் உயர்வாகப் பேசுதல், அமர்ந்து கொண்டு பேசுதல் ஆகியனவும் ஆசிரியர் முன் செய்யத்தகாதவை என்று கூறுகின்றார்.

மேற்கண்ட செயல்கள் நம் நண்பர்களுடனோ அல்லது தமக்கும் கீழ்ப்பிறந்தாரிடம் செய்யத்தக்கன. இதை ஆசிரியரிடம் கடைபிடிப்பது அவரை இழிவுபடுத்துவதற்குச் சமமாகும். இத்தகைய தவறுகள் செய்தல் கூடாது.

ஆசிரியர் மட்டும் மரியாதைக்குரியவரல்லர் அவரது மனைவியும் மதித்துப் போற்றத்தக்கவர் என்று அறநெறிச்சாரம் குறிப்பிடுகின்றது. இதனை,

> ***“மன்ன னுடன்வயிறு மாண்புடைத் தாய்தந்தை***
> ***முன்னி முடிக்கு முனியாசான் – பன்னியங்***
> ***காயகுரவர் இவரென்ப வையத்துத்***
> ***தூய குலஞ்சாதி யார்க்கு”***
>
> ***(அறநெறி.61)***

என்ற பாடல் உணர்த்துகின்றது.

மேற்கூறப்பட்டவைகள் சமுதாயத்தின் கடமைகளாகும். ஆசிரியரை மதிப்பது மாணவர்களுக்கான கடமையில் ஒன்று என விவேகசிந்தாமணி கூறியுள்ளது.

> ***“பிள்ளைதான் வயதில் மூத்தால் பிதாவின் சொற்புத்திகேளான்***
> ***கள்ளினற் குழலாள் மூத்தால் கணவனைக் கருதிபாராள்***
> ***தெள்ளற வித்தை கற்றால் சீடனும் குருவைத் தேடான்***
> ***உள்ளநோய் பிணிகள் தீர்ந்தா லுலகனார்பண் டிதரைத்தேடார்”***
>
> ***(விவேக.2)***

இப்பாடல் மாணவர்கள் தங்கள் கற்றலின் தேவை முடிந்த பின்பு அவர்கள் ஆசிரியரைத் தேடமாட்டார்கள் என்று குறிப்பிடுகின்றது. இது உலக இயல்பு என்றும் கூறுகின்றது. கற்கும் வரை மட்டும் ஆசிரியரை மதிப்பது என்பது சுயநலத்திற்காக என்றாகிவிடும். இவ்வாறு சுயநலமாக நடத்தல் மாணாக்கர்கள் ஆசிரியருக்குச் செய்யும் தீங்காகும். கற்றுமுடித்த பின்பு ஆசிரியருக்கு மதிப்பளித்தல் மாணாக்கரின் கடமையாகும்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஆசிரியரின் புகழ் அளவிடற்கரியது என்று நீதிநூல் குறிப்பிடுகின்றது.

**"ஐம்புலக் கதவடைத்து மனமாவை யறிவாங்**
**கம்பம்வீக் கியஞருஞ் சுகமெனக் கருதியே**
**செம்பொனைத் திரணமா மதித்திடத் தகுதியோர்**
**தம்பெரும் புகழியம் புதற்குந் தரமதோ"**

***(நீதிநூல்.அதி.5.பா.6)***

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புல ஆசையை அகற்றி, துன்பத்தை இன்பமாகக் கருதி, பொன்னைத் துரும்பென மதித்து நடக்கின்ற ஆசிரியரின் மதிப்பு அளவிடற்கரியது. அத்தகைய சான்றோரை இவ்வாறு தான் மதித்தல் வேண்டும் என்று கூறுவது சிறுமையைத் தரும். ஆதலின் அவர்களது புகழைப் போல மதித்துப் போற்ற வேண்டும் என்கின்றது.

ஆசிரியரின் அடிப்படை ஆதாரமான ஊதியத்தைத் தராது இந்தச் சமூகம் ஏமாற்றியுள்ளது. ஆசிரியர்களின் வருத்தத்தையும் துன்பத்தையும் பொருட்படுத்தாது இந்தச் சமூகம் இருந்துள்ளது. ஆசிரியர்களைக் குறைகூற முன்வரும் இந்தச் சமூகம் அவர்கள் ஆற்றும் இப்பணியையும் ஆசிரியரையும் போற்றுதல் வேண்டும். ஊதியத்தைப் பொருட்படுத்தாது பணியாற்றும் ஆசிரியர்கள் மற்றவர்களைவிட மேலானவர்கள்.

ஆசிரியர்கள் கடவுளுக்கு நிகரானவர்கள். கடவுளைத் தொழுது வணங்குதல் போல வணங்குதல் வேண்டும். ஆசிரியர் மட்டும் மரியாதைக்குரியவர் அல்ல அவரது மனைவியும் மதிக்கத்தக்கவராவர். ஆசிரியரின் முன்பு அடக்கமாக நடந்துகொள்ள வேண்டும்.

கல்வி கற்று முடித்த பின்பு மாணவர்கள் ஆசிரியரை மறந்துவிடுதல் கூடாது. ஆசிரியரின் புகழ் அளவிடற்கரியது.

உண்மையாக உழைத்து மாணாக்கர்களை நல்வழிப்படுத்திய ஆசிரியர்களைச் சில ஆசிரியர்கள் செய்த தவறினால் சமுதாயம் ஒட்டுமொத்த ஆசிரியரையும் பழித்துள்ளது. இதனால் வெறுப்புக் கொண்ட சில ஆசிரியர்களாலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

**மாணாக்கர்களின் கடமை, ஒழுக்கம், பண்பு**

ஆசிரியர், மாணவர்கள் உறவுகளின் மாற்றங்களுக்கு மாணவர்களும் முக்கியக் காரணமாகின்றனர். ஒழுக்கக் கேடானவர்களும், தங்களின் கடமைகளைச் சரிவரச் செய்ய இயலாதவர்களும் ஆசிரியர்களின் கவனத்தைச் சிதைக்கின்றனர். இதனால் ஆசிரியர்களின் ஈடுபாடு குறைந்து மனத்தடுமாற்றங்களால் தவறுகள் நிகழ்கின்றன.

> **''நாவன்றோ நட்பறுக்குந் தேற்றமில் பேதை**
> **விடுமன்றோ வீங்கிப் பிணிப்பின் அவாஅப்**
> **படுமன்றோ பன்னூல் வலையிற் கெடுமன்றோ**
> **மாறுள் நிறுக்குந் துணிபு''**
>
> **(நான்மணி.81)**

இப்பாடல் மாணாக்கர்களின் பன்னூல் அறிவால் தீய ஆசைகள் நீங்கும் என்றும், பகைமைக்கட் துணிவு இருத்தல் கூடாது என்றும் கூறுகின்றது. தீய ஆசையும், பகையும் மாணாக்கரிடத்தில் இருக்கும் பொழுது அவர்கள் ஒழுக்கமற்றவர்களாகின்றனர். ஒழுக்கமற்றவர்களைத் திருத்த முயலும் ஆசிரியர்

சிலர் தங்களின் பொறுமைக் குணத்தை இழந்து கோபம் கொண்டுள்ளனர். தண்டனைக்குத் திருந்தாத மாணவர்கள் ஆசிரியரின் கட்டளைகளுக்கு இணங்காமல் அவர்களை அவமதித்திருக்க வேண்டும். இவற்றால் ஆசிரிய வழிபாடு சற்றுக் குறைந்திருக்க வேண்டும்.

இதனைக் களைய முற்பட எண்ணிய சங்க மருவிய கால ஆசிரியர்கள் மாணாக்கர்களின் கடமை, பண்பு, ஒழுக்கம் ஆகியவற்றை எடுத்துரைத்துள்ளனர். கற்கும் மாணவர்கள் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதைக் காரியாசான்

**"நெய்தன் முகிழ்த்துணை யாங்குடுமி நேர்மயிரும்**
**உய்தல் ஒருதிங்கள் நாளாகும் – செய்தல்**
**நுணங்குநூல் ஓதுதல் கேட்டல்மா ணாக்கர்**
**வணங்கி வலங்கொண்டு வந்து"**

***(சிறு.30)***

என்ற பாடல் வழி அறிவுறுத்துகின்றார். பெருவாயன் முள்ளியார்

***"காலவாய்த் தொழுவு சமய மெழுந்திருப்பு***
***ஆசார மென்பர் குரவர்க் கிவையிவை***
***சாரத்தார் சொல்லிய மூன்று"***

***(ஆசாரக்.62)***

என்று மாணாக்கனின் கடமைகளை அறிவுறுத்துகின்றார்.

ஆசிரியர் முன் அடங்கியிருத்தல், பாடம் கூறாதபோது ஏதும் செய்யாதிருத்தல், பாடம் கூறும்போது கவனத்துடன் கேட்டல் ஆகியனவும் மாணாக்கரின் ஒழுக்கம் என்று கூறுகின்றார். இவற்றை மாணாக்கர்கள் கைவிடும் பொழுது ஆசிரியரின் கவனம் சிதைந்து மாணாக்கர்கள் தண்டிக்கப் படுகிறார்கள். இதனையே இன்றைய ஆசிரியர்களும் மாணாக்கர்களுக்கு அறிவுறுத்துகின்றனர். இந்த நடவடிக்கைகள் கி.பி.5 ஆம் நூற்றாண்டிலேயே கடைபிடிக்கப்பட்டு வந்துள்ளமையை அறியமுடிகின்றது. இன்றைய ஆசிரியர் மாணாக்கரிடையே சற்று விலகியிருத்தல் நல்லது என்று கூறுகின்றனர்.

ஆசிரியரைப் பெயரிட்டு அழைக்காமையும் பாடத்தை இகழாமல் கற்றலும் வேண்டும் என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஆசை, பகை ஆகியவற்றைத் துறத்தலும், ஆசிரியரை வலப்புறம் சுற்றிவந்து வணங்குதலும், காலில் விழுந்து வணங்குதலும், ஆசிரியரின் சொற்கேட்டு நடத்தலும், கவனமாகக் கற்றலும், வெறுப்பின்றிக் கற்றலும், கற்ற கல்விக்கு ஏற்றபடி நடத்தலும் மாணாக்கரின் கடமைகளாகும். இத்தகைய கடமைகளின்று தவறிய மாணாக்கர்களை நல்வழிப்படுத்த இவை எடுத்தாளப்பட்டுள்ளன. ஆசிரியர், மாணவர் உறவுகளின் விரிசலக்கு இதுவும் காரணங்களாகும்.

**ஆசிரியரை மாணாக்கர்கள் வழிபடுதல்**

ஆசிரியரின் காலில் விழுந்து வணங்குதலும் ஆசிரியரை வலப்புறமாகச் சுற்றிவந்து வணங்குதலும் முன்னர்ச் சுட்டப்பட்டுள்ளன.

**"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர்"**

***(குறள்.395)***

என்று திருக்குறளும்,

**"கற்றல் வேண்டுவான் வழிபாடு தண்டான்"**

என முதுமொழிக் காஞ்சியும் வழிபாட்டின் விளைவே கல்வி என்று கூறுகின்றன.

பிராமணக் கல்விமுறை தமிழகத்தில் புகுந்து பல மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளன. அவற்றில் ஒன்றுதான் சாதிப்பாகுபாடு, சாதிப்பாகுபாடு தலைவிரித்தாடுகின்ற காலத்தில் கற்றவரை மதித்தல் வேண்டும் ஆசிரியரை வழிபடல் வேண்டும் என்று எத்தனை புலவர்கள் எடுத்துரைத்த போதிலும் அவை முழுமையாக மாறிட வாய்ப்பில்லை. இக்காரணங்களாலும் ஆசிரியரின் மதிப்பு இறங்கி வழிபட்டுக்கற்றல் என்ற நிலை மாற்றம் பெறுகிறது.

**மாணாக்கரல்லாதோர்**

மாணாக்கரல்லாதோர் காலம் தோறும் இருந்து வந்துள்ளனர். இவர்களின் செயல்பாடுகள் ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் பெரும் பாதிப்பாகும். கற்பதற்காக வந்த மாணவர்கள் அதனைவிடுத்துத் தீய வழிகளில் இறங்கியுள்ளனர். இதனை,

> **''விளக்கு விலைகொடுத்துக் கோடல் விளக்குத்**
> **துளக்கம்இன்று என்றனைத்தும் தூக்கி விளக்கு**
> **மருள்படுவதாயின் மலைநாட என்னை**
> **பொருள் கொடுத்துக் கொள்ளார் இருள்''**
>
> ***(பழமொழி.4)***

என்ற பாடல் விளக்குகின்றது. கற்க வந்த மாணவர்கள் அதனைச் சிறப்பாகச் செய்யவில்லை என்பது புலப்படுகிறது. மாணாக்கரிடமிருந்து பெரும் பணம் பெற்று அவர்களுக்குக் கற்பிக்க வேண்டும் என எண்ணிய ஆசிரியர்கள் அதற்காக மாணவர்களுடன் போராடியுள்ளனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றது. இதனையே நாலடியாரும்

> **''செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்**
> **வழும்பறுக் கல்லாதாந் தேரை; வழுப்பில்சீர்**
> **நூல்கற்றக் கண்ணும் நுணக்கமொன் றில்லாதார்**
> **தேர்கிற்கும் பெற்றி அரிது''**
>
> ***(நாலடி.352)***

எனக் கல்வியின் பயனை அறியாத மாணவர்கள் ஆசிரியர்கள் இருந்துள்ளனர் என்று கூறுகின்றது. இவர்களைத் திருவள்ளுவர்,

> **''இணரூழ்ந்தும் நாறாமல ரனையற் கற்ற(து)**
> **உணர விரித்துரையா தார்''[50]**

என்கிறார். இக்கருத்தையே திரிகடுகமும், நீதிநெறி விளக்கமும் எடுத்துரைக்கின்றன.

***“நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா***
***வெண்மொழி வேண்டினும் செல்லாமை – நன்மொழியைச்***
***சிற்றின மல்லார்கண் சொல்லலும் இம்மூன்றும்***
***கற்றறிந்தார் பூண்ட கடன்”[51]***

***(திரி.32)***

***“எத்துணைய வாயினும் கல்வி இடமறிந்து***
***உய்த்துணர் வில்லெனின் என்னாகும் – உய்த்துணர்ந்தும்***
***சொல்வன்மை இன்றெனின் என்னாம் அஃதுண்டேல்***
***பொன்மலர் நாற்ற முடைத்து”[52]***

***(நீதிநெறி விளக்கம்.5)***

*அடித்தும் திருந்தாத மாணாக்கர்கள் இருந்துள்ளனர் என்பதை*

***“பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும்***
***வாலிதாம் பக்கம் இருந்தைக கிருந்தன்று!***
***கோலால்கடாஅய்க் குறினும் புகலொல்லா***
***நோலா உடம்பிற் கறிவு”***

***(நாலடி.258)***

*என்ற பாடல் உணர்த்துகின்றது. ஆசிரியரின் சொற் கேளாதவன் என்பதை,*

***“குருமொழி கொள்ளச் சீடன்”***

***(விவேக.1)***

*என்ற பாடல் மூலம் அறியலாம். இவ்வாறாகக் கற்றும் அறிவில்லாதவர்களாலும், கற்ற கல்விக்கு மாறாக நடப்பவர்களாலும், ஆசிரியரின் சொற்கேளாதவர்களாலும், தன் குருவிற்குப் பங்கம் விளைவிப்பவர்களாலும் ஆசிரியர்கள் மதிப்புக் குறைந்துள்ளது. இவர்களைத் திருத்த எண்ணியவர்கள் கோபமுற்றுள்ளனர். ஆசிரியரல்லாதோர் இவர்களைத் தன் பக்கம் சேர்த்துக் கொண்டு பொருள் கிடைத்தால் போதும் என்று இருந்திருக்கின்றனர். இதன் விளைவு ஒட்டுமொத்த ஆசிரியரையும் குறை கூறுகின்ற நிலை சமூகத்தில் ஏற்பட்டுள்ளது.*

## தொகுப்புரை

* தமிழ்க் கல்வி வரலாற்றில் பிராமணக் கல்விமுறை வழக்கில் இருந்ததாக எந்த ஓர் இலக்கியமும் எடுத்துரைக்கவில்லை. குருகுலக் கல்வி என்பது தமிழர்களின் திண்ணைப் பள்ளிக்கூட அமைப்பாகும். பிராமணர்களின் வருகைக்குப்பின் அவர்களது ஆதிக்கம் மேலோங்கிய நிலையில் திண்ணைப் பள்ளிக்கூடங்களும் 'குருகுலம்' என்று அழைக்கப்பட்டன.

* ஆசிரியரின் இல்லங்கள் பள்ளிகளாக இருந்தன. மாணவர்கள் அவர்களின் இல்லத்திலே தங்கிப் பயின்றனர். அங்கே ஆசிரியர் தந்தையாக மதிக்கப்பெற்றார். ஆசிரியரைக் குரு என்று அழைப்பது பிற்கால மரபு ஆகும்.

* பழைய கல்விமுறையில் ஆசிரியர், மாணவர் உறவு முறைப்படி வரையறுக்கப்பட்டிருந்தது. திண்ணைப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர், மாணவர் உறவு குளிர் காய்பவன் நெருப்பினை எவ்வாறு அணுகித் தனது குளிரைப் போக்கிக் கொள்வானோ! அவ்வாறு இருந்தது.

* தொல்காப்பியர் காலத்தில் நன்கு கட்டமைக்கப்பட்டிருந்த ஆசிரியர் மாணவர் உறவு உரையாசிரியர் காலகட்டங்களில் மாற்றம் பெறத் தொடங்கியுள்ளது.

* ஆசிரியர்கள் ஒழுக்கமின்மை, பேராசை, திறமையின்மை ஆகியவற்றால் தங்களின் மதிப்பை இழந்துள்ளனர். பொறாமைக் குணம் கொண்டவர்களும் பொருளாசையுடையோரும் ஆசிரியர்களாக இருந்துள்ளனர். ஆசிரியர்களைவிட மாணவர்கள் திறமையானவர்களாக இருந்துள்ளனர்.

✳ மாணாக்கரல்லாதோரும் மாணாக்கர்களாக இருந்துள்ளனர். அன்றைய மாணாக்கர்கள் சிலர் ஆசிரியர்களை இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்துள்ளனர். மாணாக்கர்களின் குற்றங்களைப் பொறுக்காத சில ஆசிரியர்கள் தங்கள் பொறுமையை இழந்துள்ளனர்.

✳ கற்பதற்குப் பொருள் இன்றியமையததாக இருந்துள்ளது. பொருளைக் கொடுக்கின்றோம் ஏன்? பணிந்து கற்க வேண்டும் என்ற நிலைக்கு மாணவர்கள் தள்ளப்பட்டுள்ளனர். மாணாக்கரிடமிருந்து மிகுதியான பொருளைப் பெறுகின்றோம். அவர்களைத் தண்டனைக்குள்ளாக்கி அதனை ஏன் இழக்க வேண்டும் என்பதற்காகச் சில ஆசிரியர்கள் தங்களது மதிப்பை இழந்துள்ளனர்.

✳ கற்பதற்குத் தகுதியற்றவர்களாகக் குறிப்பிட்டுள்ளவர்களில் ஏழ்மையும் சேர்க்கப்பட்டுள்ளது. இதன்வழி கல்வி கற்பதற்குப் பொருள் இன்றியமையாததாகக் கருதப்பட்டதை அறியமுடிகின்றது. ஆசிரியர்கள் பணத்தின் மீது பற்றுக் கொண்டதற்கு இது சான்றாக அமைகின்றது. ஏழைகளுக்குக் கல்வி கற்றுத்தந்தமைக்கான சான்று சங்ககாலம் முதல் நன்னூல் காலம் வரை இல்லை.

✳ பவணந்தியார் காலத்தில் ஆசிரியரை வழிபட்டுக் கற்றல் வேண்டும் என்பதும் ஆசிரியரின் இல்லம் பள்ளியாக அல்லாமல் இருவர்க்கும் பொதுவான இடமாக இருந்ததும் காணப்படுகிறது.

✳ வழிபாடு என்பது ஆரம்பக் காலகட்டங்களில் வெறுப்பின்றி நிகழ்த்தப்பட்டது. ஆசிரியர்களின் குறைகளாலும், பணத்தாசை காரணமாகவும் வழிபாடு என்பது மறுக்கப்பட்டுள்ளது.

✳ ஆசிரியரின் பணத்தாசைக்குக் காரணம் அவர்கள் ஊதியத்தை இழந்தமையாகும். தங்களுக்கான ஊதியத்தைப் பெறாமல்

தவித்துள்ளனர் என்பதைக் கலித்தொகையும், உலகநீதியும் எடுத்துக் காட்டுகின்றது.

✳ கல்விக்கு ஆகும் செலவுகளை அரசே ஏற்கவேண்டும் என்ற இன்றைய கோரிக்கைக்குச் சங்மருவிய காலத்தில் தோன்றிய ஏலாதி விதை போட்டுள்ளது. கல்வி இலவசமாக வழங்க வேண்டும் என்று முன்னமே கூறப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

✳ ஆசிரியர், மாணவர் உறவுகளில் மாற்றங்கள் நிகழ்ந்ததற்கு ஆசிரியர் இல்லாமல் கற்றதும் ஒரு காரணமாகும். கல்வியானது ஆசிரியரின் துணையின்றி பல காலம் நடைபெற்றுள்ளது. இதன் விளைவாகக் கல்வியின் தரம் சீர்குலைந்து தரமற்ற மாணாக்கர்கள் உருவாகியுள்ளனர். இதனால் காலப்போக்கில் ஆசிரியர் மாணவர்களுக்கு இடையேயான உறவுகளில் பெரும்பான்மையான மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஆசிரியரை நம்பியிருந்த மாணவர்கள் அவர்களை எதிர்நோக்கியிராமல் கல்வியைப் பெறமுடியும் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டனர். இவற்றின் விளைவாக வழிபடல், பணிவிடை செய்தல், பணிந்து நடத்தல் ஆகியவற்றில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

✳ நல்லொழுக்கமில்லாத ஆசிரியர்களும் ஆசிரியர் மாணவர் உறவுகளின் மாற்றங்களுக்குக் காரணமாக இருந்துள்ளனர். நற்பண்புகளைப் பெற்றவர்கள் ஆசிரியராதல் வேண்டும் என்பதைக் காலந்தோறும் தோன்றிய இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. ஆசிரியர் சூதாட்டத்தைக் கைவிடல் வேண்டும் எனத் திருக்குறள் கூறுகின்றது. சிறுபஞ்சமூலம் பிரம்மச்சரியம் காத்து நிற்பவரும் காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை ஒழிப்பவரும் ஆசிரியராவர் என்று கூறியுள்ளது.

✳ சங்கமருவிய காலங்களில் சமயக்கல்வி தோற்றம் பெறுகின்றது. ஆசிரியர் எச்சமயத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அவர் சமயச்சார்பற்றவராக இருத்தல் வேண்டும் என்று பெறப்படுகிறது.

✳ ஆசிரியரல்லாதோர் பற்றிச் சங்கமருவிய கால நூல்கள் மிகுதியும் வலியுறுத்துகின்றன. இதன்வழி இக்காலங்களில் ஆசிரியரின் தவறுகள் பெரும்பான்மை நிகழ்ந்துள்ளமை அறியப்படுகின்றது. முறையாகப் பாடம் கூறாதவரும் நூலின் பொருளை அறியாமல் நூலை மட்டும் தொகுத்து வைப்பவரும், அன்பில்லாதவரும் ஆசிரியரல்லாதோராவர். மேலும் நற்குணம் வாய்க்கப் பெறாதவரும், மனநலம் பாதித்தவரும், பேராசை கொண்டவரும் ஆசிரியராகார் என்று குறிப்பிட்டுள்ளனர். ஏழாம் ஆம் நூற்றாண்டு தொடங்கி 18 ஆம் நூற்றாண்டு வரையிலும் ஆசிரியரல்லாதோர் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

✳ பாடம் கூறும் முறைகளைச் சரிவரக் கையாளாமையாலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இதனைக் களைய பாடம் கூறும்முறைகள் எடுத்தாளப்பட்டுள்ளன. இதனால் மாணாக்கர்கள் ஆசிரியரின் பால் வெறுப்புக் கொண்டுள்ளமையையும் அறியமுடிகிறது.

✳ ஆசிரியர்களின் நன்மதிப்பு குறைவதற்குச் சங்க காலத்தில் வறுமை ஒரு காரணமாக இருந்திருக்கிறது. ஆசிரியர்களில் வறுமையால் பேராசைக் குணம் கொண்டவர்களாகச் சிலர் மாறியுள்ளனர். சங்கமருவிய காலங்களில் திறமையற்றவர்கள் சிலர் ஆசிரியர்களானமையால் தங்கள் நன்மதிப்பை இழந்துள்ளனர். பேராசையும் வளர்ந்து வந்துள்ளது.

✻ மாணாக்கனை உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்லாத ஆசிரியரை முழுமையாக நம்பிவந்த மாணாக்கர்கள் ஏமாற்றமடைந்துள்ளனர். இதன் விளைவாக அவர்களின் மதிப்புக் குறைந்துள்ளது.

✻ உண்மையாக உழைத்து மாணாக்கர்களை நல்வழிப்படுத்திய ஆசிரியர்கள் மதிக்கப்பட்டுள்ளனர். ஆசிரியர்கள் செய்யும் தவறுகளினால் சமுதாயம் ஒட்டுமொத்த ஆசிரியரையும் பழித்துள்ளது. இதனால் வெறுப்புக் கொண்ட சில ஆசிரியர்களாலும் மாற்றங்கள் விளைந்துள்ளது.

✻ ஆசிரியர், மாணவர் உறவுகளில் மாற்றங்கள் நிகழ்ந்தமைக்கு ஆசிரியர் மட்டும் காரணமல்ல; மாணாக்கர்களும் காரணமாகின்றனர். மாணாக்கர்களுக்குரிய கடமைகள் மீறப்படும் பொழுது அவர்கள் ஆசிரியரை அவமதிக்கின்றனர். இதன் விளைவாக தங்களின் மதிப்பை உயர்த்த எண்ணிய ஆசிரியர்கள் தங்களுக்கான நிலையிலிருந்து மாறுகின்றனர். இதனைப் பொறுக்காத மாணாக்கரல்லாதோர் ஆசிரியரை வணங்குதல், அவரின் சொற்கேட்டு நடத்தல், கற்ற கல்விக்கு ஏற்றபடி நடத்தல் ஆகியவற்றிலிருந்து மாறுகின்றனர்.

✻ பிராமணக் கல்விமுறை தமிழகத்தில் புகுந்து பல மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. அவற்றில் ஒன்றுதான் சாதிப்பாகுபாடு. சாதிப்பாகுபாடு தலைவிரித்தாடுகின்ற காலத்தில் கற்றவரை மதித்தல் வேண்டும். ஆசிரியரை வழிபடல் வேண்டும் என்று எத்துனை புலவர்கள் எடுத்துரைத்த போதிலும் அவை முழுமையாக மாறவில்லை. இக்காரணங்களால் ஆசிரியரின் மதிப்பு இறங்கி வழிபட்டுக் கற்றல் என்ற நிலையில் மாற்றம் நிகழ்கின்றது.

✳ காலம் காலமாகத் திகழ்ந்த மாணாக்கரல்லாதோரால் ஆசிரியர்களின் மனம் பொறுமையிழந்து தங்களின் நற்பண்புகளை இழந்துள்ளனர். ஆசிரியர், மாணவர்கள் இருவராலும் உறவுகளில் விரிசல் ஏற்பட்டுள்ளது. இந்நிலை மாறவேண்டுமாயின் இருவரும் தங்களின் பொறுப்புகளை உணர்ந்து நடந்துகொள்ள வேண்டும். இருவரின் ஒழுக்கக் குறைவால் நிகழ்ந்ததை இவர்களே மாற்றிக்கொள்ள முடியும்.

✳ திறமையானஆசிரியர்களை உருவாக்குவதில் அரசுக்கும் பங்குண்டு. ஆசிரியர்களின் ஊதியப் பிரச்சனை, கல்விமுறை மாற்றங்களால் விளைந்த மாற்றங்களை அரசு சரிசெய்ய இயலும்.

இன்றைய காலகட்டங்களில் திறமையான ஆசிரியர்களை உருவாக்குவதும், நேர்மையான முறையில் அவர்களைப் பணியமர்த்துவதும் அரசின் பொறுப்பாகும். எதிர்காலச் சமுதாயத்தை உருவாக்கும் ஆசிரியர்கள் உன்னதமானவர்களாக இருந்தால் தான் எதிர்காலம் சிறப்பாக அமையும். இவர்களை உருவாக்கும் பொறுப்பு அரசுக்குண்டு.

# சான்றெண் விளக்கம்


1. இளம்பூரணர், (உ.ஆ.), பொருளதிகாரம், ப.362
2. கே. பழனிவேலு, கே. கல்வி வரலாறு, ப.12
3. அ. மாணிக்கம், (உ.ஆ.), பத்துப்பாட்டு (தொகுதி–2), ப.436
4. மேலது, ப.32
5. புலியூர், கேசிகன் (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப328
6. மேலது, ப.401
7. அ. மாணக்கம், (உ.ஆ.), பரிபாடல், ப.123
8. மேலது, ப.35
9. உ.வே. சாமிநாதையர், (ப.ஆ.), மணிமேகலை, ப.102
10. வேங்கடசாமி.மயிலைசீனி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப.50
11. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர், ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.483
12. மு. காசிவிஸ்வநாதன், (ப.ஆ.), கலித்தொகை, ப.271
13. மு. கோவிந்தராசன், தமிழ் நூல்களில் கல்வி, ப.20
14. ஞா. தேவநேயப்பாவாணர், திருக்குறள், தமிழ்மரபுரை, ப.371
15. மு. வரதராசன், கல்வி, பக்.21–22
16. சோம. இளவரசு, நன்னூல் எழுத்ததிகாரம், ப.19
17. மேலது, ப.19
18. மேலது, ப.19
19. மேலது, ப.19
20. கே. பழனிவேலு, கல்வி வரலாறு, ப.11

21. மயிலை.சீனி. வேங்கடசாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப.53

22. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), தொல்காப்யம் – எழுத்ததிகரம், ப.2

23. த சண்டே இந்தியன், ஏப்ரல் 15 2012, ப.24

24. தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–2, ப.267

25. நக்கீரனார் உரை, இறையனார் களவியல், ப.154

26. மு. கோவிந்தராசன், தமிழ் நூல்களில் கல்வி, ப.156

27. கே. பழனிவேலு, கல்வி வரலாறு, ப.32

28. ஞா. தேவநேயப்பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, ப.107

29. மேலது, ப.107

30. மேலது, ப.107

31. கி.வா. ஜகந்நாதன், (ப.ஆ.), நாலடியார், ப.77

32. அதிவீரராம பாண்டியர், வெற்றிவேற்கை, ப.31

33. கௌமாரீஸ்வரி.எஸ். (உ.ஆ.), பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், ப.264

34. இளவரசு.சோம. (உ.ஆ.), நன்னூல், சொல்லதிகாரம், ப.140

35. பரிமேலழகர் (உ.ஆ.), திருக்குறள், ப.232

36. பாக்கியமேரி, வகைமை நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, ப.172

37. இளவரசு.சோம. நன்னூல் எழுத்ததிகாரம், ப.22

38. பி. விருத்தாசலம், (ப.ஆ.), நாவலர், ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள், ப.490

39. ஞா. தேவநேயப்பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, ப.292

40. ஆசிரியர் பெயர் தெரியவில்லை, கல்வி உளவியல், ப.118

41. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.1037

42. ச. ஈஸ்வரன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.63

43. கதிர்முருகு, பிற்கால நீதி இலக்கிய வரலாறு, ப.98

44. ஞா. தேவநேயப் பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, ப.103

45. ஊரன் அடிகள், (ப.ஆ.), திருவருட்பா, ப.435

46. ஞா. தேவநேயப் பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, 184

47. மேலது, ப.515

48. பரஞ்சோதி முனிவர். திருவிளையாடற் புராணம், ப.18

49. கே. பழனிவேலு, கல்வி வரலாறு, ப.96

50. ஞா. தேவநேயப் பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, 353

51. எஸ். கௌமாரீஸ்வரி, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ப.921–922

52. கதிர்முருகு, பிற்கால நீதி இலக்கிய வரலாறு, ப.143

## முடிவுரை

மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த காலத்தில் தனது முதற்கல்வியை இயற்கையிடமிருந்து கற்றுள்ளான். மனித இனம் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளதைப்போன்று நம் கல்விமுறையும் பல வளர்ச்சி நிலைகளைக் கடந்து வந்துள்ளது.

நாகரிக வளர்ச்சிபெற்ற நிலையில் மொழியின் இன்றியமையாமையை உணர்கின்றான்; மொழி பிறக்கின்றது. தான் கற்றவற்றைத் தன் குடும்பத்தார்க்கும் தன் கூட்டத்தார்க்கும் திரும்பத் திரும்பச் சொல்லி மனத்தில் படியவைக்கின்றான். தொடக்கக்காலக் கல்வி வாய்மொழியாகவே கற்பிக்கப்பெற்றது.

ஏடும் எழுத்தாணிகளும் பயன்படுத்திய காலத்தை முதன்முதலில் முத்தொள்ளாயிரத்தின் வாயிலாக அறியமுடிகின்றது.

கல்வி சங்ககாலத்தில் ஒரு சிலரின் உரிமையாக இல்லை. எக்குலத்தைச் சார்ந்தவர்களும், செல்வந்தர்களும், வறியவர்களும், மன்னரும், எளிய குடிமக்களும், ஆண்களும், பெண்களும் கல்வியைத் தேடிப்பயின்றனர்.

‘பள்ளி’ என்ற சொல் சங்க காலத்திற்கு முன்பு பாடம் கற்பிக்கும் இடத்தையும் அதன் பின்னர் பள்ளிக்கூடம், படுக்கையறை, திருக்கோயில் மடைப்பள்ளி என்ற நிலைகளிலும் வழங்கப்பட்டன. வில், வாள், வேல், அம்பு ஆகிய கலைகளைக் கற்றுக் கொடுக்கும் இடத்திற்குக் கல்லூரி எனும் பெயரைத் திருத்தக்கத்தேவர் பயன்படுத்தியுள்ளார். கல்வி, கலைகளைக் கற்பிப்பவர் ஆசிரியர் என்று வாழ்வியல் களஞ்சியம் பொருள் தருகின்றது.

கல்வி கற்பித்தவர்கள் கணக்காயர், வித்துவான், மகாவித்துவான், கவிராயர், நாவலர், புலவர், குரு, குரவன், உவாத்தியாயர், குலபதி என்ற

பெயர்களால் அழைக்கப்பட்டனர். ஆசான், ஆசிரியர், தேசிகர், பண்டிதர் என்ற பெயர்களாலும் முற்காலத்தில் அழைக்கப்பட்டனர். கணக்கும் இலக்கணமும் கற்பிப்பவர் கணக்காயர் என்று அழைக்கப்பட்டார். இலக்கியங்கள், நிகண்டுகள், சிற்றிலக்கியங்கள், கற்பிப்பவர்கள் வித்துவான், புலவர், உவாத்தியாயர் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர். கற்பிப்பவர் அனைவரும் ஆசிரியர் என்று பொதுப்பட அழைக்கப்பட்டபோதும் இடைநிலை ஆசிரியர், முதுநிலை ஆசிரியர், விரிவுரையாளர், உதவிப் பேராசிரியர், இணைப்பேராசிரியர், பேராசிரியர் என்று அழைக்கப்படுவது போன்று கற்பிக்கும் கல்விக்கு ஏற்ப அவ்வவ்காலகட்டங்களில் வேறுவேறு பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

இசை, கூத்து முதலிய கலைகளைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் ஆடற்கமைந்த ஆசான், தலைக்கோலாசான் என்றும் அழைக்கப்பட்டனர். தொல்காப்பியர் ஆசிரியர்களைப் 'புலவர்' என்று அழைக்கின்றார். வேங்கடசாமி நாட்டார் நூலாசிரியர், உரையாசிரியர், போதக ஆசிரியர் என்று வகைப்படுத்துகின்றார்.

தொல்காப்பியம் ஆசிரியர் உயர்ந்த மதிப்புப் பெற்றவராகவும் பொறுமைக் குணமுடையவராகவும், அனைத்தும் கற்றறிந்தவராகவும் இருத்தல் வேண்டும். மாறாக மாணாக்கர்களுக்குப் பாடத்தின் பால் அச்சத்தை ஏற்படுத்துபவராகவும், மாணவர்களைக் குழப்பமடையச் செய்பவராகவும், மாணாக்கரல்லாத பிறருக்குக் கற்றுத்தந்து பொருளாசை உடையவராகவும் இருத்தல் கூடாது என்று குறிப்பிடுகின்றது.

கற்பிக்கும் ஆசிரியர் ஆழ்ந்த அறிவுடையவராகவும் மாணாக்கர் அறிந்துகொள்ளும் வகையினை அறிந்து முதல், இடை, கடை என்ற மூவகை மாணாக்கர்க்கும் புரியுமாறு கற்பித்தல் வேண்டும்.

பள்ளியில் மாணவன் ஆசிரியரின் மகனாகவே வளர்கின்றான். கல்வி கற்க ஆசிரியர்க்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து பொருள் கொடுத்தும் கற்றான். மாணவரைப் பற்றி ஆசிரியர் முழுமையும் அறிந்த பின்னரே பள்ளியில் அனுமதித்துள்ளார். ஆசிரியர் தமது வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை மாணாக்கரிடமிருந்து பெற்றுள்ளார்.

மாணாக்கர்களின் தலைவன் சட்டாம்பிள்ளை என அழைக்கப் பட்டான். சட்டன் – ஓலைச் சுவடி படிப்போன், சட்டநம்பி – திண்ணைப் பள்ளி மாணவர் தலைவன்.

கற்கும் மாணவன் ஆசிரியரிடம் பணிந்து கற்றல் வேண்டும். ஆசிரியர்க்கு எவ்வளவு கீழ்ப்படிந்து ஊழியஞ் செய்தாலும் அவை மாணாக்கரின் உயர்ச்சிக்குக் காரணமாகும். எந்த மாணவன் கடமை தவறாதவனாகவும், தூயவனாகவும், வித்தையை ஏற்றுக் கொள்பவனாகவும், கவனம் நிறைந்தவனாகவும் இருக்கின்றானோ அவன் சிறந்த மாணவனாகக் கருதப்பெற்றான்.

சோம்பேறி, செருக்குடையவன், பொறாமைக்குணம் உடையவன், காமுகன், கள்வன், தீராத நோயினை உடையவன், ஆறாச் சினத்தன் ஆகியோர் கல்வி கற்கத் தகுதியற்றோராகக் கூறப்பட்டுள்ளது. நல்ல குணங்களையும், நற்பண்புகளையும் கொண்டவர்களுக்கு மட்டும் கல்வி கற்றுத்தரப்படல் வேண்டும் என்பதில் தீர்மானமாக இருந்துள்ளனர்.

மாணாக்கனின் அறிவுத் திறனுக்கு ஏற்ப முதல் தரம், இரண்டாம் தரம், மூன்றாம் தரம் என்று மாணவர்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளனர். பாடம் கேட்கும் பொழுது மாணவன் ஆசிரியர் கூறிய கருத்தக்களை மனத்தில் நிறுத்தி அத்தகைய மாணாக்கர்களோடு பழகுவதால் பாதிக் கல்வியைப் பெறுகின்றான். பின்பு அப்பாடத்தில் புலமையுடையோரிடம் கேட்டுணர்ந்து மறுபாதியையும் பெறுகின்றான்.

தொல்காப்பியத்திற்குப் பின்தோன்றிய இலக்கண இலக்கியங் களையும், உரைகளையும் உலக வழக்கினையும் ஆராய்ந்து பவணந்தியார் இலக்கணம் கூறுகின்றார்.

பவணந்தியார் ஆசிரியர்க்குரிய பண்புகள், குணநலன்கள் ஆகியவற்றை எடுத்துக்கூறும் பொழுது உயர்ந்த மதிப்பு, நற்குணம், பொறுமை, உலகியல் அறிவு ஆகியவற்றோடு நற்குடிப்பிறப்பும், கடவுள் வழிபாடு உடையவராகவும் இருத்தல் வேண்டும் என்று கூறுகின்றார்.

ஆசிரியரல்லாதோர் பற்றிக் குறிப்பிடும் பொழுது கழற்குடம், மடற்பனை, முடத்தெங்கு, பருத்திக் குண்டிகையோடு; பாடம் சொல்லும் குணம் இல்லாதவர்களும் இழிந்த குணத்தை உடையவரும் ஆசிரியராகமாட்டார் என்று கூறியுள்ளார்.

காலம் மாற்றம் பெறும்பொழுது ஆசிரியராய் இருப்பவர் களுக்குரிய தகுதிகள் அதிகரித்துக் கொண்டு செல்கின்றன என்பதைப் பவணந்தியார் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியர் கற்பிக்கும் முறை பற்றிக் கூறும்பொழுது பொழிப்பு, அகலம், நுட்பம், பல்லுரை பயில்தல் போன்ற தன்மைகளோடு தெளிந்த அறிவுடையோர் கற்பிக்க வேண்டும் என்கிறார்.

பவணந்தியார் கற்பிப்பதற்கு உரிய காலத்தையும் இடத்தையும் தேர்வு செய்து தெய்வத்தைத் தொழுது, விரைவாகக் கூறாமலும், கோபம் கொல்லாமலும், விருப்பத்துடனும், முகமலர்ச்சியோடும் மாணவன் ஏற்றுக் கொள்ளும் தன்மையறிந்து கற்பித்தல் வேண்டும் என்கிறார்.

மேற்கூறிய முறைகள் தொல்காப்பியர் காலத்தில் குறிப்பிடப் படவில்லை. தொல்காப்பியம் அன்போடு பாடம் நடத்துதல் வேண்டும் என்று

குறிப்பிட்டுள்ளது. விரையாது, வெகுளாது என்பன நன்னூலார் குறிப்பிடுபவை. பாடம் கூறுகின்றவர் ஆழ்ந்த அறிவு, பாடத்தில் தெளிவு ஆகியவற்றைப் பெற்றிருந்த போதிலும் அதனை வெளிப்படுத்தும் முறையும் இன்றியமையாதது என்று பவணந்தியார் குறிப்பிட்டுள்ளார்.

மாணாக்கர்களைப் பாகுபாடு செய்வதில் இவர்களுக்கிடையே மாறுபாடு கிடையாது. நன்னூலார் கூடுதலான உவமைகளைக்கூறி விளக்குகின்றார்.

கற்பதற்குத் தகுதியற்றவர்களைப் பற்றக் குறிப்பிடும்பொழுது பவணந்தியர் ஏழையைக் குறிப்பிட்டுள்ளார். அவரது காலத்தில் கல்வி கற்கப் பணம், பொருள் இன்றியமையாததாக இருந்துள்ளதை உறுதி செய்கின்றது.

நூலைக் கற்கும் முறையில் தொல்காப்பியர், நன்னூலார் இவ்விருவருக்குமிடையே மாறுபட்ட கருத்து இல்லை. பவணந்தியார் ஆசிரியரை வழிபடும் முறை பற்றித் தனியாகக் குறிப்பிடுகின்றார். முதல் நூலான தொல்காப்பியம் வழிபாடு பற்றிக் குறிப்பிடாத பொழுது வழி நூல் குறிப்பிட்டுள்ளமையை நோக்கும் பொழுது தொல்காப்பியர், பவணந்தியார் காலத்திற்கு இடைப்பட்ட காலத்தில் ஆசிரிய வழிபாட்டில் குறைபாடு நிகழ்ந்துள்ளமையை அறியமுடிகின்றது.

ஒழுக்கம் என்பது ஆசிரியர், மாணவர் இருவர்க்கும் பொதுவாக வைக்கப்பட்டுள்ளது. பிரம்மச்சரியம் காத்தல், காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை நீக்குவது இருவர்க்கும் உள்ள பொதுவான பண்புகளாகும்.

ஆசிரியர் என்பவர் அவரைச் சார்ந்த மாணாக்கர்களுக்கு நல்ல வழிகாட்டியாக இருந்தல் வேண்டும். பிழையின்றிப் பேசுவதும் எழுதுவதும் இருவர்க்கும் பொதுவானதாகும்.

ஆசிரியர் இல்லாமல் கற்கும் கல்வி எவ்விதப் பயனையும் தராது.

ஆசிரியர்கள் தாங்கள் செய்த பணிக்காக ஊதியம் பெறமுடியாமல் தவித்திருக்கின்றனர். ஊதியத்தின் இன்றியமையாமையைப் பிற்காலத்தில் தோன்றிய நீதிநூல்கள் எடுத்துரைத்த போதிலும் அதன் தொடக்கம் சங்க காலத்திலிருந்து தொடர்ந்து வந்துள்ளது.

ஆசிரியர் கூறும் சொற்கள் மாணவர்களுக்குத் துன்பக் காலத்தில் உதவும் தன்மை பெற்றவையாகவும், தவறுகளைத் திருத்தி ஒழுக்கமுடையவராக விளங்கும் ஆற்றல் உடையவனாகவும் இருத்தல் வேண்டும். பல நூல்களையும் கற்றறிந்து நன்மை, தீமைகளை ஆராய வல்லவராகவும், அடக்கமாக நடத்தலும், வீடுபேறு அடையும் வழியை எடுத்துக் கூறுவதும், தான் துன்பப்படும் காலங்களில் தன்நிலையில் தாழாதவராகவும், ஆசை, பேராசையற்றவராகவும், நல்ல வழிகாட்டியாகவும், இம்மை வாழ்வில் பற்றற்றவராகவும், தன்னலம் பாராதவராகவும் இருப்பதே ஆசிரியரின் ஒழுக்கமும் பண்புகளும் ஆகும்.

ஆசிரியர்கள் தந்தையாகவும், மன்னனையும்விட உயர்ந்தவர் களாகவும் மதித்துப் போற்றப்பட்டனர். ஆசிரியரின் மனைவியும் மதிக்கப்பெற்றார். அடிமை வாழ்வு வாழாத பெருமைக்குரியவர்களாக விளங்கியுள்ளனர்.

கற்பிக்கும் முறைகளில் முதன்மையானது மாணாக்கரிடத்து அன்பு காட்டுதலாகும். அன்பால் மட்டுமே கற்பிக்க இயலும், விரைவாகக் கூறுதல், பொய்யான கருத்தைக் கூறுதல், கடுமொழி யுரைத்தல் கூடாது, சிறிது சிறிதாக மாணாக்கர்களுக்குக் கற்றுக் கொடுத்தல் ஆகியன அக்காலக் கற்பித்தல் முறைகளாகும்.

நூற்பொருளை அறிந்து மாணாக்கர்களுக்கு எடுத்துரைப்பவரும் மாணாக்கரை நல்வழிப்படுத்துபவரும், தன்னலமற்றவரும் தமக்குக் கேடுநினைப்பவருக்கும் தீங்கினை எண்ணாதவர் நல்லாசிரியர்.

ஆசிரியரது செயல்கள் மாணவர்களின் மன இருளை நீக்குவதாகவும், பாவ, புண்ணியங்களை உணர்த்தி அவர்களை நல்வழிப்படுத்துவதாகவும், சமுதாயத்தில் அழியாத புகழைத் தருகின்றதாகவும், கல்வியின் அவசியத்தையும் எடுத்துரைப்பதாகவும் இருத்தல் வேண்டும்.

ஆசிரியர் என்பவர் அனைத்தையும் முழுமையாகக் கற்றுத் தெரிந்து கொள்ள வேண்டும். இல்லையேல் அவர் மற்ற ஆசிரியர்களிடத்தும் தன் மாணாக்கரிடத்திலும் அவமானப்பட நேரிடும்.

முழுமையாகக் கற்றியாதவரும், கற்பித்தலின் நுட்பத்தை அறியாதவரும், தற்பெருமை பேசுபவரும், பிணியுடையோன், பின்னோக்கி, அறிவில்லாதவன், கள் குடிப்பவன், நன்மை, தீமைகளை உணர்ந்தறியாதவன், அன்பில்லாதவன், கொடுஞ்செயல் புரிகின்றவன் ஆகியோர் ஆசிரியராக மாட்டார்கள்.

இயற்கை அறிவு, விரும்பத்தக்க தோற்றம், ஆராய்ச்சியுடைய கல்வி, நல்ல குடிப்பிறப்பில் பிறந்தவன் ஆகியோர் முதல் நிலை மாணாக்கனாகத் திகழமுடியும்.

கற்பிக்கும் ஆசிரியருக்குக் கூலியைக் கொடுத்தல், தீய ஆசைகளை விடுத்தல், நல்லனவற்றைக் கற்றல், ஓதுதல், படித்தல், கேட்டல், உயிர்க்கொலை செய்யாதிருத்தல், புலால் உண்ணாதிருத்தல், நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்றுதல், ஆசிரியரை, அவர் கற்பித்த பாடத்தை மறவாதிருத்தல், ஆசிரியரின் துணையோடு கற்றல் ஆகியன மாணாக்கரின் பண்புகளும் ஒழுக்கமும் ஆகும்.

கற்றலுக்கான முதற்படி ஆசிரியருக்குக் கீழ்ப்படிதலாகும். பணிவே ஒரு மாணவனுக்குக் கல்வியைத் தரும், கேட்டலின் மூலமே ஒருவன் நிறைவான கல்வியைப் பெறமுடியும், பாடத்தை வெறுப்பின்றிக் கற்றல் வேண்டும், கற்கும் மாணவர்கள் பொய்யுரைத்தல் கூடாது.

ஆசிரியர் என்பவர் இறைவனுக்கு நிகரானவர். ஆசிரியரின் காலில் விழுந்து வணங்கிக் கற்றல் வேண்டும். ஆசிரிய வழிபாட்டில் தயக்கம் காட்டுதல் கூடாது என்பது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

ஆசிரியரின் சொற்படிக் கேட்டு நடத்தல் வேண்டும். வகுப்பறைகளில் மாணவர்கள் காதுகளைச் சொரிதல், கைகளை உயர்த்திப்பேசுதல், காலால் எழுதுதல், ஆசிரியர் பாடம் கூறும்போது மாணவர்கள் பேசுதல் ஆகிய செயல்களைச் செய்தல் கூடாது. மாணவர்கள் கோபமுற்ற போதும் ஆசிரியரின் பெயரைக் கூறுதல் கூடாது, பெண்களோடு பேசுதல் கூடாது ஆகிய அனைத்தும் மாணாக்கர்கள் வகுப்பறைகளில் கடைபிடிக்க வேண்டியவைகளாகும்.

கற்றவனே மாணாக்கன், கல்லாதவன் மாணாக்கனாகமாட்டான். கல்லாதவன் கற்றறிந்தார் முன்சென்று தானும் அறிவுடையவன் என்று கூறுவானெனில் அவன் அறிவுடையவர்களால் இகழப்படுவான். மாணவன் என்பான் அம்மாணவப் பருவத்திலேயே தன்னுடைய குற்றங்களை நீக்கிக் கொள்ளுதல் வேண்டும். ஆசிரியரின் சொற்கேளாதவனும் ஆசிரியருக்குக் கீழ்ப்படியாதவனும் மாணாக்கனாகமாட்டான். நல்லனவற்றை விடுத்து, கெட்டதை விரும்புபவன் மாணாக்கனாகத் தகுதியற்றவனாவான்.

தமிழ்க் கல்வி வரலாற்றில் பிராமணக் கல்விமுறை வழக்கில் இருந்ததாக எந்த ஒரு இலக்கியமும் எடுத்துரைக்கவில்லை. குருகுலக் கல்வி என்பது தமிழர்களின் திண்ணைப் பள்ளிக்கூட அமைப்பாகும். பிராமணர்களின்

வருகைக்குப்பின் மன்னர்களின் ஆதரவால் அவர்களது ஆதிக்கம் மேலோங்கிய நிலையில் திண்ணைப் பள்ளிக் கூடங்களும் 'குருகுலம்' என்று அழைக்கப்பட்டன.

ஆசிரியரின் இல்லங்கள் பள்ளிகளாக இருந்தன. மாணவர்கள் அவர்களின் இல்லத்திலே தங்கிப் பயின்றனர். அங்கே ஆசிரியர் தந்தையாக மதிக்கப்பெற்றார். ஆசிரியரைக் குரு என்று அழைப்பது பிற்கால மரபு ஆகும்.

பழைய கல்விமுறையில் ஆசிரியர், மாணவர் உறவு முறைப்படி வரையறுக்கப்பட்டிருந்தது. திண்ணைப் பள்ளிக் கூடத்தில் ஆசிரியர், மாணவர் உறவு குளிர்காய்பவன் நெருப்பினை எவ்வாறு அணுகித் தனது குளிரைப் போக்கிக் கொள்வானோ! அவ்வாறு இருந்தது.

தொல்காப்பியர் காலத்தில் நன்கு கட்டமைக்கப்பட்டிருந்த ஆசிரியர், மாணவர் உறவு உரையாசிரியர் காலகட்டங்களில் மாற்றம் பெறத் தொடங்கியுள்ளது. ஆசிரியர்கள், ஒழுக்கமின்மை, பேராசை, திறமையின்மை ஆகியவற்றால் தங்களின் மதிப்பை இழந்துள்ளனர். பொறாமைக் குணம் கொண்டவர்களும் பொருளாசையுடையோரும் ஆசிரியர்களாக இருந்துள்ளனர். சில ஆசிரியர்களைவிட மாணவர்கள் திறமையானவர்களாகவும் இருந்துள்ளனர்.

மாணாக்கரல்லாதோரும் மாணாக்கர்களாக இருந்துள்ளனர். சில மாணாக்கர்கள் ஆசிரியர்களை இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்துள்ளனர். மாணாக்கர்களின் குற்றங்களைப் பொறுக்காத சில ஆசிரியர்கள் தங்கள் பொறுமையை இழந்துள்ளனர்.

கற்பதற்குப் பொருள் இன்றியமையாததாக இருந்துள்ளது. பொருளைக் கொடுக்கின்றோம் ஏன்? பணிந்து கற்க வேண்டும் என்ற நிலைக்கு மாணவர்கள் தள்ளப்பட்டுள்ளனர். மாணாக்கரிடமிருந்து மிகுதியான பொருளைப் பெறுகின்றோம். அவர்களைத் தண்டனைக்குள்ளாக்கி அதனை

ஏன் இழக்க வேண்டும் என்பதற்காகச் சில ஆசிரியர்கள் தங்களது மதிப்பை இழந்துள்ளனர்.

கற்பதற்குத் தகுதியற்றவர்களாகக் குறிப்பிட்டுள்ளவர்களில் ஏழ்மையும் சேர்க்கப்பட்டுள்ளது. இதன்வழி கல்வி கற்பதற்குப் பொருள் இன்றியமையாததாகக் கருதப்பட்டதை அறியமுடிகின்றது. ஆசிரியர்கள் பணத்தின் மீது பற்றுக் கொண்டதற்கு இது சான்றாக அமைகின்றது. ஏழைகளுக்குக் கல்வி கற்றுத் தந்தமைக்கான சான்று சங்ககாலம் முதல் நன்னூல் காலம் வரை இல்லை.

பவணந்தியார் காலத்தில் ஆசிரியரை வழிபட்டுக் கற்றல் வேண்டும் என்பதும் ஆசிரியரின் இல்லம் பள்ளியாக அல்லாமல் இருவர்க்கும் பொதுவான இடமாக இருந்ததும் காணப்படுகிறது.

ஆசிரியர் வழிபாடு என்பது ஆரம்பக் காலகட்டங்களில் வெறுப்பின்றி நிகழ்த்தப்பட்டது. ஆசிரியர்களின் குறைகளாலும் பணத்தாசை காரணமாகவும் வழிபாடு என்பது மறுக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர்களின் பணத்தாசைக்குக் காரணம் அவர்கள் ஊதியத்தை இழந்தமையாகும். தங்களுக்கான ஊதியத்தைப் பெறாமல் தவித்துள்ளனர் என்பதைக் கலித்தொகையும் உலகநீதியும் எடுத்துக் காட்டுகின்றன. கல்விக்கு ஆகும் செலவுகளை அரசே ஏற்க வேண்டும் என்ற இன்றைய கோரிக்கைக்குச் சங்க மருவிய காலத்தில் தோன்றிய ஏலாதி விதை போட்டுள்ளது. கல்வி இலவசமாக வழங்க வேண்டும் என்று முன்னமே கூறப்பட்டள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

ஆசிரியர், மாணவர் உறவுகளில் மாற்றங்கள் நிகழ்ந்ததற்கு ஆசிரியர் இல்லாமல் கற்றதும் ஒரு காரணமாகும். கல்வியானது ஆசிரியரின் துணையின்றி பலகாலம் நடைபெற்றுள்ளது. இதன் விளைவாகக் கல்வியின் தரம் சீர்குலைந்து தரமற்ற மாணாக்கர்கள் உருவாகியுள்ளனர். இதனால்

காலப்போக்கில் ஆசிரியர் மாணவர்களுக்கு இடையேயான உறவுகளில் பெரும்பான்மையான மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஆசிரியரை நம்பியிருந்த மாணவர்கள் அவர்களை எதிர்நோக்கியிராமல் கல்வியைப் பெறமுடியும் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டனர். இவற்றின் விளைவாக வழிபடல், பணிவிடை செய்தல், பணிந்து நடத்தல் ஆகியவற்றில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

நல்லொழுக்கமில்லாத ஆசிரியர்களும் ஆசிரியர், மாணவர் உறவுகளின் மாற்றங்களுக்குக் காரணமாக இருந்துள்ளனர். நற்பண்புகளைப் பெற்றவர்கள் ஆசிரியராதல் வேண்டும் என்பதைக் காலந்தோறும் தோன்றிய இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. ஆசிரியர் சூதாட்டத்தைக் கைவிடல் வேண்டும் என்று திருக்குறள் கூறுகின்றது. சிறுபஞ்சமூலம் பிரம்மச்சரியம் காத்து நிற்பவரும் காமம், வெகுளி, மயக்கம் ஆகியவற்றை ஒழிப்பவரும் ஆசிரியராவர் என்று கூறியுள்ளது.

சங்கமருவிய காலங்களில் சமயக்கல்வி தோற்றம் பெறுகின்றது. ஆசிரியர் எச்சமயத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அவர் சமயச் சார்பற்றவராக இருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகிறது.

ஆசிரியரல்லாதோர் பற்றிச் சங்கமருவிய கால நூல்கள் மிகுதியும் வலியுறுத்துகின்றன. இதன்வழி ஆசிரியரின் தவறுகள் இக்காலத்தில் பெரும்பான்மை நிகழ்ந்துள்ளமை அறியப்படுகின்றது. முறையாகப் பாடம் கூறாதவரும் நூலின் பொருளை அறியாமல் நூலை மட்டும் தொகுத்து வைப்பவரும் அன்பில்லாதவரும் ஆசிரியரல்லாதோராவர். மேலும் நற்குணம் வாய்க்கப் பெறாதவரும், மனநலம் பாதித்தவரும், பேராசை கொண்டவரும் ஆசிரியராகார் என்று குறிப்பிட்டுள்ளனர். ஏழாம் நூற்றாண்டுத் தொடங்கி பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலும் ஆசிரியரல்லாதோர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

பாடம் கூறும் முறைகளைச் சரிவரக் கையாளாமையாலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இதனால் மாணாக்கர்கள் ஆசிரியரின்பால் வெறுப்புக் கொண்டுள்ளமையையும் அறியமுடிகின்றது.

ஆசிரியர்களின் நன்மதிப்பு குறைவதற்குச் சங்க காலத்தில் வறுமை ஒரு காரணமாக இருந்திருக்கிறது. ஆசிரியர்களில் சிலர் வறுமையில் பேராசைக்குணம் கொண்டவர்களாகச் மாறியுள்ளனர். சங்க மருவிய காலங்களில் திறமையற்றவர்கள் சிலர் ஆசிரியர்களானமையால் தங்கள் நன் மதிப்பை இழந்துள்ளனர். பேராசையும் வளர்ந்து வந்துள்ளது.

மாணாக்கர்களை உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்லாத ஆசிரியரை முழுமையாக நம்பிவந்த மாணாக்கர்கள் ஏமாற்றமடைந்துள்ளனர். இதன் விளைவாக அவர்களின் மதிப்புக் குறைந்துள்ளது.

உண்மையாக உழைத்து மாணாக்கர்களை நல்வழிப்படுத்திய ஆசிரியர்கள் மதிக்கப்பட்டுள்ளனர். ஆசிரியர்கள் செய்யும் தவறுகளால் சமுதாயம் ஒட்டுமொத்த ஆசிரியரையும் பழித்துள்ளது. இதனால் வெறுப்புக் கொண்ட சில ஆசிரியர்களாலும் மாற்றங்கள் விளைந்துள்ளன.

ஆசிரியர், மாணவர் உறவுகளில் மாற்றங்கள் நிகழ்ந்தமைக்கு ஆசிரியர் மட்டும் காரணமல்ல; மாணாக்கர்களும் காரணமாகின்றனர். மாணாக்கர்களுக்குரிய கடமைகள் மீறப்படும்பொழுது அவர்கள் ஆசிரியரை அவமதிக்கின்றனர். இதன் விளைவாகத் தங்களின் மதிப்பை உயர்த்த எண்ணிய ஆசிரியர்கள் தங்களுக்கான நிலையிலிருந்து மாறுகின்றனர். இதனைப் பொறுக்காத மாணாக்கரல்லாதோர் ஆசிரியரை வணங்குதல், அவரின் சொற்கேட்டு நடத்தல், கற்ற கல்விக்கு ஏற்றபடி நடத்தல் ஆகியவற்றிலிருந்து மாறுகின்றனர்.

பிராமணக் கல்விமுறை தமிழகத்தில் புகுந்து பல மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது, அவற்றில் ஒன்றுதான் சாதிப்பாகுபாடு. தீண்டாமை தலைவிரித்தாடுகின்ற காலத்தில் கற்றவரை மதித்தல் வேண்டும். ஆசிரியரை வழிபடல் வேண்டும் என்று எத்துனை புலவர்கள் எடுத்துரைத்த போதிலும் அவை முழுமையாக மாறவில்லை. இக்காரணங்களால் ஆசிரியரின் மதிப்பு இறங்கி வழிபட்டுக் கற்றல் என்ற நிலையில் மாற்றம் பெறுகின்றது.

காலம் காலமாகத் திகழ்ந்த மாணாக்கரல்லாதோர்களால் ஆசிரியர்களின் மனம் பொறுமையிழந்து தங்களின் நற்பண்புகளை இழந்துள்ளனர். ஆசிரியர், மாணவர்கள் இருவராலும் உறவுகளில் விரிசல் ஏறபட்டுள்ளது. இந்நிலை மாறவேண்டுமாயின் இருவரும் தங்களின் பொறுப்புகளை உணர்ந்து நடந்துகொள்ள வேண்டும். இருவரின் ஒழுக்கக்குறைவால் நிகழ்ந்ததை இவர்களே மாற்றிக் கொள்ள முடியும்.

திறமையான ஆசிரியர்களை உருவாக்குவதில் அரசுக்கும் பங்குண்டு. ஆசிரியர்களின் ஊதியப் பிரச்சனை, கல்விமுறை மாற்றங்களால் விளைந்த மாற்றங்களை அரசே சரிசெய்ய இயலும்.

இன்றைய காலகட்டங்களில் திறமையான ஆசிரியர்களை உருவாக்குவதும், நேர்மையான முறையில் அவர்களைப் பணியமர்த்துவதும் அரசின் பொறுப்பாகும். எதிர்காலச் சமுதாயத்தை உருவாக்கும் ஆசிரியர்கள் உன்னதமானவர்களாக இருந்தால் தான் எதிர்காலம் சிறப்பாக அமையும். இவர்களை உருவாக்கும் பொறுப்பு அரசுக்கு உண்டு.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்

1. அதிவீரராம பாண்டியன் – 'வெற்றி வேற்கை'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
நான்காம் பதிப்பு – 1941

2. இராசமாணிக்கம் பிள்ளை.அ. (உ.ஆ.) – 'பழமொழி நானூறு மூலமும் உரையும்'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
மூன்றாம் பதிப்பு – 1958.

3. இளம்பூரணர் (உ.ஆ.) – 'தொல்காப்பியம்' (எழுத்ததிகாரம்)
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
நான்காம் பதிப்பு – 1967.

4. மேலது – 'தொல்காப்பியம்' (எழுத்ததிகாரம்)
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
நான்காம் பதிப்பு – 1967.

5. இளவரசு.சோம. (உ.ஆ.) – 'நன்னூல்' (எழுத்ததிகாரம்)
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை – 108
ஆறாம் பதிப்பு – சூலை 2003.

6. உலகநாதர் – 'உலகநீதி'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
மூன்றாம் பதிப்பு – 1936.

7. ஔவையார் – 'ஆத்திசூடி'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஆறாம் பதிப்பு – 1941.

8. மேலது – 'கொன்றை வேந்தன்'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு – 1938.

9. கணிமேதாவியார் – 'ஏலாதி'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு – 1968.

10. கதிர்முருகு (உ.ஆ.) – 'அறநெறிச்சாரம்'
சாரதா பதிப்பகம்,
ராயப்பேட்டை, சென்னை–14
முதற்பதிப்பு – 2008.

11. மேலது – 'விவேக சிந்தாமணி'
சாரதா பதிப்பகம்,
ராயப்பேட்டை,
சென்னை–14
முதற்பதிப்பு – 2010.

12. காசிவிஸ்வநாதன்.மு. (ப.ஆ.) – 'கலித்தொகை'
திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஆறாம் பதிப்பு – 1952.

13. குமரகுருபர சுவாமிகள் – 'நீதிநெறி விளக்கம்'
திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1939.

14. கௌமாரீஸ்வரி.எஸ். (ப.ஆ.) – 'பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும்'
கௌரா ஏஜென்சீஸ்,
10/14, தோப்பு வெங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை–5.
முதற்பதிப்பு – 2009.

15. சாமிநாதையர்.உ.வே. – 'குறுந்தொகை மூலமும் உரையும்'
ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு – 1937.

16. மேலது – 'புறநானூறு மூலமும் உரையும்'
ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு,
சென்னை.
ஐந்தாம்பதிப்பு – 1956.

17. சேனாவரையர் (உ.ஆ.) – 'தொல்காப்பியம்' (சொல்லதிகாரம்),
வித்யானுபாலன் அச்சகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு – 1934

18. தேவநேயப் பாவாணர்.ஞா. (உ.ஆ.) – 'திருக்குறள் தமிழ் மரபுரை'
ஸ்ரீ இந்து பப்ளிகேசன்ஸ்,
சென்னை–17

19. நல்லாதனார் – 'திரிகடுகம்'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஏழாம் பதிப்பு – 1965.

20. புன்னைவனநாத முதலியார்,பு.பி. (உ.ஆ.) – 'சிறுபஞ்சமூலம்'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1936.

*21.* பெருவாயின் முள்ளியார் – ‘ஆசாரக்கோவை’
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஏழாம் பதிப்பு – *1965.*

*22.* மதுரைக் கூடலூர்க்கிழார் – ‘முதுமொழிக்காஞ்சி’
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு

*23.* ஜகந்நாதன்.கி.வா. (ப.ஆ.) – ‘நாலடியார்’
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
மூன்றாம் பதிப்பு – *1962.*

*24.* மேலது (உ.ஆ.) – ‘களவியல் (எ) இறையனார் அகப்பொருள்’
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு – *1969.*

*25.* ஆசிரியர் பெயர் இல்லை – ‘நீதிநூல்’
பதிப்பு இல்லை.

**துணைமைச் சன்றாதாரங்கள்**


1. அப்துல்கஹீம் – ‘திருவள்ளுவர் திருவுள்ளம்’
வானதி பதிப்பகம்,
தி. நகர், சென்னை.
முதற்பதிப்பு – 1980.

2. அய்க்கண் – ‘அழகப்பா’
31, சிங்கர் தெரு,
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை, சென்னை.

3. அவினாசிலிங்கம்.தி.சு. (மொ.பெ.ஆ.) – ‘கல்வி’
ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்,
கோயமுத்தூர்.
முதற்பதிப்பு – 1941.

4. இராசமாணிக்கனார் – ‘முப்பெரும் புலவர்கள்’
பாரி நிலையம்,
சென்னை–108
முதற்பதிப்பு – 1991.

5. ஈஸ்வரன்.ச. – ‘தமிழ் இலக்கிய வரலாறு’
37ஏ, வடக்காவணி மூல வீதி,
மதுரை–1
முதற்பதிப்பு – 1972.

6. ஊரன் அடிகள் – ‘திருவருட்பா’
சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்,
வடலூர்.
முதற்பதிப்பு – 1972.

7. கதிர்முருகு – 'பிற்கால நீதி இலக்கிய வரலாறு'
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 2010.

8. கந்தசாமிப் பிள்ளை – 'சரித்திர காலத்திற்கு முற்பட்ட தமிழர்'
ஒற்றுமை ஆபீஸ்,
சென்னை.
முதற்பதிப்பு – 1995.

9. கேசிகன், புலியூர் – 'சிலப்பதிகாரம்'
பாரி நிலையம்,
பிராட்வே,
சென்னை–108
முதற்பதிப்பு – 1958.

10. கோகிலா தங்கச்சாமி – 'இந்திய சமூகத்தில் கல்வி'
மாநிலா பதிப்பகம்,
மதுரை–4
முதற்பதிப்பு – 1995

11. கோதண்டராமன்.ப. – 'இலக்கியமும் திறனாய்வும்'
ஸ்ரீ அரவிந்த ஆசிரமம்,
புதுச்சேரி.

12. கோவிந்தராசன்.மு. – 'மொழித்திறன்களும் சில சிக்கல்களும்'
தேன்மொழி பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1980

13. கௌமாரீஸ்வரி.எஸ். (ப.ஆ.) – 'திருக்குறள்' (பரிமேலழகர் உரை)
சாரதா பதிப்பகம்,
ராயப்பேட்டை,
சென்னை–14
19 ஆம் பதிப்பு – ஆகஸ்டு–2009.

14. சந்திரன்.வீ. – 'தமிழர் கண்ட கல்வி'
4/36, முகப்பேர்,
ராஜகுமாரி பப்ளிகேசன்ஸ்,
சென்னை.
முதற்பதிப்பு – 2001.

15. சாமிநாதையர்.உ.வே. (ப.ஆ.) – 'மணிமேகலை'
தியாகராாச விலாச வெளியீடு,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு – 1956.

16. மேலது, – 'நல்லுரைக் கோவை'
தியாகராச விலாச வெளியீடு,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு – 1958.

17. சித்பவானந்தர் – 'ஆசிரியன்'
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,
திருப்பராய்த்துறை,
திருச்சி.
ஐந்தாம் பதிப்பு – 2004.

18. மேலது – ‘மாணாக்கன்’
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,
திருப்பராய்த்துறை, திருச்சி.
ஐந்தாம் பதிப்பு – 2004.

19. சுப்பிரமணியன்.ந. – ‘சங்ககால வாழ்வியல்’
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை–98
முதற்பதிப்பு – 1986.

20. செட்டியார்.ஏ.கே. – ‘பண்பு’
டி.வி.எஸ். செய்திப்பிரசுரம்,
மதுரை.
முதற்பதிப்பு – 1976.

21. தேவநேயன்.ஞா. – ‘பண்டைத்தமிழ் நாகரிகமும் பண்பாடும்’
நேசமணி பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1966.

22. ப்ரியா பாலு – ‘மாணவர்களுக்கு அப்துல்கலாம்’
அருண் நிலையம்,
இராயப்பேட்டை, சென்னை–14
முதற்பதிப்பு – 2006.

23. பசுபதி.ம.வே. – ‘உ.வே.சா. வாழ்வும் தொண்டும்’
பொன்னழகம்மை நூலகம்,
காரைக்குடி–1
முதற்பதிப்பு – 2002.

24. பட்டுச்சாமி ஓதுவார்.தி. (ப.ஆ.) – 'திருக்குறள் உரைக்கொத்து'
ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்.
முதற்பதிப்பு – 1958.

25. மேலது – 'கந்தபுராணம்'
ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்.
முதற்பதிப்பு – 1958.

26. பரஞ்சோதி முனிவர் – 'திருவிளையாடற் புராணம்'
முருகவேல் புத்தகசாலை,
இராயப்பேட்டை,
சென்னை.
முதற்பதிப்பு – 1937.

27. பிள்ளை.கே.கே. – 'தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்'
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை.
நான்காம் பதிப்பு – 1984.

28. மகாமகோபாத்தியாயர் – 'டாக்டர்.உ.வே.சா. அவர்களின் உரைநடை நூல்கள்' (3 ஆம் தொகுதி)
உ.வே.சா. நூல்நிலையம்,
பெசன்ட் நகர்,
சென்னை.
முதற்பதிப்பு – 2005.

29. மாணிக்கம்.அ. (உ.ஆ.) – 'மதுரைக்காஞ்சி'
21, இராமகிருஷ்ணா தெரு,
வர்த்தமானன் பதிப்பகம்,
தியாகராயர் நகர்,
சென்னை–17.

30. மேலது – 'பரிபாடல்'
21, இராமகிருஷ்ணா தெரு,
வர்த்தமானன் பதிப்பகம்,
தியாகராயர் நகர்,
சென்னை–17.

31. மேலது – 'பட்டினப்பாலை'
21, இராமகிருஷ்ணா தெரு,
வர்த்தமானன் பதிப்பகம்,
தியாகராயர் நகர்,
சென்னை–17.

32. மாணிக்கவாசகர் – 'திருவாசகம்'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.

33. வரதராசன்.மு. – 'கல்வி'
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை.

34. வரதராசனார்.மு. – 'திருக்குறள்'
(உ.ஆ.)
பாரி நிலையம்,
184, பிராட்வே, சென்னை.
முதற்பதிப்பு – மே 1959

35. விருத்தாசலம்.பி. – 'நாவலர்.ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள்'
(ப.ஆ.)
நாவலர். ந.மு.வேங்கடசாமி நாட்டார்
கல்வி அறப்பணிக்கழகம்,
தஞ்சாவூர்–7.
முதற்பதிப்பு – 1994.

36. வேங்கடசாமி.மயிலை.சீனி – '19ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்'
(கி.பி. 1800 – 1900)
மெய்யப்பன் தமிழாய்வகம்,
52, புதுத்தெரு,
சிதம்பரம்–1.

37. ஸ்ரீசந்திரன்.ஜெ. – 'சீவகசிந்தாமணி'
(உ.ஆ.)
வர்த்தமானன் பதிப்பகம்,
40, சரோஜினி தெரு,
தியாகராயநகர், சென்னை–17.
முதற்பதிப்பு – 1996.

38. ஜகந்நாதன்.கி.வா. – 'தனிப்பாடல் திரட்டு'
(உ.ஆ.)
திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1963.

39. மேலது, (உ.ஆ.) – 'முத்தொள்ளாயிரம்'
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
நான்காம் பதிப்பு – 1964.

40. ஆசிரியர் பெயர் இல்லை – 'கோவை இளஞ்சேரன்
ஆய்வுக் கட்டுரைகள்'
பதிப்பு இல்லை.

**கட்டுரைகள்**

1. பதிப்பாசிரியர் குழு
'மேகம்'
'ஆர்' கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்பு
(ஆறாவது பன்னாட்டுக் கருத்தரங்கம்)
'ஆர்' அனைத்திந்திய ஆராய்ச்சிக் கழகம் வெளியீடு,
அமைந்தகரை, சென்னை–29.

2. பதிப்பாசிரியர் குழு
செம்மொழி நோக்கில் எட்டுத்தொகைச் சிந்தனைகள்
(தொகுதி 2)
தொல் இளமுருகு பதிப்பகம்,
புதுச்சேரி – 605 004.

3. பதிப்பாசிரியர் குழு,
வளர்தமிழ் ஆய்வுக்கோவை 2008,
வளர்தமிழ் ஆய்வு மன்றம்,
திண்டுக்கல்.

**அகராதி**

1. *கௌமாரீஸ்வரி.எஸ். . தமிழ்மொழி அகராதி*
   *(ப.ஆ.) (நா.கதிரைவேற்பிள்ளை)*
   *ஆறாம் பதிப்பு – சனவரி 2011*
   *செம்பதிப்பு, சாரதா பதிப்பகம்,*
   *ராயப்பேட்டை, சென்னை–14.*

**கலைச்சொல் அகராதிகள்**

1. *சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்,*
   *தொகுதி 1*
   *உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.*

2. *வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி 2),*
   *தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,*
   *தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் – 8*

**ஆய்வேடு**

1. *க.கனகலட்சுமி*
   *நன்னூலாரின் கல்விச் சிந்தனைகள்*
   *ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு,*
   *மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்,*
   *மதுரை – 21*
   *சூன் – 2009.*

**இதழ்**

1. *த சண்டே இந்தியன் – ஆசிரியர் அரிந்தம் சவுத்ரி*
   II *பி.எம். டவர்ஸ், 145, மார்ஷல் ரோடு,*
   *எழும்பூர், சென்னை–8.*

## அட்டவணை - 1

## இலக்கண நூல்களில் ஆசிரியர், மாணாக்கர் பற்றிப் பதிவு செய்துள்ள நூல்களும் பாடல் எண்களும்

| வ.எண். | இலக்கியம் | ஆசிரியர் | மாணாக்கர் | ஆசிரியர், மாணாக்கர்–பொது |
| --- | --- | --- | --- | --- |
| *1.* | தொல்காப்பியம் | *மரபியல் 112* | – | பாயிரம் |
| *2.* | நன்னூல். | *எழுத்து. 25 – 35* | *எழுத்து. 36 – 46* | |

## அட்டவணை - 2
## சங்க இலக்கியங்களில் ஆசிரியர் மாணாக்கர் பற்றிப் பதிவு செய்துள்ள இலக்கியங்களும் பாடல் எண்களும்

| வ.எண். | இலக்கியம் | ஆசிரியர் | மாணாக்கர் | ஆசிரியர், மாணாக்கர்–பொது |
|---|---|---|---|---|
| 1. | நற்றிணை | – | – | – |
| 2. | குறுந்தொகை | – | 33 | – |
| 3. | ஐங்குறுநூறு | – | – | – |
| 4. | கலித்தொகை | – | – | 149 |
| 5. | அகநானூறு | – | – | – |
| 6. | புறநானூறு | 183 | – | – |
| 7. | பதிற்றுப்பத்து | – | – | – |
| 8. | பரிபாடல் | – | – | – |

| | | | | |
|---|---|---|---|---|
| 9. | திருமுருகாற்றுப்படை | – | – | – |
| 10. | பொருநராற்றுப்படை | – | – | – |
| 11. | சிறுபாணாற்றுப்படை | – | – | – |
| 12. | பெரும்பாணாற்றுப்படை | – | – | – |
| 13. | முல்லைப்பாட்டு | – | – | – |
| 14. | மதுரைக்காஞ்சி | – | – | – |
| 15. | நெடுநெல்வாடை | – | – | – |
| 16. | குறிஞ்சிப்பாட்டு | – | – | – |
| 17. | பட்டினப்பாலை | – | – | – |
| 18. | மலைபடுகடாம் | – | – | – |

## அட்டவணை-3
## பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஆசிரியர் மாணாக்கர் பற்றிப் பதிவு செய்துள்ள இலக்கியங்களும் பாடல் எண்களும்

| வ.எண். | இலக்கியம் | ஆசிரியர் | மாணாக்கர் | ஆசிரியர், மாணாக்கர்–பொது |
|---|---|---|---|---|
| 1. | திருக்குறள் | *415, 922* | *395, 414* | *939* |
| 2. | நாலடியார் | *312, 313, 318* | *258, 314, 352* | – |
| 3. | பழமொழி | *7* | *4* | – |
| 4. | நான்மணிக்கடிகை | *45* | *81* | – |
| 5. | இன்னாநாற்பது | – | – | – |
| 6. | இனியவைநாற்பது | – | – | – |
| 7. | திரிகடுகம் | *10, 46* | – | – |
| 8. | ஆசாரக்கோவை | *47, 76* | *16, 62, 73, 74, 75, 80, 93,94* | *86* |
| 9. | சிறுபஞ்சமூலம் | – | *5, 30* | *29, 34* |

| | | | | |
|---|---|---|---|---|
| 10. | ஏலாதி | 75 | 63 | – |
| 11. | முதுமொழிக்காஞ்சி | – | 3<br>தண்டாப்பத்து | – |
| 12. | ஐந்திணை ஐம்பது | – | – | – |
| 13. | திணைமொழி ஐம்பது | – | – | – |
| 14. | ஐந்திணை எழுபது | – | – | – |
| 15. | திணைமாலை<br>நூற்றைம்பது | – | – | – |
| 16. | கைந்நிலை | – | – | – |
| 17. | கார்நாற்பது | – | – | – |
| 18. | களவழி நாற்பது | – | – | – |

## அட்டவணை - 4

## பிற்கால நீதி நூல்களில் ஆசிரியர் மாணாக்கர் பற்றிப் பதிவு செய்துள்ள இலக்கியங்களும் பாடல் எண்களும்

| வ.எண். | இலக்கியம் | ஆசிரியர் | மாணாக்கர் | ஆசிரியர், மாணாக்கர்–பொது |
|---|---|---|---|---|
| 1. | ஆத்திச்சூடி | – | 7 | – |
| 2. | கொன்றைவேந்தன் | – | 50 | – |
| 3. | மூதுரை | – | – | – |
| 4. | நல்வழி | – | – | – |
| 5. | அறநெறிச்சாரம் | 4,5,54,61,184 | 61 | 6, 7 |
| 6. | அருங்கலச்செப்பு | – | – | – |
| 7. | வெற்றிவேற்கை | 1, 14 | 7, 35 | 2 |
| 8. | நீதிநெறி விளக்கம் (குமரகுருபரர்) | 22, 15 | – | – |

| | | | | |
|---|---|---|---|---|
| 9. | நீதிநெறி விளக்கம் (சிவப்பிரகாசர்) | – | – | – |
| 10. | உலகநீதி | – | 6, 11 | – |
| 11. | நன்னெறி | – | – | – |
| 12. | நீதிநூல் | அதி.5–2,4,6,7,8<br>அதி.6–1–7,9<br>அதி.7–1,9,10 | – | அதி.5–1, 3, 5 |
| 13. | விவேகசிந்தாமணி | 2, 7 | 1, 65, 68 | 36, 61, 73, 77 |